# சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்

சென்னை

மஹாமஹோபாத்தியாய

## உ. வே. சாமிநாதையரவர்கள்

சென்னை ஸர்வகலாசங்கத்தார் விரும்பியபடி செய்த

ந்யாசம்.



இது

சென்னை

ஆனந்தா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப் பெற்றது.

1929

விலை ரூபாய் 1.

# சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்

சென்னை

மஹாமஹோபாத்தியாய

உ. வே. சாமிநாதையரவர்கள்

சென்னை ஸர்வ கலாசங்கத்தார் விரும்பியபடி செய்த

ந்யாசம்.



இது

சென்னை

ஆனந்தா அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1929

விலை ரூபாய் 1.

# முகவுரை.

சங்கநூல்கள் முகமாகத் தெரியக்கூடிய சில விஷயங்களைப்பற்றிப் பத்து உபந்யாசங்கள் செய்யவேண்டுமென்று சென்னை ஸர்வகலாசங்கத்தார் 1926-ஆம் வருஷத்தில் எனக்குத் தெரிவித்தார்கள். தேக அசௌக்யம் முதலிய காரணங்களால் அதனை ஏற்றுக்கொள்ள எனக்கு அப்போது தைரியம் உண்டாகவில்லை, ஆனால் அவர்கள் பேரன்புடன் வற்புறுத்தினமையால் மறுத்தற்கு அஞ்சித் தெரிந்த சில விஷயங்களைச் சொல்ல ஒப்புக்கொண்டேன். உபந்யசிக்கப்படும்போது உபந்யாசங்கள் பின்பு புத்தகரூபமாக வெளிவருமென்பது எனக்குத் தெரியாது. அவை முடிந்த பின்புதான் அஃது எனக்குத் தெரியவந்தது. பத்தும் 7-11-1927 முதல் 21-12-1927 வரையில் பத்துத் தினங்களிற் செய்யப்பட்டன.

இக்காலத்திலுள்ள நூலாராய்ச்சியாளர்களுக்கும் நுண்ணறிவாளர்களுக்கும் தெரியாத விஷயங்கள் இவ்வுபந்யாசங்களிற் பெரும்பாலும் இரா. இளமை தொடங்கி நான் ஆராய்ந்துவந்த சங்கநூல்களாலும் பிறநூல்களாலும் கேள்வியாலும் அநுபவத்தாலும் தெரிந்துகொண்ட சில விஷயங்களே இவற்றிற் காணப்படுமேயல்லாமல் நூதனமான விஷயமொன்றும் இராது. உபந்யாசத்துக்காகக் குறிப்பிட்ட காலம் போதியதாக இல்லாமையாற் சொல்லவேண்டிய முக்கியமான விஷயங்கள் சொல்லப்படாமலும் சில விஷயங்கள் முன்பின்னாக மாறியும் இருத்தல் கூடும். உபந்யாசங்கள் ஒன்றோடொன்று சம்பந்தமுள்ளவைகளாக இருத்தலால் ஒன்றிற் சொல்லப்பட வேண்டியவை மற்றொன்றில் வந்திருக்கலாம். ஓரிடத்திற் கண்ட சில வரலாறுகள் சில பயன் கருதி மற்றோரிடத்திலும் சொல்லப்பட்டிருக்கும். அவ்வப்போது சுதேசமித்திரனில் வெளிவந்த பகுதிகளையும் என்கையிலிருந்த உபந்யாசக் குறிப்புக்களையும் ஆதாரமாக வைத்துக்கொண்டு இப்புத்தகம் சித்தம் செய்யப்பட்டது. சில விஷயங்கள் விரிவாகவும் சில சுருக்கமாகவும் காணப்படலாம். அவற்றை விவேகிகள் பொறுத்துக்கொள்வார்களென்று நம்புகிறேன்.

என்னை ஒருபொருட்படுத்தி உபந்யசிக்கும்படிசெய்த ஸர்வகலாசாலை உப அத்யக்ஷகருக்கும் மற்ற அங்கத்தினர்களுக்கும் நான் உபந்யாசங்கள் செய்தபோது மிக்க பொறுமையோடும் அன்போடும் வந்திருந்து கேட்டு எனக்கு ஊக்கமளித்த கனவான்களுக்கும் பண்டிதர்களுக்கும் நன்றியைச் செலுத்துகின்றேன்.

சென்னை,
16-12-29.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 22 | குரவா | குரவர் |
| 21 | 4 | பெருங்குளம | பெரியகுளம் |
| 22 | 13 | முதலிய நூலகள் | முதலியவைகள் |
| 25 | 18 | சுபபராயசாரியா | சுபபராயாசாரியா |
| 29 | 14 | மிகக | மிக |
| 32 | 12 | வகைமையால் | வகைமையால்— |
| ,, | 31 | பட்டுப் | பட்டும |
| 35 | 30 | அக்கசசி | அகக்கைச்சி |
| 36 | 4-5 | ஏற்றுவித்த வம் | ஏற்றுவித தம் |
| 45 | 8 | பாடுவோர்கது | பாடுமகளிரக்கு |
| 46 | 28 | விலகுதலை | விலகுதற்கு |
| 49 | 24 | வொருகிற | வொருதிற |
| ,, | 31 | மரபினரு | மரபினர் |
| 67 | 28 | படையிற் | படைமுதலியவற்றிற் |
| 82 | 12 | கோணை | கோனை |
| 88 | 24 | வாய்நத | வாய்ந்த |
| 97 | 21 | பட்டு நிலை | பட்டுபபின்னை நிற்குநிலை |
| 101 | 7 | என்றும வந்துள்ள செய் யுட்கள் | என்று வந்துள்ள செய்யுள் |
| ,, | ,, | தககன | தககது |
| 125 | 10 | நீக்கியவா | நீககிய நால்வர் |

கணபதி துணை.

சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.

# I. தமிழ்ச்சங்கம்.

## கடவுள் வணக்கம்.

ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.

## பாண்டி நாட்டு வணக்கம்.

ஆவியன் தென்றல் வெற்பி னகத்தியன் விரும்புந் தென்பா
னாவலந் தீவம் போற்றி நாவலந் தீவர் தன்னுண்
மூவாகட் கரியா னிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப்
பாவலர் வீற்றி ருக்கும் பாண்டிநன் னாடு போற்றி.

## முன்னுரை.

கனவான்களே, பண்டிதர்களே,

மதுரையம்பதியிற் பண்டைக் காலத்திருந்த தமிழ்ச்சங்கத்தைப் பற்றிப் பேசும்படி சென்னைச் சர்வகலாசாலைச் சங்கத்தார் அன்பு வைத்து எனக்குச் சொன்ன விஷயத்தில் மிகவும் நன்றி பாராட்டுகின்றேன்.

நாற்பது அல்லது ஐம்பது வருடங்களுக்கு முன்பு இதைப்பற்றிப் பேசுவதென்றால் கஷ்டசாத்தியமாகவே இருந்திருக்கும்; அக்காலத்தவர்களிற் பெரும்பாலார் அரிய பழைய செய்யுட்களைப் பழைய இலக்கணவுரைகளிற் கண்டாலும் யாரேனும் சொல்லக் கேட்டாலும் அவை சங்கச் செய்யுளென்று மட்டுஞ்சொல்லி அவற்றின் நடையைப்பற்றி இன்புறுவார்களேயன்றி அவை இன்ன நூலிலுள்ளனவென்றாவது இன்னார் பாடியவையென்றாவது சொல்ல அவர்களுக்கு இயலாமலே யிருந்தது. அவர்களிற் பரம்பரையாகப் பாடங்கேட்டு வந்த சிலராலே மட்டும் அவற்றிற்குப் பொருள் தெரிய வந்ததுண்டு. அவர்களுக்கும் சங்க இலக்கியங்களில் மிக்க அன்புமாத்திரமிருந்ததேயன்றி, அவற்றை

முயன்று தேடவேண்டும், எங்கேயாவது பெற்றுப் படித்துப் பார்க்க வேண்டுமென்னும் எண்ணம் பெரும்பாலும் உண்டாகவில்லை; ஆனாலும் மதசம்பந்தமுள்ள பலவகையான நல்ல இலக்கியங்களையும் அதற்குரிய சாஸ்திரங்களையும் முறையே தக்காரிடம் பாடங் கேட்டும் தாமே ஆராய்ந்துழைத்துப் பயின்றும் மாணாக்கர்களுக்குப் பாடஞ்சொல்லியும் இன்புற்றுத் தமிழ்ப் பாஷையைப் பரிபாலித்து வந்தார்கள். இக்காலத்திலோ சங்கச் செய்யுட்களையும் அவற்றை இயற்றிய புலவர்களுடைய வரலாறுகளையும் பற்றி மிகவும் தாராளமாகப் பேசுதலும் அவற்றின் அருமைகளைப் பாராட்டுதலும் பழைய தமிழ்நூல்கள் எங்கேயுள்ளனவென்று தேடுதலும் அவற்றைப் பதிப்பிக்க முயலுதலும் தமிழ்ப் பண்டிதர்களிடத்தும் மாணாக்கரிடத்தும் வேறுசிலரிடத்தும் பெரும்பாலும் காணப்படுகின்றன; அவற்றிற்குக் காரணம் இக்காலத்தவர்களுடைய பூர்வஜன்ம புண்ணியமென்றே சொல்லவேண்டும். இந்த நிலைமையைக் குறித்து ஒருவகையாக மெத்த மகிழ்ச்சியடைகிறேன்.

பழைய தமிழ் நூல்களும் அவற்றிலுள்ள சரித்திரங்களும் எங்கும் பல்குதலுற்று விளங்கும் இக்காலத்தில் அவற்றைக் கற்றவர்கள் குழுமியிருக்கும் இச்சபையில் பேசுவதற்கு மனம் மிகவும் அஞ்சுகின்றது. அதற்குக் காரணம் என்னுடைய முதுமையும் அதனாலுண்டாகிய அறிவின் மெலிவும் மறதியும் வேறு நோக்கமுமே. அவை இப்பொழுது எதிர்த்து என்னோடு மிகவும் போராடுகின்றன. அவற்றை வெல்லும் ஆற்றல் எனக்கு ஒரு சிறிதும் இல்லை. இராமருக்கு முடிசூட்ட விரும்பிய தசரதர் அவரை நோக்கிச் சொன்னதாகக் கம்பர் பாடியிருக்கும் அருமைச் செய்யுளொன்றை இந்தச் சமயத்தில் இங்கே தெரிவியாமலிருக்க முடியவில்லை; அதாவது

"ஒருத்தலைப்பரத் தொருத்தலைப் பங்குவி னூர்தி
யெருத்தி னீங்குகின் றியல்வரக் குழைந்திட ருழக்கும்
வருத்த நீங்கியவ் வரம்பறு திருவினை மருவும்
அருத்தி யுண்டெனக் கையவீ தருளிட வேண்டும்"

என்பது.

ஆதலால், நான்பேசுங்காலத்தில் மேற்கூறிய காரணங்களால் பல தவறுகள் இடையிடையே நிகழ்தல் கூடும். அத்தவறுகளை இந்தச்சபையோர் பொறுத்து விஷயத்தை மட்டும் அங்கீகரிக்க வேண்டுகின்றேன்.

"செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்"

என்னும் **பெரியபுராண** அவையடக்கச் செய்யுள் இப்பொழுது எனக்கு மிக்க ஊக்கத்தை உண்டுபண்ணுகின்றது.

## தமிழென்னும் பெயர்.

இந்தப் பாஷையின் பெயராகிய தமிழென்பது திராவிட மென்ற சொல்லின் சிதைவென்று ஒரு சாரார் கூறுவர். அது சிலருக்கு உடன்பாடன்று, ஒரு பாஷைக்கு உரிய பெயர் அது தோன்றும் போதே உடன் தோன்றியிருக்க வேண்டுமென்பது முறையன்றோ? வேறு பாஷைக்குரியார் இதனைத் தாம் வழங்குதற்கு இட்ட பெயராகத் திராவிட மென்பதைக் கொள்ளவேண்டுமென்றே சிலர் எண்ணுகிறார்கள். இம்மொழி தன்பாலுள்ள நால்வகை எழுத்துக்களால் ஆக்கப்பெற்ற 'தமிழ்' என்னும் பெயரைத் தனக்கு இயற்பெயராகக் கொண்டிருத்தலும் இதன் உண்மையைப் புலப்படுத்துகின்றது. நால்வகை யெழுத்துக்களாவன: உயிர், வல்லினம், மெல்லினம், இடையினமென்பன. தமிழென்பதற்கு இனிமையென்றும் பொருளுண்டு. அதுபற்றித் தமிழென்பதைக் காரணப்பெயராகக் கொள்ளுதலும் பொருந்தும்,

**"ஊறு மின்றமிழ்", "தமிழ் தழிய சாயல்", "தமிழெனு மினிய தீஞ்சொற் றையல்"**

என்னும் பெரியோர் பாடல்கள் இக்கருத்தை வலியுறுத்துகின்றன. தத்தம் அனுபவங்களைச் சொல்லுதல் ஒவ்வொருவருக்கும் இயற்கையாதலால் இது விஷயத்தில் யாரும் குறைகூறாரென்று எண்ணுகிறேன்.

## தமிழாசிரியர்.

**"ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகன்"**

**"தழற்பொலி விழிக்கடவு டந்ததமிழ்"**

**"இருமொழிக்கும் கண்ணுதலார் முதற்குரவர்"**

**"விடையுகைத் தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொழிக் குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமுறுத் தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன் மடமகள்"**

என்பவற்றாலும் வேறுள்ள ஆதாரங்களாலும் இம்மொழிக்குப் பரமாசாரியர் பரமசிவனென்று தெரிகிறது, அதற்கேற்பத் தமிழ்நெடுங்கணக்கின் முதலில் **பஞ்சாட்சரமே** பண்டைக்காலத்தில் சுவடிகளிலெழுதிக் கற்பிக்கப்பட்டு வந்தது. தமிழின் சம்பந்தமான வேறு பாஷைகளிலுள்ள நெடுங்கணக்குக்களின் முதலிலும் பஞ்சாட்சரமே இக்காலத்திற் கற்பிக்கப்பட்டுவருகின்ற தென்றுங் கேட்டிருக்கிறேன்.

பரமசிவனுடைய கூறாகிய முருகக்கடவுளை அகத்திய முனிவருக்குச் செந்தமிழறிவுறுத்திய ஆசிரியராகவும் சில பெரியோர் கூறியிருக்

" சிவனெனிகா பொதியவரை முனிவனக மகிழவிரு
செவிகுளிர வினியதமிழ் பகர்வோனே."
" குறுமுனிக்கு தமிழுரைக்கும் குமர." [முகக்கடவுள்."
" அகத்தியனுக்குத் தமிழை யறிவுறுத்த செந்தமிழ்ப்பரமாசாரியனாகிய அறு

## தமிழின் தெய்வத்தன்மை.

தமிழ் தென்னாட்டிலும் ஸம்ஸ்கிருதம் வடநாட்டிலும் மிகுதியாக வழங்குதலபற்றி இவ்விரு மொழிகடகும் முறையே தென்மொழி வடமொழி யென்பவை காரணப் பெயர்களாய் வழங்கலாயின. இவ்விரண்டையும் தெய்வவடிவமாகப் பாராட்டுதலுமுண்டு. அஃது,

" ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய் "
" செந்தமிழோடாரியனை "
" தமிழ்சசொலும் வடசொலுந் தாணிழற்சேர "

என்னும் தேவாரங்களாலும்,

" தென்றமிழை வடமொழியை "

என்னும் திவ்ய ப்ரபந்தத்தாலும்,

" கண்ணிகர் மெய்யுஞ் சென்னிக் கணமுற ழினத்தின் கூறுந்
திண்ணிய புயங்க ளோபோற் றிகழ்தரு முயிரும் வேறொன்
றெண்ணிடற் கரிய தாகு மெஃகமு மியலிற் காட்டும்
புண்ணிய முனிகோன் செவவேள் பொற்பதத தடிமை தானே "

என்பதனாலும் விளங்கும்.

தமிழ்ப்பாடல்களின் சுவை தெய்வங்களாலும் விரும்பப்பட்டதென்றும் பெரியோர்கள் பாடியிருக்கிறார்கள்;

" தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்ற வடாதகா தேவியென் றொருபேர்
தாங்கிவந் ததுவுந் தனிமுத லொருநீ சௌந்தர மாறனா னதுவும்
குமரவேள் வழுதி யுககிர னெனப்போ கொண்டதுந் தண்டமிழ்ப் பெருமை
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனினிக் கொழிதமிழ்ப் பெருமையா
[றிவார் "
" பாதஞ் சிவக்கப் பசுந்தமிழ் வேண்டிப் பரவைதன் பாற்றூதன்று சென்றவர் "
" ஸ்பந்தமிழ்ப் பின்சென்ற பசசைப் பசுங்கொண்டலே "

என்பன முதலியவற்றால இது விளங்கும். பின்னும் தமிழின் ஆற்றலைப் புலப்படுத்து வனவாக அங்கங்கே வழங்கும் வேறு சரிததிரங்களும்

# சங்கம்.

சங்கமென்பதற்குப் பொருள் புலவர் கூட்டமென்பது; தமிழ் நாட்டிலுள்ள தலைநகரங்கள் சிலவற்றிலும் அங்கங்கேயுள்ள சிற்றூர்கள் பலவற்றிலும் தமிழ்ப்புலவர்களின் கூட்டங்கள் இப்பெயரோடு பண்டைக் காலத்தில் இருந்தனவென்று தெரிந்தாலும் மதுரையிலிருந்த கூட்டத்திற்கே இஃது இயற்பெயராக இருவகை வழக்குகளிலும் காணப்படுகின்றது. சிவபெருமான் திருமால் முருகக்கடவுள் முதலிய தெய்வங்களாலும் பெரியோர்களாலும் தெய்வத்தன்மை வாய்ந்த பாண்டிய அரசர்களாலும் மிக்க செவ்வையாகப் பரிபாலிக்கப்பட்டு வந்தமையே இதற்குக் காரணமென்று சொல்லலாம்.

சேரசோழ பரம்பரையார் பலருடைய சம்பந்தமும் ஆதரிப்பும் இதற்கு இருந்தாலும் பாண்டியர்களே இதைத் தாபித்தும் பரம்பரையாகப் பரிபாலித்தும் வந்தார்கள்.

சங்கத்தைப் பற்றிக் கூறும் பண்டைச் சரித்திரங்கள் முதற் சங்கத்தையும் இடைச் சங்கத்தையுங் கூடப் பாண்டியர்களே தாபித்து ஆதரித்து வந்தார்களென்று தெரிவிக்கின்றன.

தமிழ்ச் சங்க காலத்தைப் பற்றிய வரலாறுகளும் பிறவும் தமிழிலும் ஆங்கிலத்திலும் சில கல்விமான்களாற் சுருக்கமாகவும் பெருக்கமாகவும் எழுதி மிக்க செவ்வனே அச்சிடப்பெற்று இக்காலத்தில் வழங்கி வருதலின் அவற்றைப் பற்றி நான் பேசுதல் மிகையாகும். ஆதலால், முக்கியமான சில பழைய செய்திகளை மட்டும் சொல்லுவேன்.

## முதலிடைச் சங்கங்கள்.

முதல் இடை கடையென்ற தமிழ்ச் சங்கங்கள் மூன்று இருந்தனவென்பது **இறையனாரகப் பொருளுரையா**லும் **சிலப்பதிகாரவுரை** முதலியவற்றாலும் வேறுபல நூல்களாலும் தனிப்பாடல்களாலும் தெரிகின்றது. முதலிரண்டு சங்கங்களிலிருந்தார் சிலருடைய பெயரும் அவர்களால் அக்காலத்திற் செய்யப்பட்டனவென்று கூறப்படும் சில நூல்களின் பெயர்களுமே இக்காலத்தில் தெரியவருகின்றன. அவற்றிலுள்ள சில செய்யுட்களும் சில இலக்கண நூற் சூத்திரங்களும் வழங்கி வருகின்றன: **பெருங்கதை** அல்லது **உதயணன் கதையை** இயற்றிய '**கொங்குவேள்**' என்பவருடைய தமிழ்க் கல்வியின் பெருமையைத் தெரிவிக்கவந்த **அடியார்க்குநல்லாரென்பவர்** சிலப்பதிகாரவுரைப்பாயிரத்தில்,

"இரண்டாம ஊழியதாகிய கபாடபுரத்தில் இடைசசங்கத்துத் தொல்காபபியம புலபபடுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தருதிருவிற் பாண்டியனவைக்களதது அகத்தியனுரும தொல்காபபியனுரும சிறுபாண்டரங்கனுரும மதுரை யாசிரியன் மாறனுரும துவரைககோமானும கீரந்தையாரு மென்றித தொடக்கததா ஐம்பத்தொன்பதின்மா உள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவா தமமாற் பாடபபட்ட கலியும குருகும வெண்டாளியு முதலிய செய்யுளிலககிய மாராய்ந்து செய்த **உதயணன் கதை** யுள்ளும" என்றெழுதி யிருபபதை நோககுகையில் அக **கொங்குவேள்** காலததில் இடைச சங்க நூல்களிற் சில இருந்தன வென்பதும அவை அவராலும அக்காலததிலிருநத ஏனையோராலும் ஆராயப பெற்று வந்தன வென்பதும தெரிகின்றன. அவை கொங்கு வேளிரால் ஆராயப் பெற்றதற்கு மேற்கூறிய உதயணன கதையிற் காணபபடும சில அரும் பதங்களுக்கும இனிய வாககியங்களுக்கும் அரிய பழைய நூல்களின் கருத்துக்களுககும இக்காலதது வழங்கிவரும கடைசசங்க நூல் முதலியவற்றில் ஆதாரம இலையாமையே தககசாடசியாகும். விளங்காத அப பழைய நூற்கருததுக்கள **பெருங்கதை**யில் இன்ன பககங்களிலுள்ளன வென்பது ஷை நூல அசசுபபுததகததின் முகவுரையால விளங்கும்.

கடல கொள்ளபபட்ட முதலூழி இறுதிககண் தென்மதுரையில் முதற் சங்க மிருநததென்றும இடைசசங்கம இரண்டாமூழியில கபாடபுரத்தில் இருநததென்றும உததர மதுரையில அதாவது இபபோதுள்ள மதுரையில கடைச சங்கமிருநததென்றும பழைய ஆசிரியர்கள் தத்தம் நூல்கள் முகமாகவும உரைகள முகமாகவும தெரிவித்திருககிறார்கள்.

இடைசசங்க மிருநத கபாடபுரம **வான்மீகத்தி**லும குறிபபிடபபட்டிருக்கிறது. சீதையைததேடிச செலல வேண்டிய வழியைச சுககிரீவன் வானரர்களுககுச சொன்னபோது, "தெனறிசையிற் **கபாடபுரத்தைக்** காண்பீர்கள்" என்று சொன்னதாகக **கிஷ்கிந்தா காண்டம்,** 47-ஆவது சருககம, 19-ஆவது சுலோகததிற காணபபடுகிறது.

"காத்துஞ் சிரத்தை களிககுங களிறுடைக் கண்டன்வந்தா
னிரத்தும் கபாட மினித்திறப் பாய்பண் டிவணணக்கே
உரத்துஞ் சாத்தும் கபாடந திறந்திட்ட துண்டிலங்கா
புரததும் கபாட புரத்துங்கல் யாண புரத்திலுமே"

என்னும் **ஒட்டக்கூத்தர்** செய்யுளாலும கபாடபுரமென ஒன்றிருந்ததென்பதை யறியலாம்.

அவ்வச சங்கங்களில் இருநத புலவர்களுடைய பெயர்கள், இயற்றிய நூற் பெயர்கள், ஆராய்நத நூற்பெயாகள், ஆதரித்த அரசர் பெயர்

கள், சங்கப் புலவர் பெயர்கள், நூலாராய்ந்த காலம் முதலியனவும் பிற வும் **இறையனாரகப்பொருளுரை, சிலப்பதிகாரவுரை** முதலியவற்றால் தெரியலாகும்.

## அகத்தியமுனிவர்.

முதலிரண்டு சங்கங்களிலும **அகத்திய முனிவர்** இருந்து தமிழா ராய்ந்தனரென்று தெரிகின்றது. அவர் வடகேயிருந்து தென்னாட் டிற்கு வரும போது, "தென்னாடு தமிழ் வழங்கும் தேயமானமையின் அங்கே யுள்ளவர்களோடு பழகுமாறு எனக்குத் தமிழிலக்கணத்தைக் கற்பித்தருளல் வேண்டும" என்று வேண்டிப பரமசிவன்பால் அதனைப் பெற்று இந்நாட்டிற்கு வந்து இங்கேயுள்ள வழக்க முதலியவற்றை யறிந்து இலக்கணம் இயற்றினா.

" ஆதரஞ்சேர் குறுமுனியு மெனையொன் றூக்கி
யருள்செய்தா யருள்செய்த படியே செய்வ
லோதருந்தென் பூமிதமிழ்ப் பூமியென்பா
ரொண்டமிழிற் குரியவெலா மடிமைக் கிங்கே
போதமுற வறிவித்தல் வேண்டு மென்று
போற்றுங்கா லெழுத்துசசொற் பொருண்முன் னான
நீதியுடைச் சூததிரங்க ளறியும் வண்ணம
நெறியின்க ணறிவித்தாய் நேசங் கூாந்தே "

(பழைய திருவிளையாடல்)

என்பது முதலியவற்றால இது விளங்கும.

" தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளாந்தகொடி "

என்றதனாலும அகத்தியா தமிழ் நாட்டிற்கு வருவதற்கு முன்னமேயே அந்நாட்டில இருந்ததமிழின தொனமை விளங்கும.

அகத்திய முனிவா செய்த இலக்கணம **அகத்தியம்**; அஃது இயல், இசை, நாடக மென்னு மூன்றிலக்கணங்களை யுடையது; அது மூன்று சங்கத்தாாகளுக்கும இலக்கணமாயமைந்து பல புலவாகளாலும பெரி தும் போற்றப்பட்டு முதனூலாகவும எண்ணப்பட்டு வந்தது. இது, "வினையினீங்கி" (**தொல்காப்பியம்,** மரபியல, சூததிரம், 94) என்னுஞ் சூத்திர உரையாலும்,

" வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக் காகென
வானோ ரேத்தும் வாய்மொழிப் பலபுகழ்
ஆனாப் பெருமை அகத்திய னென்னு
மருந்தவ முனிவ னாக்கிய முதனூல் "

என்னும் **பன்னிரு படலப்** பாயிரத்தாலும புலனாகின்றது.

அகத்திய முனிவரிடம் முத்தமிழ் பயின்ற மாணாக்கர்களுள் இயற்றமிழிலக்கணமியற்றினவர்கள் தொல்காப்பியர் முதலிய பன்னிருவரென்பர்;

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும்" (சிறப்புப் பாயிரம்)

என்பது **புறப்பொருள் வெண்பாமாலை.**

இசைத்தமிழிலக்கணமியற்றியவர்கள் சிகண்டி முதலியோர். நாடகத்தமிழிலக்கண மியற்றியவர்கள் முறுவல், சயந்தம முதலிய நூலுடையோர். இயற்றமிழ் நூல்களுள் அவிநய மென்பது தொல்காப்பியத்திற்கு முந்திய தென்றும், **தண்டலங் கிழவன் இராச பவித்திரப் பல்லவதரையன்** என்பவரால் அதற்கு மிகச்சிறந்ததோருரை செய்யப்பட்டிருந்ததென்றும் **நன்னூல் மயிலைநாத** ருரை தெரிவிக்கின்றது.

முத்தமிழிலக்கணங்களையும் இந்நாட்டிற் பரவச்செய்த பெரும் பாடுபற்றியே பல மதத்தினரும் தமிழாசிரியராக **அகத்தியரை** மிகப் பாராட்டியிருக்கின்றனர்;

"தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்"
"தழற்பொலி விழிக்கடவுள் தந்ததமிழ் தந்தான்"
"தமிழ் மாமுனி" (கம்பராமாயணம்)

"தேனூர் கமழ்தொங்கல் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்
கானூர் மலயத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்" (காரிகை)

"ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழ்" (வீரசோழியம்)

"பூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி"
(தண்டியலங்காரவுரை மேற்கோள்)

"அகத்தியன் பயந்த செஞ்சொ லாரணங்கு"
(வில்லிபுத்தூராழ்வார் பாரதம்)

மேற் கூறியவற்றுள் காரிகை யாசிரியர் சைனர்; வீரசோழிய ஆசிரியர் பௌத்தர். இங்ஙனம் அகத்தியர் பாராட்டப் பெற்றிருத்தலை இன்னும் எத்தனையோ விடங்களிற் காணலாகும்.

இவர் வருவதற்கு முன்னமே இந்நாட்டிலிருந்த தமிழையும் அதனிலக்கணத்தையும் இவர் தந்தாரென்று கூறியிருப்பது உபசாரவழக்கு; இங்ஙனம் கூறியிருத்தற்குக் காரணம் தமிழ்ப் பாஷைக்கு அக்காலத்தி

விருந்த ஒரு மெலிவைப் போக்கி இவர் இலக்கணஞ் செய்ததும், மாணாக்கர்களுக்குப் பாடஞ் சொல்லிப் பாதுகாத்ததுமையுமே.

பிரமாஸ்திரத்தால் தங்களுக்கு நேர்ந்திருந்த ஆபத்தைச் சஞ்சீவி கொணர்ந்து நீக்கிய அனுமானை நோக்கி இராமர், "இன்று நாங்கள் உன்வயிற்றிற் பிறந்தோம்" என்று கூறினதை போலவது இது.

அகத்தியரால் தரப்பட்டுத் தமிழ் வளர்ந்ததைப் புலவர்கள் அழகாக வருணித்திருக்கிறார்கள்.

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்கடியு—மாங்கவற்றுண்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

'ஓங்கல்' என்றது பொதியில் மலையை; இச்செய்யுள் சூரியனுக்கும் தமிழுக்குஞ் சிலேடை.

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வையை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்."

இந்தச் செய்யுளில் தமிழை ஒரு குழந்தையாக உருவகித்து அழகாக அதன் வளர்ச்சியை முறையே காட்டியிருப்பது அறிந்து இன்புறத்தக்கது. பொருப்பிலே பிறந்தமை அகத்தியமுனிவர் தமிழாசிரியரென்பதைக் குறிப்பிடும். தென்னன் புகழிலே கிடந்தது பாண்டியமன்னர்கள் தமிழைப் போற்றிவந்தமையைக் காட்டும். குழந்தையை வெண்மையாகிய தூய ஆடையிற் கிடத்தல் போல இங்கு வெண்ணிறமாகிய தென்னன் புகழிலே கிடந்தது என்பதிலுள்ள நயம் கவனிக்கத்தக்கது. இருப்பதற்குப் பலகை வேண்டுமாதலால், 'சங்கத் திருப்பிலே யிருந்து' என்றார். வையையேட்டிலே தவழ்ந்தமை ஞானசம்பந்தர் தேவாரத்தை வரைந்தருளி வையையிலிட்ட ஏடு நீரையெதிர்த்துச் சென்றதையும், நெருப்பிலே நின்றமை அவர் தேவாரத்தை யெழுதி நெருப்பிலிட்ட ஏடு வேவாமலிருந்ததையும் அறிவிக்கும்.

இன்னும், பொதியில்மலையில் அகத்தியரால் தாபிக்கப்பெற்ற ஒரு தமிழ்ச்சங்கம் இருந்ததாகவும் தெரிகிறது:

சீதையைத் தேடுதற்குத் தென்றிசையின்கட் செல்லும் வானர வீரர்களை நோக்கி வழிகூறுஞ் சுக்கிரீவன், "பொதியில் மலையில் அகத்திய முனிவருடைய தமிழ்ச்சங்கம் இருக்கின்றது. அங்கே செல்லுவீர்களாயின் தமிழ்ச் சுவையை நீங்கள் நுகர்ந்து அவ்விடத்திலேயே இருப்பீர

கள்; நான் சொல்லிய காரியத்தை மறந்து விடுவீர்கள்" என்று கூறி யதாகக் கம்பர் பாடியிருப்பது இங்கே அறிதற்பாலது:

"தென்றமிழ்நாட் டகன்பொதியிற் றிருமுனிவன் றமிழ்ச்சங்கம் சேர்கிற் பீரே
லென்றுமவ ணுறைவிடமாம்."

(கம்பராமாயணம், நாடவிட்டபடலம், 31.)

## தொல்காப்பியத்தின் பழமை.

"நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் நான் மறை யென்றார். அவை தைத்திரியமும் பௌடிகமும் தலவகாரமும் சாமவேதமுமாம். இனி இருக்கும் யசுவும் சாமமும் அதர்வணமு மென் பாருமுளர். அது பொருந்தாது; இவர் இந்நூல் செய்தபின்னர் வேத வியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோருணாதற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராதலின்" என்று தொல்காப்பியப் பாயிரவுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால் தொல்காப்பியத்தின் பழமை புலப்படும். நச்சினார்க்கினியருக்குத் தமிழிலுள்ள அன்பையும் பயிற்சியை யும் இதனாலறியலாம். அவருடைய உரைப்படி தொல்காப்பியம் வியாசர் வேதத்தைப் பகுத்ததற்கு முன்னரெனின் அதற்கு முதனூலாகிய அகத் தியம் மிகப் பழமையான தென்பதைக் கூற வேண்டுவதில்லை.

## தமிழ் நாட்டின எல்லை.

பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டின் வடவெல்லை கிருஷ்ணா நதியென்று சிற்பசாஸ்திரம் கூறுகிறதென்று கேட்டிருக்கின்றேன். தொல்காப்பியர் காலத்தில் தமிழ்நாடு வேங்கடத்தை வடக்கெல்லையாக வும் குமரியைத் தெற்கெல்லையாகவும் கொண்டிருந்தது.

"வடவேங்கடந் தென் குமரி யாயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து."

(தொல்காப்பியம், பாயிரம்.)

இங்கே கூறியுள்ள குமரி யென்பது அந்நாளிற் பாண்டி நாட்டின் தென் பாகத்தில் உள்ளதோர் ஆறு. தென்பாலிலுள்ள சில நாடுகளைக் கடல் கொண்டபோது அந்நதியும் அழிவுற்றது. பஃறுளி யாற்றிற்கும் குமரி யாற்றிற்கும் இடையிலிருந்த 700 காத அளவுள்ள 49-நாடுகள் அழிவுற் றன வென்று சிலப்பதிகார உரையாசிரியர் தெரிவிக்கிறார். வடக்கெல்லை வடவேங்கடமென்றும் மற்ற மூன்று எல்லைகள் கடலென்றும் சேனாவரைய ஆசிரியரும் சிறுகாக்கைபாடினியாரும் தத்தம சூத்திரங்கள் மூகமாக அறிவித்திருக்கிறார்கள். அவர்கள் காலத்திற்கு முன்பு குமரியாற்றைக் கடல்கொண்டது போலும். அவர்கள் தொல்காப்பியருக்குப் பிற்காலத் தவர்கள்.

குமரிக்கும் பஃறுளியாற்றிற்கும இடையிலிருந்த நாட்டைக் கடல் கொண்டு விட்டமையால், தன் நாட்டுள் இழந்த பாகத்தினளவு பெறுதற்குச் சோழநாட்டெல்லையிலிருந்த முத்தூர்க் கூற்றத்தையும் சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றத்தையும வென்று பெற்றுப பாண்டியன் அரசாண்டானென்று தெரிகிறது. கூற்றம் என்றசொல் சில ஊர்களின் தொகுதியைக குறிப்பதொரு பெயர்.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாசசீர்த் தென்னவன்"
(கலித்தொகை, 104. 1-4)

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல கொள்ள"
(சிலப்பதிகாரம், காடுகாண் காதை, 18-20)

"என்றது: அங்ஙனமாகிய நிலக்குறைக்குச சோழ நாட்டெல்லையிலே முத்தூராக கூற்றமும் சேரமானாட்டுக குண்டூரககூற்றமு மென்னு மிவற்றை இழந்த நாட்டிற்காக வாண்ட தென்னவன்"
(ஷை, ஷை, ஷை, விசேடஉரை.)

இவற்றால், கடலகொண்ட தமிழ் நாட்டின் பாகம தெற்கே மிகுதியாக இல்லையென்று தெரிகிறது.

## மூன்றுஞ்சங்கம்.
## மதுரையின் இடவிசேஷம்.

மூன்றுஞசங்கம மதுரைமாநகரில ஸ்தாபிககபபட்டது. மதுரையென்பதற்கு இனிமையானதென்று பொருள். பரிபாடலில்வந்துள்ள,

"உலக மொருநிறையாத் தானோர் நிறையாப்
புலவா புலக்கோலாற் றூக்க-உலகெலலாந்
தான்வாட வாடாத் தன்மைத்தே தென்னவன்ற
னான்மாடக் கூட னகர்"

என்னும் பகுதியாலும, திருவாலவாயுடையார், திருவிளையாடலில் வந்துள்ள,

"மலரு மித்திரு நாட்டியல் வாணர்சொற் கோலா
னுலக னைத்தையு நிறுப்பமுன் வாடிடா தோங்கு
மலகில் வண்புக ழுடையது மதுரை"

என்னும பகுதியாலும் மதுரை விசேடமுள்ளவிடம், அதாவது கல்வி வளர்ச்சி முதலிய வற்றிற்குரியவிடமென்பதை அறியலாம.

கரிகாற் பெருவளத்தான் ஒரு சமயம் சதுரங்கசேனையுடன் சோழநாட்டிலுள்ள காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து புறப்பட்டுத் திரிசிரபுரம் கடந்து போகையில் ஒரு கோழி வந்து அவன் ஏறியிருந்த யானையின் மத்தகத்தைக்கொத்த அது பின் வாங்கியது. யானையோ பெரிய மிருகம், கோழி சிறியது. ஆயினும் கோழி யானையை எதிர்த்ததையும் யானை பின் வாங்கியதையும் பற்றி அரசன் சிந்தனை செய்து அந்த இடம் வன்மையை அளிக்கவல்லதென்றுணர்ந்து ஒரு நகரங் கண்டு அங்கே உறைவானாயினன். அதையே உறையூர் என்பார். கோழியினால் அந்தவிடம் அறியப்பட்டமையால் உறையூர் கோழியென்றும், கோழியின் மூக்கால் யானை கொத்தப்பெற்றவிடத்திலிருப்பது பற்றி ஆண்டுள்ள சிவஸ்தலம் மூக்கீச்சரமென்றும் வழங்கலாயின. **சிலப்பதிகாரத்**திலும் இச்செய்தி காணப்படுகின்றது.

"முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்"
(நாடுகாண் காதை, 247-8)

(வாரணம்—யானை, கோழி).

இப்படியே அக்காலத்திலிருந்த மன்னர்களும் பிறரும் சிறந்த இடங்களைத் தேர்ந்தெடுத்தே இராசதானி ஏற்படுத்துவதும் கழகம் ஏற்படுத்துவதும் வழக்கமென்று தெரிகிறது. பாண்டியர்களுக்கு வேறு இராசதானிகள் இருந்தும் மதுரையில் சங்கத்தை ஸ்தாபித்தது, இடவிசேடத்தை யறிந்தே.

## சங்கப்புலவர்களின் இயல்பு.

மதுரைச் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்து வந்த நல்லிசைப் புலவர்கள் பலகுணங்களால் நிறைந்திருந்ததுபற்றிச் சான்றோரென வழங்கப்படுவார்கள். அவர்கள் தங்களுடைய குடும்பச்செலவிற்கு வேண்டியவற்றை வேறுவகையாகப்பெற்று அச்சங்கத்திலிருந்து தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்தும் தமிழ்ச்சுவையை நுகர்ந்து இன்புற்றும் நூல்கள் இயற்றியும் தனிப்பாடல்கள் இயற்றியும் வாழ்ந்து வந்தார்களே யன்றித் தங்கள் பசியைத் தீர்த்துக்கொள்வதற்காகவே அக்கூட்டத்திற்போய் இருக்கவில்லை.

"நவிறொறும் நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

"ஆயுந் தொறுந்தொறு மின்பந் தருந்தமிழ்"

என்றானன்றோ?

ஆராய்ச்சியாலும் கற்பவர்களுடைய சல்லாபத்தாலும் உண்டாகும் இன்பத்தையே பெரும்பயனாக எண்ணியிருந்தார்களேயன்றி வேறுள்ள எந்த இன்பத்தையும் அப்புலவர்கள் மதிக்கவில்லை.

> "தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
> ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
> நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
> தும்ப ருறைவார் பதி" (நாலடியார்)

என்பது இதனை விளக்கும்.

தம்முடைய தாய் தந்தையர் மனைவி மக்கள் சுற்றத்தார் முதலியோருடைய பசித்துன்பத்தைப் போக்க அவர்களிற் சில புலவர்கள் ஒவ்வொரு சமயத்தில் குறிப்பறியும் உபகாரிகளிடஞ்சென்று அவர்களால் அத்துன்பத்தைப் போக்கியதுண்டு. இதனை அவர்கள் அவ்வப்பொழுது இயற்றிய செய்யுட்கள் நன்கு தெரிவிக்கின்றன.

அவர்களிடத்திலிருந்த எல்லாக் குணங்களினும் செய்ந்நன்றியறிதலென்னுங்குணம் மிகச் சிறப்புற்று விளங்கி வந்தது; இஃது அவர்கள் பாடல்களால் விளங்கும்.

பாண்டியர் முதலிய அரசர்களும் நன்கு கற்று அவர்களோடு ஒப்பவீற்றிருந்து தமிழை ஆராய்ந்து வந்தனர். "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என்னும் பழமொழிக்கேற்ப நாட்டிலுள்ளவர்களெல்லோரும் தமிழில் ஒழுங்கான பயிற்சியுள்ளவர்களாக இருந்தார்கள். அக்காலத்தில் சேரசோழபாண்டியநாடுகள் மூன்றிலும் இருந்தவர்கள் பேசிய பாஷை தமிழே. இப்போது வேறு பாஷை தங்குந்தேயமாகிய மலைநாடு தமிழ்த் தேயமாகவே இருந்தது. இது, **பதிற்றுப்பத்து** என்னுந்தொகைநூல் முதலியவற்றாலும் அந்நாட்டு அரசர்களாகிய சேரமான் பெருமாணாயனார் குலசேகராழ்வார் திருவாக்குக்களாலும் தெரி

முற்கூறிய புலவர்கள் ஒரு சாதியாரல்லர்; ஒரு குலத்தாரல்லர்; ஒரு மதத்தினரல்லர்; **உலோச்சனார்** முதலியோர் சைனர்; **இளம்போதியார்** முதலியோர் பௌத்தர்; பின்னும் இவர்கள், ஒரு தேசத்தாரல்லர்; ஓரூரரல்லர்; மதுரையிலும் அதன் அயலூர்களிலும் இருந்தவர்களன்றி வேறுநாடுகளிலிருந்தும் வந்து சிலகாலம் இருந்து செல்வதுண்டு. இவை அவர்கள் பாடல்களாலும் அவற்றின் பின்னுள்ள வாக்கியங்களாலும் விளங்கும். வேண்டியவற்றை வேண்டிய காலங்களிற் குறிப்பறிந்து அரசர்கள் அவர்களுக்கு உபகரித்து வந்தார்கள்.

## சங்க மண்டபம்.

அப்புலவர்கள் இருந்து தமிழாராய்ச்சி செய்வதற்கு மிகவசதியாக ஒரு மண்டபம் அக்காலத்திருந்த பாண்டிய அரசனாற் கட்டிக் கொடுக்கப்பட்டது; அம்மண்டபத்திற்கு, '**பட்டிமண்டபம்**' என்பது பெயர். இது,

"தெற்கண் வாயில் திறவாத **பட்டிமண்டபத்தார்** பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழ்வும் ஒருவன் சாவவும் பாடியமந்திரம் அங்கதப் பாட்டாயின".

(தொல்காப்பியம், செய்யுளியல் சூத்திரம், 179, பேராசிரியர் உரை)

என்பதனாலறியப்படுகின்றது, இன்னும்,

"பட்டிமன் றென்னன்" (தேவாரம்.)
"பட்டிமண்டப மேற்றினை யேற்றினை" (திருவாசகம்).
"பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்" (மணிமேகலை)
"பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்" (கம்பராமாயணம்);

என்பவற்றால் அப்பெயர் முன்பு வழங்கி வந்தமை புலனாகின்றது. இப்படியே வேறு சில ஆதாரங்களுமுண்டு. பட்டியென்றசொல் வரம்பு கடந்து நடக்கு மிருபாலாரையுங் குறிப்பதாகக் காலக்கிரமத்தில் வழங்கிவந்துவிட்டமையால் அதனையறிந்த பெரியோர் அப்புலவர் தொகுதியைத் தொகை, சங்கம், கூடல், கழகம் என்னும்பெயரால் வழங்குவாராயினர்.

"மதுரைத் தொகை யாக்கினன்"
"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி" (தேவாரம்)
"கூடலி லாய்ந்தவொண் டீந்தமிழ்" (திருக்கோவையார்)
"கந்தனை யனையவர் கலைதெரி கழகம்" (கம்பராமாயணம்)

## சிவபெருமானும் சங்கப்புலவர்களில் ஒருவராயிருந்தமை.

சங்கப் புலவர்களுடைய மேம்பாட்டை யறிந்து சோமசுந்தரக் கடவுளும் இடையிடையே சென்று தாமும் ஒரு புலவராகவிருந்து தமிழாராய்ந்து வந்தனரென்றும் அக்காலத்தில் அவருக்கிருந்த திருநாமம் மதுரைப் பேராலவாயரென்பதென்றுந் தெரிகின்றன.

"தண்டமிழ்நூற் புலவாணர்க்கோ ரம்மானே" (தேவாரம்)
"இறைவன் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலினாய்ந்தவொண் டீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ"
(திருக்கோவையார்).

"சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்தி
லன்றிருந்து தமிழாராய்ந் தருளியவங்கணர்"
"சங்கப் புலவர் தந் திருமுகந் தலைமேற்கொண்டு" (பெரிய புராணம்)
"பெருமைதரும் பெயர்மதுரைப் போரால வாயனென
வுரைசெய்தே யவைசெறோ விருந்தவனவ் வயினொளிப்ப"
(பழைய திருவிளையாடல்)

மதுரைப் போராலவாயரென்ற இந்தத் திருநாமம், பிற்காலத்தில் சங்கப்புலவரில் ஒருவர்க்கு இட்டப்பட்ட பெயராகவும் தொகை நூல்களிற் காணப்படுகின்றது.

## சங்கப்பலகை.

புலவர்கள் ஆராய்ந்தார்களென்றதனால், இடையிடையே ஏற்பட்ட கலகத்தாலும் பிறவற்றாலும் நூல்கள் சிதைந்தனவென்றும், ஆராயும்வண்ணம் அரசர்கள் செய்வித்தார்களென்றும், செய்யுட்களைத் தொகுப்பித்தார்களென்றும் தெரிகின்றன.

இவர்கள் பெருமையை உணராத பிறர், தாமும் அவர்களைப் போல் மேம்பட்டு விளங்க வெண்ணித் தாம்தாம் பாடிய பாடல்களைக் கொணர்ந்து, அவற்றைப் பார்க்கவேண்டுமென்றும், அவற்றை அங்கீகரிக்கவேண்டுமென்றும், தம்மைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்றும் முயல்வாராயினர். பிறர் தீமையைச் சொல்லார் நலத்தவர்களாதலின், அவர்களுடைய கல்விக்குறையையும் அவர்கள் செய்யுட்களிலுள்ள வழுக்களையும் எடுத்துக்கூற இயலாதவர்களாகி வருந்தி அந்தத் துன்பத்திலிருந்து தம்மை விடுவிக்கவேண்டுமென்று சங்கப்புலவர்கள் சோமசுந்தரக் கடவுளை வேண்டினர். இவர்களுடைய வேண்டுகோளின்படியே தெய்வத்தன்மை வாய்ந்த ஒரு பலகையை இவர்களுக்குத் தந்தருளி எவருக்கு அஃது இடங்கொடுக்குமோ அவரைச் சிறந்த புலவரென்று கண்டு கொள்ளும்படி அவர் கட்டளையிட்டருளினர். அப்பலகையின் பேருதவியால் குறைந்த கல்வியுடையவர்களாலேற்பட்டு வந்த துன்பம் இவர்கட்கு அடியோடே நீங்கியது.

"மொழியறி சங்கப்பலகை", "பாவறி சங்கப் பலகை"

என்று பெரியோர் பாராட்டியிருப்பதால் சங்கப்பலகை இருந்ததும் அதனுடையவியல்பும் விளங்குகின்றன.

"முருகுணர்ந்தருள் மலயான்முனி மொழியு முத்தமிழும்
பழுதறும்படிப் புலவரேறிய பலகையொன்றுடையான்"

என்று வில்லிபுத்தூராரும் பாடியிருக்கிறார்.

## சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.

### இறையனாரகப் பொருள்.

பின்னொரு காலத்தில், பாண்டிவள நாட்டிற் பஞ்சந் தோன்றி யாவருக்கும் துன்புறுத்தியது. புலவர்கள் அரசனிடம் விடைபெற்று மதுரையை நீங்கிச் சோழநாட்டிலுள்ள **ஆலஞ்சேரி** யென்னும் ஊரிலுள்ள **அயிந்தன்** என்னும் பிரபுவை அடைந்தபொழுது அவன் யாதொரு கவலையுமில்லாமல் தன்பால் வைத்திருந்து அவர்களைப் பாதுகாத்துவந்தான். மதுரையில் பஞ்சமநீங்கியதுதெரிந்து அவர்கள் அவனிடம் விடைபெற்றுச் சென்று பாண்டியனைக் கண்டபொழுது, "நீவிர் இப்பஞ்சத்தில் என்னதுன்ப முற்றீர்களோ?" என்று கவலையுடன் வினவினன். புலவர்கள் யாதொரு கவலையும் தமக்கு இல்லாதபடி ஆலஞ்சேரி அயிந்தனென்பவன் பாதுகாத்தானென்பதை ஒரு செய்யுளால் தெரிவித்தனர். அச்செய்யுள் வருமாறு:

"காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி
வேலையுங் குளனும் வெடிபடச் சுவறித்
தந்தையை மக்கள் முகம்பா ராமல்
வெந்த சாகம் வெவ்வேறு அருந்திக்
குணமுள தன்னையுங் கொடுத்து வாழ்ந்த
கணவனை மகளிர் கண்பா ராமல்
விழித்தவிழி யெல்லாம் வேற்றுவிழி யாகி
அறவுரை யின்றி மறவுரை பெருகி
உரைமறந் தொழிந்த வூழிகா லத்தில்
தாயி லவர்க்குத் தாயே யாகவுந்
தந்தையில் லவர்க்குத் தந்தையே யாகவும்
இந்த ஞாலத் திடுக்கண் மர
வந்து தோன்றினன் மாநிதிக் கிழவன்
நீலஞ் சேரு நெடுமால் போலவன்
**ஆலஞ் சேரி * அயிந்த** னென்பான்
தன்குறை சொல்லான் பிறர்பழி யுரையான்
மறந்தும் பொய்யான் வாய்மையுங் குன்றான்
இறந்து போகா தெம்மைக் காத்தான்
வருந்தல வேண்டாம் வழுதி
இருந்தன மிருந்தன மிடர்கெடுத் தனனே."

இந்தப் பஞ்சத்தின் கொடுமையால் அவர்களிடமிருந்து தொல்காப்பியப் பொருளதிகாரத்திலுள்ள அகத்திணைப் பகுதி எப்படியோ கை

* அயிந்த னென்பது மயிந்த னெனவும் வழங்கும்.

தவறிப் போயிற்று. அந்தப்பகுதியின் இன்றியமையாமையை உணர்ந்த அரசனும் புலவரும் மயங்கி வருந்துவாராயினர். அதன்பிறகு சோம சுந்தரக்கடவுள் ஒரு புலவராகத் தோன்றி அறுபது சூத்திரங்கள் அமைந்த ஒரு நூலையியற்றி அவர்களிடம் சேர்ப்பித்து, 'உங்கள் வருத்தத்தை நீக்கிக் கொள்ளுங்கள்' என்று கட்டளையிட்டனர். சிவபெருமான் திருநாமம் இறையனாரென்பதாதலின் அந்நூலுக்கு '**இறையனாரகப்பொருள்**' என்பது பெயராயிற்று;

> "**உலகியனிறுத்தும் பொருண்மர பொடுக்க**
> **மாறனும் புலவரு மயங்குறு காலை**
> **முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கா**
> **லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங்**
> **கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற்**
> **பரப்பினின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத்**
> **தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்**" (கல்லாடம்);
> "**திருவால வாயமர்ந்த செழுஞ்சுடரைச் செழும்பொருணூல் தருவானை**",
> "**நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை**" (பெரிய புராணம்.)

இறைவனார் பொருளெனவும் களவியலெனவும் அந்நூலின் பெயர் வழங்கும். பல புலவர்களும் அதற்கு உரையெழுதினர். தத்தம் உரையே சிறந்ததென்று ஒவ்வொருவரும் கூறுவாராயினர், அது பற்றிப் பெரிய கலகம் விளைந்தது. சோமசுந்தரக்கடவுளிடத்தில் அவர்கள் அதனை விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அவர் அப்பொழுது அவர்களுக்கு முன்னே முன்போலே எழுந்தருளி, "மதுரையில் வணிகர் மரபில் உப்பூர்குடிகிழார்மகன் **உருத்திரசன்மன்** என்ற பெயருடைய மூங்கைப்பிள்ளை இருக்கிறான். அவன்முன் நும் உரைகளைப் படித்துக் காட்டினால் இன்னது சிறந்ததென்பதை முகக்குறியாலுணர்த்துவான்" என்றருளினர். அந்த மூங்கைப்பிள்ளையை முருகனென்பர். பார்வதி தேவியாருக்கு ஒருகாலத்தில் பரமசிவன் உத்தரகோசமங்கை யென்னும் ஸ்தலத்தில் ஆகமப் பொருளை விளக்கிக்கொண்டிருந்தபோது அவர் கவனக்குறைவுடன் இருந்தமையால் இறைவன் அவரைச் சபித்தார். அதனால் முருகக்கடவுள் தாயிடத்திலுள்ள அன்பினால் வெகுண்டு அங்கேயிருந்த சாஸ்திரங்களைத் தூக்கிக் கடலில் எறிந்துவிட்டார். அது பற்றி அவர் ஊமையாகப் பிறக்கும்படி சபிக்கப்பட்டு அப்படியே அவதரித்தார். சங்கப்புலவர்கள் தத்தம் உரையைப் படித்துக் காட்டியபொழுது நக்கீரர் உரையே சிறந்ததென்று அவர் ஏற்றுக்கொண்டார்.

> "**மணிக்கா லறிஞர் பெருங்குடித் தோன்றி**
> **இறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப்**

பெருந்தமிழ் விரித்த வருந்தமிழ்ப் புலவனும்
பாயபா ரறிய நீயே யாதலின் " (கல்லாடம், முருகர் துதி),
" திருத்தகு மதுரை தன்னிற் சிவன்பொரு ணிறுக்கு மாற்று
ளுருத்திர சன்ம னாகி யுற்றெழும் நிமலன்." (கந்த புராணம்)

பின்னர், உருத்திரசன்மா சிவபெருமானை வழிபட்டுத் தமது ஊமைத் தன்மையை நீக்கிக்கொண்டனர்; அந்தவிடம **திருவெருக்கத்தம்புலியூர்.** இந்த வரலாற்றை அந்தத் தலசரித்திரத்திற் காணலாம். அங்கு உருத்திர சன்மரின் பிம்பமும் உண்டு. திருவெருக்கத்தம்புலியூர் இராசேந்திரபட்டணமென்று இக்காலத்து வழங்கப்படுகின்றது.

## சங்கமிருந்ததற்கு ஆதாரங்கள்.

மதுரையில் சங்கமண்டபம் இருந்ததற்கு அடையாளமாக ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுடைய கோயிலின் பெரிய பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் சங்கத்தார் கோயிலென்று ஒன்று உண்டு. அதில் நாற்பத்தொன்பது புலவர்களின் பிம்பமும் ஸரஸ்வதி தேவியின் பிம்பமும் உள்ளன. சிவலிங்கப்பெருமானும் அங்கே எழுந்தருளியிருக்கின்றனர். ஒவ்வொரு தினமும் பூசை நைவேத்தியங்கள் நடைபெற்று வருகின்றன. மதுரை மேலவீதி யொன்றில் நக்கீரர் கோயிலொன்றிருக்கிறது. அதில் நக்கீரருடைய பிம்பமும் வேறு சில புலவர்களுடைய பிம்பங்களும் உள்ளன. திருப்பரங்குன்றக் கோயிலிலும் நக்கீரர் பிம்பம் உண்டு. அது பூசிக்கப் பெற்று வருகின்றது. அவரைப் பூதத்தின் சிறையிலிருந்து முருகக்கடவுள் மீட்டருளிய திருவிளையாடல் ஒவ்வொரு வருடமும் பங்குனி மாதத்தில் நடைபெறும் திருவிழாக்காலத்து நான்காந் திருநாளில் அத்தலத்தில் நடைபெற்று வருகின்றது. சிவஸ்தலங்களுள் ஒன்றாகிய திருவீங்கோய்மலைச் சிவபெருமான் மீது **'ஈங்கோய் மலையெழுபது'** என்றொரு நூல் **நக்கீரரால்** இயற்றப் பெற்றிருத்தல்பற்றி அக்காலத்திலிருந்த அரசரொருவர் அம்மலைக்கோயிலில் நக்கீரருடைய திருவுருவத்தைப் பிரதிஷ்டிப்பித்துப் பூசை நைவேதனம் நடைபெற்று வரும்படி நிபந்தமேற்படுத்தியிருந்தாரென்று அத்தலத்துச் சிலாசாஸனத்தால் தெரியவருகின்றது. " கொங்குதேர் வாழ்க்கை " என்னுமொரு செய்யுளின் நிமித்தம் சோமசுந்தரக் கடவுளுக்கும் நக்கீரருக்கும் மிக்க வாத முண்டாயிற்றென்றும் அதில் தோல்வியுற்ற நக்கீரர் தமது பிழையைப் பொறுத்தருளும்படி அவர்மீது **'கோபப்பிரசாதம்'** என்ற ஒரு நூலியற்றினரென்றும் ஒரு சரிதமுண்டு. அவர் ஒரு சமயம் திருக்காளத்திக்குப் போய்**கைலைபாதி காளத்திபாதியந்தாதி** யென்றொரு பிரபந்தம் பாடினதாகத் தெரிகிறது. அவராற் பிரதிஷ்டிக்கப்பட்ட ஒரு சிவலிங்கப்பெருமான்

திருவுருவம் அத்தலத்தில் உண்டு; அதற்கு **நக்கீரநாதர்** அல்லது **நக்கீர லிங்க** மென்பது திருநாமம்.

மேற்கூறிய தமிழ்ச்சங்கமே பிற்காலத்தில் பொற்றாமரைக் கரையில் இருந்ததாகவுந் தெரிகிறது. வடமொழி **ஹாலாஸ்ய மாஹாத் மியத்திலும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலும்** இச்சங்கம் கங்கைக்கரையிலிருந்ததாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இங்கே, கங்கையென்றதை வடக்கேயுள்ள கங்காநதியென்று சிலர் எண்ணுகிறார்கள். அது பொருந்தாது. கங்கையென்பது இத்தலத் திலுள்ள பொற்றாமரை வாவியையே குறிக்கும். சிவதீர்த்தத்தைக் கங் கையென்று வழங்குதல் மரபு. கும்பகோணம் ஸ்ரீ மகாமகதீர்த்தக் கரையிலுள்ள வீரபத்திரக்கடவுளைக் கங்கை வீரபத்திரரென்றும், குடந்தைக் கீழ்க்கோட்டத்திலுள்ள விநாயகரைக் கங்கை விநாயக ரென்றும் வழங்குதலை இக்காலத்தும் கேட்கலாகும். மேற்கூறிய பொற்றாமரைக்கரையிற் சங்கமிருந்ததற்கு அறிகுறியாக அவ்வாவியின் கரையிலுள்ள மண்டபக் கற்றூண்களிற் சங்கத்தாருடைய பிம்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

"கோடாத நீதிசெங் கோலான் குலோத்துங்கன் கோழியன்னார்
தோடார் மலர்க்குழல் சூழ்வண்டி காய்ய பாடல்செய்தும்
பீடார் பொற்றாமரைச் சங்கமுற் றும்பெருங் காவியங்கள்
ஊடாடி யும்மிவர் நூலைய மேது முணர்ந்திலிரே"

என்பது **குலோத்துங்கன் கோவை.** பாண்டியனுடைய வேண்டுகோ ளின்படி **பொய்யாமொழிப்புலவர்** பொற்றாமரைக் கரையிலிருந்த சங் கத்தார் பிம்பங்கள் தலையசைக்கவும் பொற்றாமரை வாவியின் மூழ்கி யிருந்த சங்கப்பலகை மிதக்கவும் பாடினாரென்று ஒரு செய்தி, "உங் களிலே", "பூவேந்தர்" என்ற முதற்குறிப்புக்களையுடைய இரண்டு செய்யுட்களுடனும் வழங்கி வருகின்றது.

"சங்கமலி செந்தமிழ்கள்",
"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்"

என்று **தேவாரங்களிலும்,**

"சங்கத் தமிழ்"

என்று **திருப்பாவையிலும்,**

"சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண்மூதூர்
நூல்பா யிடத்தும் முளநோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாயவெங்கும்
சேல்பாய் தடத்தும்முள செய்யுண்மிக் கேறுசங்கம்"

என்று **பெரிய புராணத்திலும்,**

"செஞ்சொற் புலவர்கள் சங்கத்தமிழ்தெரி செந்திற்பதி"

என்று **திருப்புகழிலும்,**

"சங்கம் வளர்த்திட நின்ற பொலன் கொடி"

என்று **மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழிலும்,**

"......................... .......................தென்மதுரைத்
தங்கத் தமிழ்ச்சங்கத் தார்சொற் றவறினுஞ் சார்ந்துநந்தஞ்
சங்கத் திருந்து தமிழாய்ந் தவர்சொற் றவறுவரோ"

என்று சோமேசுரக் கோவையிலும் சங்கமென்று பெயர் வந்துள்ளது.

சங்கமிருந்ததென்பதற்கு இன்னோரன்ன ஆதாரங்கள் பல இருந்தும் அஃதொன்றிருந்ததாகச் சிலாசாஸனத்திற் கிடைக்கவில்லை யாகையால் சங்கமிருந்ததேயில்லை யென்றும், **தொல்காப்பியத்திற்** சங்கமென்றசொல் காணப்படவில்லை யென்றும் சிலர் பேசுகிறார்கள். அது வருந்துவதற்கிடமாக விருக்கிறது.

## பிற சங்கங்கள்.

இதுகாறும் கூறப்பட்டுவந்த சங்கம் இயற்றமிழ்ச்சங்கம்; இதையன்றி இசைத் தமிழ்ச் சங்கமொன்றும் நாடகத்தமிழ்ச்சங்கமொன்றும் அதேகாலத்தில் மதுரையில் இருந்தனவென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

கடைச் சங்ககாலத்திற்குப் பின்பும் இம்மதுரையில் சைனசங்கமும் பௌத்த சங்கமும் இருந்தனவென்றும் பெரியோர் சொல்லுவதுண்டு. அன்றியும், வடமொழிச்சங்கம் சேரன் ஆட்சியி லிருந்ததாக **மதுரைக் காஞ்சி** தெரிவிக்கின்றது. **திருவள்ளுவர் திருக்குறளை** யரங்கேற்றினமையால் சங்கம் அழிந்துவிட்டதென்று சிலர் நினைக்கிறார்கள்; அது பொருந்தாதென்பது சிலர்கருத்து.

## உக்கிரப் பெருவழுதி.

**திருவள்ளுவ மாலையிற்** காணப்படும் உக்கிரப்பெருவழுதியின் வரலாற்றைக்கொண்டு சிலர் காலநிர்ணயம் செய்கிறார்கள். **அகநானூற்றைத்** தொகுத்தவர் பெயரும் உக்கிரப்பெருவழுதியாரென்று தெரிகிறது. **புறநானூற்றில்,** 'கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியார்' என்றொருவர் கூறப் படுகிறார். பாண்டியர்களுடைய வகுப்பில் உக்கிரகுலமென்று ஒன்றுண்டென்றும் அதிற் பிறந்தவர்கள் உக்கிரப் பெருவழுதி யென்று பெயர் பெற்றிருந்ததாகவும் பழைய சரித்திரங்கள் தெரிவித்தலால் மேற் கூறிய வழுதிகள் ஒருவரோ வேறோ தெரியவில்லை. மேற்கூறிய கானப்பேர் இப்பொழுது **காளையார் கோயி**

லென்று வழங்கப் படுகிறது. அத்தலத்தி லெழுந்தருளி யிருக்கும் சிவலிங்கப் பெருமான்களில் ஒரு மூர்த்திக்கு '**உக்கிரபாண்டியேசுவரர்**' என்பது திருநாமம். பாண்டியதேயத்தின் கடற்றுறைப் பட்டினமாகிய **கொற்கையி** னருகிலுள்ள பெருங்குளத்தில் **உக்ர பளுதீசுவரர்** கோயிலென்று ஒரு சிவாலய மிருக்கின்றது. கொற்கையிலிருந்த உக்கிரபாண்டியரென்பவரால் அந்த ஈசுவரவடிவம் உபாஸிக்கப் பட்டதென்று ஆண்டுள்ளார் சொல்லுகின்றனர்.

சங்க கால வரையறையைப்பற்றி இக்காலத்தில் ஆராய்ச்சியாளர் பலர் உழைத்து ஒருவரோடொருவர் தாக்கியும் நிர்ணயிக்க முயன்று வருவதால் அதிற்றலையிட்டுக்கொள்ள எனக்குச் சிறிதும் விருப்பமில்லை.



# II. முத்தமிழ்.

**தமிழ்** மூன்றுவகையாகப் பகுக்கப்பெற்று இயல், இசை, நாடகமென்ற பெயருடன் வழங்கும். அவற்றுள் ஒவ்வொன்றிலும் இலக்கணமும் இலக்கியமும் உண்டு. அம்மூன்றனுள் ஒன்றற்கு ஒன்று இன்றியமையாததே. மூன்றற்கும் பொதுவாகச்சில இலக்கணங்களும் உள்ளன.

இலக்கியத்தின் அமைதியே இலக்கணம். "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்", "இனைவறு குறுமுனி இலக்கணம்பெறப், புனைதரு மிலக்கியப் புலவர் சிங்கமே" என்பவற்றால் இது விளங்கும்.

இம்மூன்றும் தமிழில் ஒரு கொத்தாக வழங்கப்படுவதுபோல் வேறு பாஷைகளில் வழங்குவதில்லை யென்றும், இம்மூன்றன் இலக்கணமும் தனித்தனியே அவற்றில் உள்ளனவென்றும் சொல்லுவர்.

இம்மூன்றும் சேர்ந்தே தமிழில் முத்தமிழ், தமிழ்மூன்று, மும்மைத்தமிழென்று வழங்கப்படுவதைத் **தேவாரம்** முதலிய நூல்கள் தெரிவிக்கின்றன.

பண்டைக்காலத்திலிருந்த தமிழ்ப்புலவர்களிற் பெரும்பாலோர் இம்மூன்றிலுமே பயிற்சி உள்ளவராக இருந்தனரென்றும் அவருள் **முத்தமிழ்க்கவி** யெனறே சிலர் பட்டம் பெற்று விளங்கினாகளென்றும் தெரிகிறது.

இந்த முத்தமிழ்க்கும் இலக்கணநூல் செய்தவர் **அகத்திய முனிவரே**; தமிழைப் பரிபாலித்த சைனர் முதலியோர்க்கும் உடன்பாடானது இது. அகத்தியத்தின்பால் முத்தமிழிலக்கணங்களும் கூறப்பட்டுள்ளன என்பர்.

பழைய உரைகளிற் காணப்படும் மேற்கோள் வழக்கால், **சிற்றகத்தியம் பேரகத்தியமென** இரண்டு நூல்கள் இருந்து வந்தனவென்று தெரிகிறது; அவற்றைப்பற்றி வேறு ஒரு விவரமும் தெரியவில்லை.

"**ஆதியிற் றமிழ்நூல் அகத்தியற் குணர்த்திய மாதொருபாகன்**" என்றது **அகத்தியத்திற்கு** முற்பட்டே ஒரு தமிழ்நூல் இருந்ததைத் தெரிவிக்கிறது.

ஒன்ருகவும் வேறுவேருகவு மிருந்த சங்கங்களால் இந்த முத்தமிழும் மதுரையில் ஆதரிக்கப்பட்டு வந்தன; அப்படியே வேறு வேறு நகரமுதலிய இடங்களிலும் ஆதரிக்கப் பெற்று வந்தன.

அவற்றுள் **இயற்றமிழ்**, நல்ல நடையோடு கூடிய இலக்கணமமைந்த தமிழ். **இசைத் தமிழ்** இராகம், தாளம், பாஷைப்பாட்டு இம்மூன்றும் வேறுபடாமல் இசைந்திருத்தலையுடைய தமிழ்.

**நாடகத்தமிழைப்**பற்றிப் பின்பு சொல்லுவேன்.

இவை, அகத்தியராலும் அவர் மாணுக்கர்களாலும் இலக்கணம் செய்யப்பெற்றுக் கால அடைவிற் பெருக்கமடைந்து வந்தன.

இலக்கியங்களுள் **சிலப்பதிகாரம்** மூன்றுதமிழும் விரவப் பெற்றிருத்தலின் முத்தமிழ்க்காப்பிய மென்று பாராட்டப்படும்.

"குடக்கோ முனிசேரன் தண்டாவுரை **முத்தமிழ்**" (**சிலப்பதிகாரம்**, நூற்சிறப்புப் பாயிரம்);

"**முத்தமிழ்க்** கல்வியும் வித்தகக் கவியும் காட்டுதற்கு"

"பழுதற்ற **முத்தமிழின்** பாடற் குரையின்
றெழுதத் துணிவதேயான்"

"ஒருந **தமிழொரு மூன்று** முலகின் புறவகுத்துச்
சேரன் தெரிந்த **சிலப்பதிகாரம்**"

"சோற்றுச செருக்கலலவோ **தமிழ்மூன்றுரை** சொலவிதத்தே" (**சிலப்பதிகாரம்**, அடியார்க் குநல்லார் உரைப்பாயிரம்).

இங்ஙனம் முத்தமிழும் விரவப்பெற்ற காப்பியங்கள் இந்நூலையன்றி வேறு இக்காலத்துக் காணப்பட விலலை.

**இயற்றமிழிலக்கணங்கள்** எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணமென ஐந்து வகைப்படும். பொருத்த இலக்கணத்தையும் பிரபந்த இலக்கணத்தையும் இயற்றமிழிலக்கணத்திற் சேர்த்து வழங்குவதும் உண்டு. மேற்கூறிய ஐந்திலக்கணங்களையு முடைய நூல்கள் தொல்காப்பியம், அவிநயம், வீரசோழியம், இலக்கணவிளக்கம், தொன்னூல், முதலியன வென்பன.

அவற்றுள் **தொல்காப்பியம்** என்பது தொல்காப்பியமுனிவராற் செய்யப்பட்டது. அம்முனிவர் தொல்காப்பியக்குடியிற் பிறந்தவர். அந்நூலிலுள்ள அணியியலில் உவமையணியின் பகுப்பொன்றே கூறப்பட்டிருக்கின்றது. அந்நூலுக்கு உரை செய்தவர்கள் **இளம்பூரணர், சேனு**

**வரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், கல்லாடர், தெய்வச்சிலையா** ரென்னும் அறுவரென்று இப்போது தெரிகிறது. அவ்வுரைகளால் **மாபுராண** முதலாகப் பல இலக்கண நூல்கள் முன்பு இருந்தன வென்பதை அறியலாம்.

நன்னூலின் பழைய உரையாசிரியராகிய **மயிலைநாதருடைய** உரையால், **அவிநய** மென்பது தொல்காப்பியத்திற்குக் காலத்தால் முந்தியதாகத் தெரிகின்றது; அஃது இப்பொழுது கிடைக்கவில்லை.

**வீரசோழிய** மென்பது பௌத்தசமயத்தாராகிய **புத்தமித்திர**ரால் இயற்றப்பட்டது; அதனுரையாசிரியர் **பெருந்தேவனா** ரென்பவர். அதனுரையில் இக்காலத்தில் வேறு எவ்விடத்தும் காணப்படாத பல பழைய சூத்திரங்களும் பல செய்யுட்களும் காணப்படுகின்றன; அவை இன்ன நூலைச் சார்ந்தவை யென்று தெரியவில்லை. அதிலுள்ள மேற்கோட் செய்யுட்களிற் பெரும்பாலன பௌத்த சமயக்கொள்கைகளையும் புத்ததேவனுடைய சரித்திரவகையையும் புலப்படுத்துகின்றன. அவற்றையன்றிப் பௌத்தமத சம்பந்தமான விஷயங்களை அறிவதற்கு வேறு கருவி யொன்றும் தமிழிற் கிடைத்திலது; மணிமேகலைக் குறிப்புரை யெழுதுவதற்கு அந்நூற் செய்யுட்கள் சிறந்த கருவியாக இருந்தன. அதில் வடமொழி இலக்கணங்கள் பல அமைக்கப் பெற்றுள்ளன.

**இலக்கணவிளக்க** மென்பது, திருவாரூர் **வைத்தியநாத தேசிக** ரென்னும் சைவப் பெரியாரொருவரால் இயற்றப் பெற்றது. அதற்கு விரிவான உரையொன்றுண்டு. அந்நூல் **குட்டித்தொல்காப்பிய** மென்றும் வழங்கப்படும். அதில் ஐந்திலக்கணங்களையன்றிப் பொருத்த இலக்கணமும் பிரபந்த இலக்கணமும் சேர்க்கப் பெற்றுள்ளன. அந்நூல் உரையில், சில பேரகத்தியச் சூத்திரங்களும் சில சிற்றகத்தியச்சூத்திரங்களும் வேறு சில அரிய பழைய செய்யுட்களும் சூத்திரங்களும் மேற்கோள்களாக வந்துள்ளன. பின்னும் அந்நூலிற்காணப்படும் விசேடங்கள் பல. ஊன்றிப்பார்த்தால் நன்னூல் முதலியவற்றுள்ள மூலங்களும் அவற்றின் பழைய வுரைகளும் மேற்கோள்களும்பிறவும் ஆகிய இவற்றாலேயே அமைந்தன அந்நூலும் உரையுமென்று சொல்லலாம்; "திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க் கிலக்காகியவைத்தியநாதன்" என்று இந்நூலாசிரியர் **இலக்கணக்கொத்துடையா**ராற் பாராட்டப் பெற்றுள்ளார்.

**தொன்னூலில்** மேற் கூறிய ஐந்திலக்கணங்களுமன்றி வேறு சில விசேடப் பகுதிகளும் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளன. அந்

நூலாசிரியராகிய **வீரமாமுனிவ**ரென்பவர், தமிழே வழங்காத அயல் தீவிற் பிறந்து வளர்ந்தும் தமிழ்நாட்டுக்கு வந்து தக்க பண்டிதர்க ளிடம் சென்று சென்று முறையே கற்றுத் தமிழ்ப்பாஷையின்கண் மிக்க அன்பு பூண்டு இத்தொன்னூலாகிய இலக்கணமும் **தேம்பாவணி** முதலிய இலக்கிய நூல்களும் இயற்றியது இந்நாட்டில் மிகப்பாராட் டற்பாலது. இவர்க்குத் தமிழ் நூல்களைப் பாடஞ்சொல்லிய ஆசிரியர் களுள் முக்கியமானவர் பழநியிலிருந்த **சுப்பிரதீபக் கவிராய**ரென்பவ ரென்று கேட்டிருக்கிறேன்.

**முத்துவீரியம்** என்ற இலக்கண நூல் சென்ற நூற்றாண்டில் உறை யூரிலிருந்த விசுவகுல திலகராகிய **முத்துவீர வாத்தியார்** என்பவரால் இயற்றப்பெற்றது. அதற்கு உரை செய்தவர் திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார்பேட்டையில் இருந்தவரான **திருப்பாற்கடனாதன் கவிராயரென்பவர்.** அந்நூல் சூத்திரங்களாலாகியது. முத்துவீரவாத்தி யார் பூரண ஆயுள் உடையவராயிருந்தனர்; குடும்பத்தாரைப் பாதுகாக்க முடியாதநிலைமையில் அவர் இருந்ததைக் கண்டு மனமிரங்கி உணவு முதலியவற்றைப் பற்றி அவருக்கு யாதொரு கவலையுமில்லாதபடி அவ ருடைய மாணாக்கர்களிலொருவரும் அக்காலத்தில் இளைஞராயிருந்த வருமாகிய **ஸ்ரீ சுப்பராயசாரியா**ரென்பவர் மாதமொன்றுக்கு ரூபாய் 30 விகிதம் உதவி செய்து அவரைப் பாதுகாத்து வந்தனர்.

ஐந்திலக்கணங்களுள் முதலிரண்டிலக்கணங்களைப் பற்றியுள்ள நூல் கள் **நன்னூலும், நேமிநாதமும்.** அவற்றுள் **நன்னூலைப்** பற்றி, "முன்னூ லொழியப் பின்னூல் பலவினுள், நன்னூலார் தமக்கெந்நூலாரும், இணையோ வென்னுந் துணிவே மன்னுக" என்று இலக்கணக் கொத் துடையார் சொல்லிய அருமை அறிதற்பாலது, அதற்கு **மயிலைநாதர்** முதலியோர் உரைசெய்திருக்கின்றனர்.

**நேமிநாத**ம் என்பது **குணவீரபண்டித**ரென்பவரால் இயற்றப் பெற்ற வெண்பாக்களாலாகிய நூல். இதில் அரிய இலக்கண விதிகள் அமைந்துள்ளன.

"சொல்காப் பியக்கடலிற் சொற்றீபச சுற்றளக்கப்
பல்காற்கொண் டோடும் படகெனப—பல்கோட்டுக்
கோமிகா மற்புலனை வெல்லுங் குணவீரன்
நேமிநா தத்தின் நெறி"

என்பதனால் இந்நூலின் சிறப்பு விளங்கும்; இதற்குச் சிறந்ததோருரை யுண்டு.

மூன்றாவதாகிய **பொருளிலக்கணம்** அகப்பொருளிலக்கணம் புறப் பொருளிலக்கணம் என இருவகைப்படும். அகப்பொருளைப்பற்றித்

தனியே கூறும் இலக்கணங்கள் **இறையனாரகப் பொருளும்**, **நாற்கவிராய நம்பியகப்பொருளும்**, **மாறனகப் பொருளும்**. அவற்றுள் **இறையனாரகப் பொருள்** என்னும் நூலை இயற்றியவர் சிவபெருமான் கூறுகிய **இறைய னார்** என்னும் புலவர்பெருமான். இதற்கு உரைகண்டார் **நக்கீரர்** முதலி யோர். நக்கீரர் இயற்றிய உரைவழியே வந்த ஒருரை இப்பொழுது

**நாற்கவிராய நம்பியகப் பொருளென்பது**, நாற்கவிராயநமபி என்னும புலவரொருவரால் இயற்றபபெற்றது. இதற்கு ஒருரையும உண்டு. அது மேற்கூறிய நாற்கவிராய நமபியாலேயே இயற்றபபட்ட தென்று இந்நூற் சிறபபுபபாயிரம தெரிவிக்கிறது. அகபபொருளி லக்கணததை யாவரும் எளிதில் அறிந்துகொள்ளுமபடி முறைப்படுததி உபகரித்தவா இபபெரியாரே.

**மாறனகப்பொருளென்ற** நூல, நமமாழ்வார்பால் அன்புடைய **திருக்குருகைப்பெருமாள்கவிராய**ரென்பவரால இயற்றபபெற்றது. இதற்கு இலககியமாக **மாறன கோவை** யென்று ஒருநூலுண்டு.

அகபபொருளிலககண அமைந்துள்ள இலககியஙகள எட்டுத தொகையுள் **நற்றிணை**, **குறுந்தொகை**, **ஐங்குறுநூறு**, **கலித்தொகை**, **அகநானூறு** என்பவைகளும, **பரிபாடலிற்** சிலபாடல்களும, பததுப பாட்டில் **முல்லைப்பாட்டு**, **குறிஞ்சிப்பாட்டு**, **பட்டினப்பாலை** என்னும மூன்றும், பதினெண்கீழ்க் கணக்கில் **ஐந்திணை** நூலகளும, **கைந்நிலை யும்**, **திருக்குறளிலும் நாலடியாரிலும்** உள்ள காமத்துப்பாலகளும், திரு வாதவூரா இயற்றிய **திருச்சிற்றம்பலக் கோவை**யாரும, பிற்காலதது அதைப பின்பற்றி மிக விரிவாகச் செய்யபபெற்ற பல ஐநதிணைக கோவைகளுமாம.

பொருளின் இரண்டாவது பகுதியாகிய புறபபொருளுக்குரிய இலக்கணநூலகள் **பன்னிருபடலம**, **புறப்பொருள் வெண்பாமாலை**

அவற்றுள் **பன்னிருபடல**மென்பது அகததியருடைய மாண க்கர் பன்னிருவரால் இயற்றபபட்டது. அதிலிருநது சில சூத்திரங்கள் பழைய உரைகளிற் காணப்படுகின்றனவன்றி நூல் இபபொழுது கிடைக்கவில்லை.

**புறப்பொருள் வெண்பாமாலை** என்றநூல் சேரர் பரம்பரையின ராகிய **ஐயனாரிதனார்** என்பவரால் இயற்றப்பட்டது. இது சூத்திரங்களை யும் **அவற்றிற்கு** மேற்கோளாகக் காட்டப்பெற்ற வெண்பாக்களையும் **அவ்வெண்பாக்களின்** கருத்தைப் புலப்படுத்தும் கொளுக்களையும்

பெற்று விளங்குவது. இதற்குச் **சாமுண்டி தேவநாயகர்** என்பவராற் செய்யப்பட்ட உரையொன்றுண்டு. இப்புறப்பொருளுக்கு இலக்கியங்கள் எட்டுத்தொகையில் **பதிற்றுப்பத்து புறநானூறு** என்பவைகளும், **பத்துப்பாட்டில்** ஏழுபாட்டுக்களும், இவைபோன்ற பிறவுமாம். **சிந்தாமணி** முதலிய காப்பியங்களில் புறப்பொருளிலக்கண அமைதிகள் மிகுதியாக அங்கங்கே விளங்குகின்றன.

**யாப்பிலக்கணத்தை**மட்டும் தெரிவிப்பன **யாப்பருங்கலமும், யாப்பருங்கலக்காரிகையும்.** இவற்றுள், முதலாவது சூத்திரங்களாலும் இரண்டாவது கட்டளைக்கலித்துறைகளாலும் அமைந்தவை. மேற்கூறிய யாப்பருங்கலத்தின் விருத்தியுரையால் தமிழில் பல யாப்பிலக்கண நூல்களிருந்தன வென்றும் வேறு பழைய நூல்கள் அநேகமிருந்தன வென்றும் தெரிகின்றன. மேற்கூறிய நூல்களும் அவற்றினுரைகளும் ஜைனபண்டிதர்களால் இயற்றப்பட்டிருத்தலன்றி அவற்றின் மேற்கோள்களுட் ஜைனமத சம்பந்தமானவே பெரும்பாலும் இருத்தலின் அசசெய்யுட்களைப் படித்துப் பாராட்டுதற்கு மனமில்லாத சைவ வைணவ சமய அபிமானிகளின் வேண்டுகோளின்படி சிறந்த சைவ வைணவ பண்டிதர்களாற் செவ்வனே இயற்றப்பட்டு அவ்விலக்கணத்தின் மேற்கோள்களாக முறையே **சிதம்பரச் செய்யுட்கோவை, பாப்பாவினமெ**ன இரண்டு நூல்கள் இக்காலத்து வழங்கு

அணியிலக்கணத்தைமட்டும் தெரிவிக்கும் நூல்கள் **அணியியல், தண்டியலங்காரம, குவலயாநந்தம், மாறனலங்கார**மென்பவை. அவற்றுள், **அணியியலி**லுள்ள சூத்திரங்கள் சில நூற்பெயரோடு கிடைக்கின்றனவே யன்றி அந்நூல முழுதும் கிடைக்கவில்லை. தண்டியலங்காரமே அணியியலென்று சிலர் சொல்லுவர்; அது பொருந்தாது.

**தண்டியலங்காரம் தண்டியாசிரி**யரால் வடமொழியிலுள்ள காவ்யாதர்சத்தைத் தழுவி இயற்றப்பட்ட நூலென்பர். இது சூத்திரங்களாலமைந்தது. இந்நூலுட் கூறப்பெற்ற அணிகள், ௩௫.

**குவலயாநந்தம்** என்ற அணியிலக்கணம **மாணிக்கவாசகர்** என்னும் பெயருள்ள ஒரு புலவராற் செய்யப்பட்டது; சூத்திரங்களாலமைந்தது. இந்நூலுட் கூறப்பெற்ற அணிகள், ௧௦௦. இதற்கு முதனூல் வடமொழி நூலே.

**மாறனலங்காரம்** என்பது **திருக்குருகைப் பெருமாள் கவிராயர்** என்பவரால் இயற்றப் பெற்றது; சூத்திரரூபமாயமைந்தது. இந்நூலினுள்ள பொருளணிகளின் தொகை, கூச. தொல்காப்பிய முதலியவற்

றின் கருத்துக்களையும் தண்டியலங்காரத்தின் கருத்துக்களையும் தழுவி மிக விரிவாக இஃது இயற்றப்பட்டது. இதன் உரையாசிரியர் **தென்றிருப்பேரைக்காரி இரத்தினக்கவிராயர்** என்பவர். இந்நூலும் உரையும் தமிழின் கருவூலமென்றே கருதற்குரியன.

இம்மூன்று நூல்களுக்கும் முதனூல்கள் தொல்காப்பியமும் வடமொழியிலுள்ள அணியிலக்கணங்களுமே.

பொருத்த இலக்கணத்தையும் பிரபந்த இலக்கணத்தையும் தெரிவிக்கும் நூல்கள் **பன்னிருபாட்டியல், இந்திரகாளியம், வாருணப்பாட்டியல், வச்சணந்திமாலை** அல்லது **வெண்பாப்பாட்டியல், நவநீதப்பாட்டியல், தத்தாத்திரேயப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல், வரையறுத்த பாட்டியல்** முதலியவை.

அவற்றுள், **பன்னிரு பாட்டியல்** என்பது பழைய சங்கப்புலவர் பன்னிருவரால் செய்யப்பட்ட நூலென்பர். அது சூத்திரரூபமாய் அமைந்துள்ளது.

**இந்திரகாளிய**மென்ற நூலின் சூத்திரங்கள் சிலவே நூற்பெயரோடு உரைகளிற் காணப்படுகின்றன; இந்நூலை இயற்றியவர் இந்திரகாளியரென்பவரென்று தெரிகின்றது.

**வாருணப் பாட்டியல்** என்ற நூலிலிருந்து மேற்கோளாகச் சில சூத்திரங்கள் மட்டும் உரைகளிற் காணப்படுகின்றன; நூல

**மாலை** நேமிநாத நூலாசிரியராகிய **குணவீரபண்டித**ரென்பவரால் இயற்றப்பெற்றது. அவருக்கு ஆசிரியர் **வச்சணந்தி**யென்பவராதலால் அவரிடத்திலுள்ள அன்பின் மிகுதியால் அவர் பெயரால் இந்நூலை அவர் வெளியிட்டனர் என்பர். இது வெண்பாக்களால் அமைந்தது.

**நவநீதப் பாட்டியலென்பது நவநீத நடன**ரென்பவரால் இயற்றப்பெற்றது; கலித்துறையாலமைந்தது.

**வரையறுத்த பாட்டியலென்பது** கலித்துறையாலாகிய நூல். மங்கலச் சொற்களையும் பொருத்தத்தையுங் கூறுவது. எந்த உபகாரி மேலேயாவது நூல் அல்லது தனிப்பாடல் செய்து பயனடைய எண்ணிய புலவர்களுக்குப் பொருத்தச் சொல்லை யாதொருவருத்தமுமின்றி எடுப்பதற்குச் சிறந்த கருவி இது; இதனால், நூலாசிரியரின்கருணை விளங்கும்.

**தத்தாத்திரேயப் பாட்டியலென்பதை** என்னுடைய தமிழாசிரியர்களுளொருவராகிய **செங்கணம், ஸ்ரீவிருத்தாசல ரெட்டியாரவர்க**

னிடம் பார்த்துப் பாடமுங் கேட்டிருந்தேன். அது விருத்தங்களாலமைந்துள்ளது, புத்தகம் எனக்குக் கிடைக்கவில்லை.

**சிதம்பரப் பாட்டியலை** இயற்றியவர் **பரஞ்சோதியா**ரென்பவர். இவர் சிறந்த தமிழ்ப் பண்டிதராகிய **திருமலை** என்பவருடைய குமாரர். இந்நூல் விருத்தங்களாலாகியது.

றி இன்னுஞ்சில இலக்கண நூல்கள் பல உள்ளன. அவற்றுள் **பிரயோக விவேகம்** என்பதொன்று. இஃது ஆழ்வார் திருநகரியிலிருந்த **சுப்பிரமணிய தீக்ஷித**ரென்பவராற் கலித்துறையாற் செய்யப்பெற்றது. இதற்கு உரைசெய்தவரும் இவரே. வடமொழியிலிருந்து தமிழில் வழங்கும் இலக்கணப் பாகுபாடுகள் இன்னவையென்பதும், தமிழுக்கே உரியன இன்னவென்பதும், இரண்டற்கும் பொதுவாக உள்ளன இவையென்பதும் தக்க ஆதாரங்களுடன் நன்றாக இந்நூலுட் காட்டப்பட்டுள்ளன. இந்நூலும் உரையும் இவர் இருமொழியிலும் மிக்க வல்லுநரென்பதைக் காட்டும். இந்நூலாசிரியர், "ஆழ்வார் திருநகரப்பதிவாழ் சுப்பிரமணிய வேதியன் றமிழ்ப் பிரயோக விவேகம், உரைத்துரை யெழுதினன்" என **இலக்கணக் கொத்துடையா**ரால் பாராட்டப்பெற்றுள்ளார். **இலக்கணக்கொத்து** என்றோரிலக்கண நூல் உண்டு. அது தமிழிலுள்ள இலக்கண இலக்கியங்களிலும் அவற்றின் உரைகளிலும் இலைமறைகாய்போற் காணப்படும் அரிய விஷயங்களைத் தொகுத்து மூன்று பாகுபாடு செய்து மிகத்தெளிவாகத் **திருவாவடுதுறையாதீனத்துச் சுவாமிநாத** தேசிகரால் சூத்திர ரூபமாக இயற்றப்பெற்றது. இதற்கு உரைசெய்தவரும் அவரே. வேற்றுமையிலக்கணம், வினையிலக்கணம், முதலியவற்றைத் தெரிந்துகொள்வதற்கு உபயோகமானது.

தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும் அந்நூல் முதற் சூத்திரத்திற்கும் விரிவுரை (பாஷ்யம்), திருவாவடுதுறையாதீனத்து வித்துவானாக விளங்கியவராகிய **ஸ்ரீ சிவஞானயோகிகள்** என்பவரால் இயற்றப்பெற்றது. இது தமிழ் கற்போர் யாவரும் படித்துணரற்பாலது.

இன்னும் **இரத்தினச் சுருக்கம், உவமானசங்கிரகம்** என்னும் இரண்டு நூல்கள் நூல் செய்பவர்களுக்குச் சிறந்த கருவிகளாக வழங்கி வருகின்றன. இவை இன்ன பொருளுக்கு இன்ன பொருளை உவமை கூறவேண்டுமென்பதையும் பிறவற்றையும் புலப்படுத்துவன.

**தருக்கசங்கிரகமும்** அதன் உரையாகிய **அன்னம்பட்டீயமும்** வடமொழியிலிருந்து முற்கூறிய **சிவஞானயோகிகளால்** மொழிபெயர்க்கப்பட்டு வழங்கிவருகின்றன. தருக்க சம்பந்தமான வேறு சில நூல்

கள் தமிழில் அதற்குமுன்னர்சில பெரியோர்களாற் செய்யப்பெற்றிருந்தன என்று தெரிகின்றது.

ஐந்திலக்கணங்களுள் இரண்டு ஒன்றைமட்டும் கூறும் நூல்கள் **சிற்றதிகாரம்** எனவும், ஐந்திலக்கணங்களையும் கூறும் நூல்கள் **பேரதிகார** மெனவும் வழங்கப்படும்.

இறையனாரகப்பொருள் முதலியன சூத்திரமென்னும் ஒருறுப்படக்கிய பிண்டமெனவும், பன்னிருபடலம் முதலியன சூத்திரம் இயல் என்னும் இரண்டுறுப்படக்கிய பிண்டமெனவும், தொல்காப்பிய முதலியன சூத்திரமும் இயலும் அதிகாரமும் என்னும் மூன்றுறுப்படக்கிய பிண்டமெனவும், இவற்றுள் தொல்காப்பியம் பெருநூலெனவும், அகத்தியம் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூன்றுறுப்பையுமடக்கி நிற்றலின் அது பிண்டத்தையடக்கிய வேறொரு பிண்டமெனவும் வழங்கப்படும்.

## இயற்றமிழ் இலக்கியம்.

**எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினென்கீழ்க்கணக்கு, சிற்றட்டகம், குணநாற்பது, முத்தொள்ளாயிரம், அரும்பைத்தொள்ளாயிரம், வச்சைத்தொள்ளாயிரம், ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுகாப்பியங்கள், தகடூர் யாத்திரை, இரும்பல் காஞ்சி** முதலிய பல சங்கநூல்களும் இயற்றமிழிலக்கியங்களுட் பழையனவாம்.

இடைக்காடனார் பாடிய **ஊசிமுறி** என்று ஒருநூல் இருந்ததாகத் தெரியவருகிறது. அதிலிருந்து சில பாடல்கள் மட்டும் நூற்பெயருடன் பழைய உரைகளிற் காணப்படுகின்றன. ஊசிமுறி யென்னும்பெயர், எழுதுங்காலத்தில் எழுத்தாணியாலெழுத முடியாத ஓசையையுடைய செய்யுட்களை யுடைமையாற் பெற்ற காரணப்பெயர். இதைப்போன்ற நூல்கள் வேறுவகையாகப்பல உள்ளன.

இவற்றையன்றிச் சைவவைணவ ஆருகத பௌத்த முதலிய சமயநூல்களும், அத்துவைதநூல்களும், இதிகாசங்கள் மகாபுராணங்கள் இவற்றின் மொழிபெயர்ப்பு நூல்களும், பலதலபுராணங்களும், சிற்பம் கணிதம் சோதிடம் வைத்தியம் நிமித்தம் முதலிய பலகலைகளுக்குரிய நூல்களும், பிற்காலத்துள்ளனவாகிய கூ௬-வகைப் பிரபந்தங்களைச் சார்ந்தனவாகிய ஆயிரக்கணக்கான நூல்களும் இயற்றமிழிலக்கிய மெனப்படும்.

தமிழிலக்கிய இலக்கணத்திறத்தில் சைனர்கள் செய்த உதவி மறக்கற்பாலதன்று. அவர்களுடைய சங்கங்கள் பாண்டிநாட்டில்

மதுரையிலும், சோழநாட்டில் தீபங்குடியிலும், கங்கநாட்டுள்ள பல வூர்களிலும, தொண்டைநாட்டிலும, கொங்குநாட்டிலும் இருந்தன வென்று தெரிகிறது.

பௌத்த சமயத்தார் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெருத்த உதவி செய்துள்ளாராக என்பதற்கு **மணிமேகலை, குண்டலகேசி, பிம்பசாரகதை** முதலிய நூல்களும், **வீரசோழிய**மென்னும் இலக்கண நூலும், அதன் உரையிலும் **நீலகேசிக்குச் சமயதிவாகர வாமன முனிவர்** இயற்றிய உரையிலும் காணப்படும் மேற்கோட் செய்யுட்கள் பலவும் நல்லநடையோடு கூடிச் சான்று பகருமாயினும **மணிமேகலையன்றி** வேறு இலக்கிய நூல்களுள் ஒன்றும் முழு நூலாக இக்காலத்துக் காணப்படடிலது. இது பெரிதும் வருத்தத்தை விளைவிக்கின்றது.

தமிழ்வகை மூன்றனுள் இசைநாடகங்களுக்கு இன்றியமையாததாகி அடிப்படையாக இருத்தலின் இயற்றமிழ் முன்வைக்கப்பட்டது.

## இசைத்தமிழ்.

இசைத்தமிழ்ப் பாகுபாடுகளையும் நாடகத்தமிழ்ப் பாகுபாடுகளையும் ஒருவாறு அறிந்து கொள்வதற்கு முற்கூறிய **சிலப்பதிகார**மும் **அ**தன் உரைகளுமேயன்றி இக்காலத்தில வேறு தக்க கருவிகள் இல்லை. சிலவிருப்பினும் அவற்றால் விஷயம் விளங்கப்புலப்பட வில்லை. ஆனாலும அவற்றைக்கொண்டு அறியவேண்டியவற்றைச் சுருக்கமாகச் சொல்லுவேன்.

சங்கீதவகையைப் புலப்படுத்தும இலக்கண நூல்களும் இலக்கிய நூல்களும இசைத்தமிழ் நூல்கள். **பெருநாரை, பெருங்குருகு, பஞ்சபாரதீயம், இசைநுணுக்கம், பஞ்சமரபு, தாளசமுத்திரம், சச்சபுடவெண்பா, இந்திரகாளியம், பதினாறுபடலம, தாளவகையோத்து, இசைத்தமிழ்ச் செய்யுட்டுறைக்கோவை** முதலாகப்பல பண்டைக் காலத்தில் இருந்தன வென்பர். இவற்றிற் சிலவற்றின் சூத்திரங்கள் நூற் பெயருடன் கிடைக்கின்றனவேயன்றி நூல்கள் கிடைக்கவில்லை.

இக்காலத்திற் சங்கீத சம்பந்தமாக வடமொழியில வழங்கும் ஸ்வரப்பெயர்களாகிய ஸட்ஜம, ரிஷபம, காந்தாரம, மத்தியமம, பஞ்சமம, தைவதம, நிஷாதம என்னும ஏழும் தமிழில் குரல, துத்தம, கைக்கிளை, உழை, இளி, விளரி, தார மென்பவற்றிற்குச் சரியானவை. இவ் வேழிலிருந்து உண்டாவனவே பண்களும திறங்களும். பண்கள் ஏழு ஸ்வரத்தோடுகூடிய இராகங்கள். இந்த இராகங்கள் ஸம்பூரண ராகங்களெனவும், ஜனகராகங்களெனவும், மேளகர்த்தாக்களெனவும் வடமொழியில் வழங்கப்படும்.

திறங்கள், பண்களுள் ஒவ்வொன்றிலிருந்தும் உண்டாகிப் பல வகைப்பட்டு வேறு வேறு பெயர்பெற்று வழங்கும்; இவை, ஏழிற் குறைந்த ஸ்வரங்களையுடையன வென்றும ஜன்னியராகங்களென்றும் கூறப்படும்.

" நிறைநரம் பிற்றே பண்ணெண லாகும்,
குறைநரம் பிற்றே திறமெனப் படுமே "

என்னும் திவாகரத்தாற் பண்ணினியல்பும திறத்தினியல்பும விளங்கும். இது பற்றியே செய்யுளிலக்கணத்தில வெண்பாமுதலிய பாக்களுக்குப் பண்ணையும, வெண்டாழிசை முதலிய இனங்களுக்குத் திறங்களையும் உவமை கூறியிருத்தல கூர்ந்துணர்றபாலது; இது,

" பண்ணுந் திறமுமபோற பாவு மினமுமாய்
வண்ண விகறப வகைமையால பண்ணின்
திறமவிளரிக் கிலலதுபோற செபபா லகவ
லிசைமருட்கு மிலலை யினம "

என்பதனுலும அறியலாகும. (மருள் - மருடபா)

பண்களின் வகைபல. அவற்றுள் புறநீரமை முதலிய பண்கள் பன்னிரண்டும் பகற்பண்களெனவும, தக்கராக முதலிய ஒன்பதும் இராப்பண்களெனவும், செவவழி முதலிய மூன்றும பொதுபபண்க ளெனவுங் கூறப்படும. இரங்கற்பண் விளரியெனபா. இராவணன் அகங்காரத்தாற கைலைமலையை முதலிற்பெயாததுப பின்பு பரமசிவ ளுல் துன்புறுத்தப்பெற்று அவருக்கு இரக்கமுண்டாக இப்பணணைப பாடியுய்ந்தானென்று, " விராய்மலாப்பூங் குழலியங்கன் மகிழவி ஞேங் கும் வெள்ளிமலைக் கீழ்க்கிடந்து விளரி பாடும, இராவணன்" என்பதனுல ஒரு பெரியார் தெரிவித்திருக்கின்றனா. அன்றியும பகல இரவிரண்ட னுள் இன்ன இன்ன யாமத்திற்குரிய பண்கள் இவை என்பதும, ஒன் பது சுவைகளுள் இன்ன சுவைக்குரியபண் இது வென்பதும, நாலு வருணங்களுள் இன்ன வருணத்திற்குரியது இனனதென்பதும இசை நூலகளிற் கூறப்பெற்றுள்ளன.

பின்னும் பண்கள் பெருமபண்கள், குறிஞ்சிமுதலிய ஐந்திணைக்கு முரிய பண்கள், சிறுபொழுது பெருமபொழுதாகிய அவ்வாறற்குமுரிய பண்கள் முதற் பலவகைப்பட்டு வழங்கும். இந்தமுறை தவருமல் பழைய நூலாசிரியர்கள் தமமுடைய நூல்களில் அமைத்துக் கொண்டே செல்வார்கள்; கூர்ந்து பார்ப்பின் விளங்கும்.

இப்பண்களாலாகிய பாட்டுக்கள் (கீர்த்தனங்கள்) உருக்கள், வரிகள் முதலிய பெயர்களால் வழங்கும்; அவை தாளஅளவிற்கு ஏற்ற

குறிலும் நெடிலும் இசையின் வலிவு முதலிய ஓசைக்கேற்ற ஓசையுள்ள எழுத்துக்களுமமைந்த தமிழ்ச்சொற்களால் இயற்றப்பெற்றிருத்தலோடு வேறுபாஷைக்குரிய சொற்களும் இடத்திற்கு ஏற்றவாறு அமைக்கப் பெற்றிருத்தல்வேண்டும்; இங்ஙனமே விதிகளும் இலக்கியங்களுமுள்ளன.

அவை பததுவகைப்படுமென்று ஒரு சாரார்கூறுவர். அவை செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறுதேவபாணி, முத்தகம், பெருவண்ணம், ஆற்றுவரி, கானல்வரி, விரிமுரண், தலைபோகுமண்டிலம் என்பன.

தாளக்கிரியையுடன் பொருந்தும் பாக்கள் ஒன்பது. அவை சிந்து, திரிபதை, சவலை, சமபாதவிருத்தம, செநதுறை, வெண்டுறை, பெருநதேவபாணி, சிறுதேவபாணி, வண்ணமென்பன.

எந்தககாலத்திற்கு எநதப்பண்ணைப பாடவேண்டுமோ, அதையே தவறின்றிப பாடவேண்டும. அங்ஙனம பாடினாலன்றிக் கேட்கும மனிதாககும விலங்குகளுககும பறவைகளுககும இன்பம பிறவாது; தவறிப்பாடுவாராயின் அது குற்றமென்று அறிஞரால நினைக்கப்படும்.

விலங்குகளுள் யானையும அசுணமாவும, ஊர்வனவற்றில பாம்பும இசையறிவிற் சிறநதவை யென்றும யானை இசைக்கு வணங்குமென்றுங் கூறுவர். யானைககு இததன்மையுளதாதலை,

"காழ்வரை நிலலாக் கருஙகளிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்கு"

என்னுங் கலியாலும,

"அணியிழை மகளிரும் யானையும் வணக்கும்
மணியொலி வீணையும்"

என்னும் பெருங்கதையாலும்,

"ஐம்புல வேழத்தின் வெந்தொழில வீயக்
கருணை வீணை காமுறத் தழீஇ"

என்னும் ஞானமிர்தத்தாலும்,

"மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மத்தப்
புகர்முகக் களிற்றின்"

என்னும் மேருமந்தர புராணத்தாலும அறியலாகும். பின்னும்,

"ஒலியல் வாரமயி ருளரினள கொடிச்சி
பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
மறம்புகன் மழகளி றுறங்கு நாடன்"

என்னும் **அகப்பாட்டாலும்** இது விளங்கும். ஒரு குறமகள் குறிஞ்சிப் பண்ணைப்பாட ஒரு யானை தினைக்கதிரை உண்ணுமலும் புடைபெயரா மலும் அப்பண்ணைக்கேட்டு மனமுருகி நின்று உறங்கிய தென்பது இதிற்கண்ட பொருள். அசுணமாவிற்கு இசையுணர்ச்சி யுண்மை,

> " இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்
> திருங்கல் விடரளை அசுண மோர்க்கும் "

என்னும் **அகப்பட்டாலும்**,

> " இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா
> அன்ன ளாய் மகிழ்வெய்து வித்தாள் "

என்ற **சிந்தாமணிச் செய்யுளாலும்**,

> " யாழ் நறை யடுத்த அசுணநன்மா "

என்னுங் **கம்பராமாயணச் செய்யுளாலும்** விளங்கும.

பாமபிற்கு இசையுணர்ச்சியால இன்பமுண்டாதல யாவர்க்குந் தெரிந்ததே.

மழையின்மையால் பயிர்கள் தீந்து சனங்கள் உணவில்லாமல் வருந்து வதைக்கண்ட **திருச்சிற்றம்பல தேசிகர்** என்னும பெரியாரொருவர் தம்முடைய பூசையில் **மேகராகக்குறிஞ்சி** யென்னும பண்ணமைந்த தேவாரங்களை ஓதுவிக்கச் செய்ய உடனே மழைபெய்யத் தொடங்கி நாட்டின் துன்பத்தை நீக்கியதென்றும அதனை அறிந்த சேதுபதி வேந்தரொருவர் அவரிடம நன்றி பாராட்டித் தமது ஸமஸ்தானத்தி லுள்ள **வெள்ளக்குளம்** முதலிய சிலகிராமங்களை யளித்தனரென்றும அங்ஙனமளித்தகாலத்தில எழுதிய பட்டயத்தில இவ்வரலாறு எழு தப்பட்டிருக்கிற தென்றும நான் கேள்வியுற்றிருக்கிறேன். அந்தத் திருச்சிற்றமபல தேசிகர் **திருவாவடுதுறை யாதீன** கர்த்தர்களாக முன்பு விளங்கியவர்களில் ஒரு பெரியார். அவர் அவதரித்த இடம சென்னைக்கு அருகிலுள்ள அருமபாக்கம என்னும கிராமம்; அதில் இப்போது ஒரு மடம இருக்கிறது.

மாலைக் காலத்திற்குரியது செவ்வழிப்பண்; நாட்காலைக்குரியது மருதப்பண். மாலையையுங் காலையையும வருணிக்கும பொழுது, **மதுரைக்காஞ்சி**யில் முறையே. " திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி " எனவும், " யாழோர் மருதம பண்ண " எனவும் செவ்வனே கூறியிருத்தல் அறியற்பாலது. இவற்றை ஓரிசையாளர் காலம் பிறழ்ந் து பாடிய பொழுது அப்பிறழ்ச்சிக்குக் காரணம, **கள்ளி** யென்பவன் அவருக்குக்கொடுத்த பெருங் கொடையாலுண்டாகிய செல்வச் செருக்

யென்று வேறொரு புலவர் அந்தவள்ளலை நோக்கி நயம்படக் கூறிய புறப்பாட்டு இங்கே ஞாபகத்துக்கு வருகின்றது;

"நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தனர் அது நீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே."

இப்பண்களையமைத்துப் பெரியோர் முற்காலத்துப் பாடிய பலவகையான உருக்களிற் பெரும்பாலன இறந்துபோயின. உரைகளில் மேற்கோள்களாகக் காணப்படுஞ் சில உருக்கள் படிக்கப்படுமுறை தெரியவில்லை. ஆதலால் வேறுவகையாகப் பண்டைக்கால முறையையுடையனவாய் நூல்களிலுள்ளனவாய்ப் பாடப் பட்டுவரும் பகுதிகளுட் சிலவற்றின் பெயர்களை இங்கே தெரிவிப்பேன்:

அவை அக்கைச்சி, அச்சோ, அப்பூச்சி, அம்மானை, ஆற்றுவரி, இம்பில, உந்தியார், ஊசல், எம்பாவை, கப்பற்பாட்டு, கழல், கந்துகவரி, காக்கை, காளம், கானல்வரி, கிளிப்பாட்டு, குணலை, குதம்பை, குயில், குரவை, குறத்தி, கூடல், கொச்சகச்சார்த்து, கோத்தும்பி, கோழிப்பாட்டு, சங்கு, சாயல்வரி, சார்த்துவரி, சாழல், செம்போத்து, தச்சராண்டு, தச்சாண்டி, தாலாட்டு, திணைநிலைவரி, திருவங்கமாலை, திருவந்திக்காப்பு, தெள்ளேணம், தோணோக்கம், நிலைவரி, நையாண்டி, பகவதி, படைப்புவரி, பந்து, பல்லாண்டு, பல்லி, பள்ளியெழுச்சி, பாம்பாட்டி, பிடாரன், பொற்சுண்ணம், மயங்குதிணைநிலைவரி, முகச்சார்த்து, முகமில்வரி, முகவரி, மூரிச்சார்த்து, வள்ளைப்பாட்டு முதலியன. இவையன்றிச் சித்தர் பாடல்களில் வழங்கும் பலவகை இசைப்பாட்டுக்களும், நொண்டிச்சிந்து, சிந்து முதலியவைகளும், கும்மி, கோலாட்ட முதலியவைகளும், பலவகையான கண்ணிகளும், ஆனந்தக்களிப்பு, கீர்த்தனங்கள் முதலிய பலவும் இசைப்பாட்டுக்களைச் சேர்ந்தனவே. இவற்றுட் சிலவற்றிற்கு மாத்திரம் உதாரணங்கள் கூறுவேன்.

ஓதுமாயை யென் னக்கைச்சி யொப்பிலானென்
றூற வுற்றபோதே கெட்டேன்
போதந் தானுஞ் சுமையென்று வீதில்
போதத்தில் விட்டனு போகத்திருந்தானே. (தத்துவராயர் பாடுதுறை)

## அச்சோ.

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைநல மறிவித்து முதலாய முதல்வன்றா
னம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
வம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (திருவாசகம்)

அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோ ரம்மானை
தம்மனையிற் பாடுந் தகையெலாந் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேற் கூடவே யம்மானை
கொம்மை வரிமுலைமேற் கூடிற் குலவேந்த
னம்மென் புகார் நகரம் பாடேலோரம்மானை.
(சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை)

## ஆற்றுவரி.

உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம் வாயகாவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி.
(சிலப்பதிகாரம், கானல்வரி)

## உந்தியார்.

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புர முந்தீபற
வொருங்குடன் வெந்தவா றுந்தீபற. (திருவாசகம்)

## ஊசல்.

தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
யெங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (திருவாசகம்)

## எம்பாவை.

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்

# II. முத்தமிழ்

சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி யப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
யாதி திறம்பாடி யந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய். (திருவாசகம்)

துன்னிவந்து கைத்தலத் திருந்ததில்லை நீணிலந்
தன்னினின்று மந்தரத் தெழுந்ததில்லை தானெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்று பந்தடித்துமே
தேவரார மார்பன் வாழ்க வென்று பந்தடித்துமே.
(சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை)

## காக்கை.

கரையாய் காக்கைப்பிள்ளாய்
கருமாமுகில போலநிறத்தன
உரையார் தொல்புக ழுத்தமனைவரக்
கரையாய் காக்கைப்பிள்ளாய். (பெரியதிருமொழி)

## கிளி.

சொல்லாய் பைங்கிளியே
சுடராழி வலனுயர்த்த
மல்லார்தோள் வடவேங்கடவனைவரச்
சொல்லாய் பைங்கிளியே. (பெரிய திருமொழி)

## குரவைப் பாட்டு.

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுந் திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே.
(சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை)

சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்று
மேரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மாத் தடிந்த சுடரிலைய வெள்வேலே. (சிலப்பதிகாரம், குன்றக்குரவை)

## கோத்தும்பி.

தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைந்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்பொழுது

## சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.

மனைத்தெதுவும் புண்ணைக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (திருவாசகம்)

### சாயல்வரி.

அன்னந் துணையோ டாடக் கண்டு
நென்ன ஞேக்கி நின்றா ரொருவர்
நென்ன ஞேக்கி நின்றா ரவாநம்
பொன்னேர் சுணங்கிற் போவா ரல்லர். (சிலப்பதிகாரம், கானல்வரி)

### தாலாட்டு.

மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே
தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய் செம்பொன்சேர்
கன்னிநன்மா மதில்புடைசூழ் கணபுரத்தென் கருமணியே
என்னுடைய வின்னமுதே இராகவனே தாலேலோ. (பெருமாள் திருமொழி)

### தெள்ளேணம்.

விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து
மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோங்
கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்
தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. (திருவாசகம்)

### பல்லாண்டு.

அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்குமப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே.
(பெரியாழ்வார் திருமொழி)

### முரிச்சார்த்து

மோது முதுதிரையான் மொத்துண்டு போந்தசைந்த
முரல்வாய்ச் சங்கம்
மாதர் வரிமணன்மேல் வண்டல் லுழுதழிப்ப
மாழ்கி யைய
கோதை பரிந்தசைய மெல்விரலாற் கொண்டோச்சுங்
குவளை மாலைப்
போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப்
புகாரே யெம்மூர். (சிலப்பதிகாரம், கானல்வரி)

## வள்ளைப்பாட்டு.

*பாடல்சால் முத்தம் பவழ வுலக்கையான்*
*மாட மதுரை மகளிர் குறுவரே*
*வானவர்கோ னாரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்*
*மீனக் கொடிபாடும் பாடலே பாடல*
*வேப்பந்தார் நெஞ்சுணக்கும பாடலே பாடல.*

(சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை)

## குதம்பை.

வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்குப்
பட்டய மேதுக்கடி-குதம்பாய்
பட்டய மேதுக்கடி. (குதம்பைச்சித்தர் பாடல்)

## கண்ணிகள்.

*எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்*
*புண்ணாகச் செய்ததுவும் போதும் பராபரமே.*
*ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞான*
*தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ.* (தாயுமானவர் பாடல்)

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பனவும், திவ்வியப்பிரபந்தமும், திருப்புகழும் இசைப்பாட்டே. அவற்றில் அமைந்துள்ள இசைவகைகளைப் புலப்படுத்தும் "**தேவகானம்**" என்ற இசையிலக்கண நூலொன்று முன்பு இருந்ததாகக் கேட்டிருக்கிறேன். இசையில், சந்தாவர்த்தக மென்பதொன்றுண்டு. அஃது இடைமடக்காய் வருவது. அவ்வகையான செய்யுட்கள் தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம் முதலியவற்றிற் காணப்படுவதன்றிச் சிலப்பதிகாரம், சிந்தாமணி, சூளாமணி முதலியவற்றில் துதிவடிவமாக உள்ள இடங்களிலும் சிறுபான்மை வேறிடங்களிலும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. இவ்வழியைப் பின்பற்றிய **பரஞ்சோதி முனிவரும் திருவிளையாடற் புராணத்தில்** துதிவடிவமாக உள்ள செய்யுட்களைச் சில இடங்களில் அமைத்திருக்கின்றனர். அவற்றிற் சில வருமாறு:

## தேவாரம்.

**விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய**
**சுண்ணவெண் பொடியணிவீரே**
**சுண்ணவெண் பொடியணி வீருமை தொழுகழ**
**வெண்ணவல் லாரிடரிலரே.**

## திருவாசகம்.

கண்ணஞ் சனத்தர் கருணைக்கடலின
ருண்ணின் றருக்குவ ரன்னே யென்னு
முண்ணின் றருக்கி யுலப்பிலா வானந்தக்
கண்ணீர் தருவரா லன்னே யென்னும்.

## சீவகசிந்தாமணி.

அடியுலக மேத்தி யலர்மாரி தூவ
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் யாரே
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் மூன்று
கடிமதிலுங் கட்டழித்த காவலனீ யன்றே.

## திருவிளையாடற் புராணம்.

(௧) விரைசார் மலரோ னறியா விகிர்த
னரைசாய் மதுரை யமர்ந்தா னென்னே
அரைசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே.

(௨) குடங்கை நீரும் பச்சிலையு
மிடுவோர்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந்
தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந்
தருவாய் கையிற் படுசிலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென்
றேசு பவர்க்கென் பேசுவனே.

பிற்காலத்தில் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களில் குறவஞ்சி, பள்ளு, சிந்து என்பவைகளிலும் இசைப்பகுதிகள் பல அமைக்கப்பட்டுள்ளன. பழைய சரித்திரங்களை இசைவழியால் தெரிவித்தல் நலமென்று தமிழ்ப் புலவர்களிற்பலர் காந்தம், இராமாயணம், பாரதம், பாகவதம், திருவிளையாடல், பெரியபுராணம் முதலியவற்றைக் கீர்த்தனம் முதலியவற்றின் வடிவமாகச்செய்து வெளிப்படுத்தி இசைவளத்தைப் பெருக்கியதன்றி அதன்முகமாகப் பக்தியையும் சமாதானத்தையும் ஒற்றுமையையும் உண்டாக்கி மகிழ்வித்துப் புகழ்பெற்றார்கள்; அங்ஙனம் செய்யப்பெற்ற நூல்கள் பல. தங்கள்தங்களுடைய உபாஸனா தெய்வங்களைத் துதித்தல் முகமாகத் தனிக்கீர்த்தனங்கள் முதலியவற்றைச் செய்தோர் மிகப்பலர். சாஸ்திரக்கருத்துக்களை யமைத்துக் கீர்த்தனங்கள் செய்தோர் புலர். அவர்களிற் பெண்பாலாருமுண்டு. அவை கேட்பவருடைய உள்ளத்தை நல்வழியிற் புகுத்திவிடு மென்ப

திற் சிறிதும் ஐயமின்று. அங்ஙனம் செய்தவர்களில் **மேலகரம் திரிகூடராசப்பக்கவிராயர்**, கும்பகோணம் **பாபநாச முதலியார்**, பச்சைமிரியன் **ஆதிப்பையர்**, சீகாழி **அருணாசலக்கவிராயர்**, பெரியதிருக்குன்றம் **சுப்பராமஐயர்**, **கனம் கிருஷ்ணையர்**, உத்தமதானபுரம் **லிங்கப்பையர்**, **ஓதனவனேசுவரஐயர்**, சீகாழி **முத்துத்தாண்டவராயர்**, கொட்டையூர் **சிவக்கொழுந்து தேசிகர்**, தில்லைவிடங்கன் **மாரிமுத்துப்பிள்ளை**, பெருங்கரைக் **கவிகுஞ்சரபாரதி**, வேளூர் **சுப்பராமையர்**, திருநயம் **அப்பாவையர்**, வேட்டகுடி **பாரதிகள்**, திருக்கடவூர் **அபிராமிபட்டர்**, வையை **இராமசாமி ஐயர்**, வையை **மகாவைத்தியநாதையர்**, முடிகொண்டான் **கோபாலகிருஷ்ண பாரதிகள்**, மாயூரம் **வேதநாயகம் பிள்ளை**, பழனி **மாம்பழக்கவிச் சிங்கநாவலர்**, அரியலூர் **சண்பகமன்னார்**, தொட்டிக்கலை **சுப்பிரமணிய முனிவர்**, சென்னிகுளம் **அண்ணாமலை ரெட்டியார்** முதலியோர் முக்கியமானவர்கள்.

இனி வாத்தியங்களைப்பற்றிச் சில சொல்லுவேன்.

## வாத்தியங்கள்.

**வேய்ங்குழல்** முதலிய வாத்தியங்கள் பல இருந்தன. அவற்றுள் வேய்ங்குழலையே முதன்மையுள்ளதாகப் பகுத்து வந்தார்கள். காற்றானது காட்டில் வளர்ந்திருக்கும் மூங்கிலொன்றின் துளைகளுள் ஒன்றிற்புகுந்து மற்றொன்றிற் புறப்படும் பொழுது இயல்பாக உண்டாகிய இசையின் இயற்கையைக்கண்டு வேய்ங்குழலை முதலிலும் அதன்வழியே பின்னர் மற்ற வாத்தியங்களையும் அமைத்தனரென்று தெரிகிறது. அன்றியும் வீக்குங்கருவி முதலியவற்றுள் நரம்புகள் அடிக்கடி வேறுபட்டு யாழ் முதலியவை செப்பஞ்செய்யப்படுதல் போலாது இயற்கைநலம் வாய்ந்து சுரவேறுபாடு யாதுமின்றி இசையைத் தெரிவிக்கும் மேம்பாட்டையுடையது என்பதும் வேய்ங்குழல் முதலிற் கூறப்பட்டிருத்தற்குக் காரணமாயிருத்தல் கூடும். இதுபற்றியே,

"குழல்வழி நின்றது யாழே யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே முழவொடு
கூடிநின் றிசைத்த தாமந் திரிகை"

எனச் சிலப்பதிகாரத்தும்,

"குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர்
முழவியம்ப லாமந் திரிகை"

எனக் **கூத்தநூலி**னும் வேய்ங்குழலை முதலில் வைத்துக் கூறினர் போலும்.

மூங்கிலாற் செய்யப்பட்டதுதான் வேய்ங்குழலெனப்படும். புறக்கா ழுடையது மூங்கிலாதல் பற்றி அதுவே புல்லாங்குழலெனவுங் கூறப்படும்; "புறக்கா ழெல்லாம் புல்லெனப் படுமே" என்பது **தொல்காப்பியம்**. சிலர் இதைப் புள்ளாங்குழலென்பா; அது பொருந்தாது.

ஆம்பற் பூவைப்போலப் பொன்னால் அணிசுபண்ணி விளிம்பிற் சேர்க்கப் பெற்றிருத்தலின் ஆம்பற் குழலெனவும், கொன்றைப்பழத்தைத்துருவி ஊதுதற்கமைந்ததாகச் சமைத்து ஊதப்படுதலின் கொன்றைக்குழலெனவும் இது வேறு பெயராலும் வழங்கும். இதற்குரியமரங்கள் முதலியவைகளும் இலக்கணங்களும் குணமும் குற்றமும் இன்னவையென்று **சிலப்பதிகாரம்** முதலியவற்றின் உரைகளாலும் அவற்றில் எடுத்துக் காட்டப்பட்டுள்ள மேற்கோள்களாலும் விளங்கும்.

இது மூங்கிலால் முதலிற் செய்யப்பெற்றிருந்தமையின் வங்கியமென்றும் வழங்கப்படும். (வங்கியம்-வம்சம், மூங்கில்; வடமொழிப் பெயர்.) இவ்விதிகளைப் பின்பற்றியே ஆனாயநாயனார் புராணத்திற் சேக்கிழார் வேய்ங்குழலின் இயல்பை நன்கு புலப்படுத்தியிருக்கின்றனர்.

**யாழும் வீணையும்** ஒன்றென்பர். இவை பழைய நூல்களில் வேறுபடக் கூறப்பட்டிருக்கின்றன. பிரமவீணை என்பதொன்று **பரிபாடலிற்** காணப்படுகிறது.

யாழ் நான்கு வகைப்படும். அவற்றுள் பேரியாழ் 21-நரம்பையும், மகரயாழ் 19-நரம்பையும், சகோடயாழ் 14-நரம்பையும், செங்கோட்டியாழ் 7-நரம்பையும் உடையன. ஆதியாழ் என்ற பெயருடைய யாழொன்று பழைய நூல்களிற் காணப்படுகின்றது. அஃது ஆயிரம் நரம்பினையுடைய தென்பா; அதற்கு அருங்கலமென்றும் மற்றொரு பெயருண்டு. யாழின்வகை இன்னும்பல; இதற்குரிய மரத்தினிலக்கணம், நரம்பினிலக்கணம், குணங்கள், குற்றங்கள் முதலியவற்றை மிகவிரிவாக முன்னோர் எடுத்துக்காட்டியிருக்கின்றனர். அவை **சிலப்பதிகாரத்திலும், பெருங்கதையிலும், சிந்தாமணியிலும்** காணப்படும்.

நரம்பு என்றது தந்தியை. ஒற்றை நரம்பையுடைய யாழும் அக்காலத்திலிருந்து வந்தது. நின்ற நரம்பிற்கு எட்டாவது நரம்பு இணையென்றும், ஆறாவது பகையென்றும், ஐந்தாவது கிளையென்றும், நான்காவது நட்பென்றும் கூறப்படும். யாழில் வல்லோர் இவற்றால் தங்கள் கருத்தை இசையறிந்தவர்களுக்குப் புலப்படுத்தியும் வந்தார்கள். இன்ன இன்னகாலத்தில் இன்ன இன்னயாழை வாசிக்கவேண்டுமென்ற முறையுமிருந்து வந்தது.

"யாமநல்யாழ் நாப்பண்"

(மதுரைக்காஞ்சி,)

"விரல் கவர்ந்துழந்த கவர்வின் நல்யாழ், யாமமுய்யாமை"

(நற்றிணை),

"யாமயாழ் மழலை யாள"

(கம்பராமாயணம்)

என்பவற்றால் யாமயாழென்று ஒன்றிருந்தமை அறியலாகும். யாழிலிருந்து பாலைப்பண்கள் பிறக்கும் என்பர். அவை செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கொடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை யென்பன.

பின்னும் இந்தயாழ் குறிஞ்சியாழ், பாலையாழ், முல்லையாழ், மருதயாழ், நெய்தலயாழ் என ஐந்து வகையாகவும் வழங்கப்பட்டு வந்தது. இவற்றிற் பாலையாழின் இசையைக் கேட்கும்பொழுது, வழிப்பறி பறித்தற்குப் பாலை நிலத்தில் உலாவித்திரிகின்ற ஆறலை கள்வர் கையிலுள்ள ஆயுதத்தை எறிந்துவிட்டுத் தாம்செய்யுந் தீயசெயலையு மறந்து இன்புறுவார்கள். இஃது,

"ஆறலை கள்வர் படைவிட அருளின், மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை"

என்பதனால் விளங்கும்.

மதங்கொண்டு உச்சயினி என்னும் மகா நகரத்தைக் கலங்கும்படி செய்து யார்க்கும் அடங்காமல் ஊரையழித்துத் திரிந்த நளகிரியென்னும் பட்டத்துயானையை உதயணன் யாழ்வாசித்து அடக்கித் தன்னேவல் செய்யும்படி செய்து யாவருக்கும் விம்மிதத்தை உண்டாக்கினனென்று மிகவும் அழகாகப் பெருங்கதையில் ஒரு வரலாறு காணப்படு

**முழவு** ஒருவாத்தியம். அஃது அகமுழவு முதல் நான்கு வகைப்படும். அவற்றுள் அகமுழவு மத்தளம் முதலாக ஏழென்றும், அவை உத்தமமான கருவிகளென்றும், அகப்புறமுழவு தண்ணுமை முதலிய மூன்றென்றும், அவை மத்தியமமான கருவிகளென்றும், புறமுழவு கணப்பறையென்றும், அஃது அதமமான கருவியென்றும், புறப்புறமுழவு நெய்தற்பறை யென்றும் கூறப்படும். நெய்தற்பறை இரங்கற்பறை. பின்னும் முரசு, நிசாளம், துடுமை, திமிலை என்பவை நான்கும் வீரமுழ வென்பர். நாழிகை முழவென்றும், காலை முழவென்றும் இரண்டு முழவுகள் காணப்படுகின்றன. இவை காலத்தைத் தெரிவிப்பனவைகள். யாமங்கள் தோறும் கொட்டப்படும் பறைகளுமுண்டு.

வாதியங்களுள் மத்தளமென்பது மத்தென்னும் ஓசையையுடைய தென்றும், சல்லிகை யென்பது சல்லென்னும் ஓசையையுடைய தென்றும், ஆவஞ்சியென்பது ஆவினது வஞ்சிததோலாற் போர்க்கப்பெற்ற தென்றும், இடக்கை என்பது இடக்கையினலடிக்கபபடுவதென்றும், கரடிகையென்பது கரடி கததினுற்போலும் ஓசையையுடைய தென்றும் பெயர்க்காரணங்களை **அடியார்க்கு நல்லார்** தெரிவிக்கின்றுர்.

பின்னும் மத்தளம முதற் கருவியாகவும், சல்லிகை இடைக் கருவியாகவும், உடுக்கை கடைக்கருவியாகவும கூறபபடும்.

முரசு என்னும் ஒருவாதியம மிககபெருமை வாய்நதது. இஃது அரண்மனையில அரசராற் பூசிக்கபபெற்றும வந்தது. அரசா பகைவ ரோடு போர்செய்யப போவதற்குமுன் நல்லவேளைபாாதது இதனை யனுப்புவது வழக்கம. அசசெயலுககு முரசு நாட்கோளென்பது பெயர். இது **புறநானூறு** முதலியவற்றுல் விளங்கும். அன்றியும மண முரசு, கொடைமுரசு, வீரமுரசு என மூன்றுவகையு முண்டு. இவற் றைக் கொட்டுதறகுரிய சாதியார் வேறு வேருக இருநது வநதனா.

இன்னும சிறுபறை, கஞ்சதாளம, கொம்பு, நெடுவங்கியம், குறுநதூமபு, தட்டை, சலலி, ஒருசண்மாககிணை முதலாகப பற்பல வாத்தியங்கள் இருநதனவென்று **பத்துப்பாடல்** முதலியவறறுல் தெரி கின்றது. பலவாத்தியங்களையும் விளங்கத தமதுபாட்டில தெரிவிததது பற்றியே சங்கபபுலவருள ஒருவா **நெடும்பல்லியத்தனுர்** என்று பெயா பெற்றனா.

இன்னும் இவைபோன்ற வாதியவகைகளும அவைகளைப்பற றிய பிறவிஷயங்களும உண்டு.

புலவர்களில இயல இசைநாடகம மூன்றிலும வலலுநா் எனப் பலரிருததல் கூடும. இரண்டொன்றில வலலுநராயிருநததுபற்றிச் சிறப பெய்தியவர்கள் சிலருளர்.

இசைத்தமிழிற் புகழ்பெற்ருோ கண்ணகனா, கண்ணனுகனா், கேசவனுா, நநநாகனா, நலலசசுதனா, நன்னுகனா, நாகனா, பிததாமத் தர், பெட்டனுகனா, மருததுவனல்லசசுதனா முதலியோா. இயலிலும் இசையிலும புகழ்பெற்ருோ கேசவனா, நல்லச்சுதனா் முதலியோர். நாடகத்திற் பெயர்பெற்ருேர் மதுரைததமிழ்க் கூத்தனுா் முதலியோர்.

வாய்ப்பாட்டிலும், யாழ்முதலிய வாத்தியங்களிலும், கூத்து முதலி யவற்றிலும் பயின்று பரமபரையாகவே உரிமையுற்று அரசர் முதலிய வர்களிடம் சென்று பரிசுபெற்றுவரும் சாதியார் முன்பு இந்நாட்டில்

இருந்துவந்தனர். அவர்களுள் இசை முதலியவற்றில் வல்லுநராக இருந்தசாதியார் பாணர். அவர்கள் பெரும்பாணர், சிறுபாணர் என்னும் பிரிவினரா யிருந்ததன்றி இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் என்ற பிரிவினராகவும் இருந்து வாழ்ந்துவந்தனர். அவர்களுடைய பெண்பாலார் ஆடல் பாடல்களில் வல்லுநராயிருந்ததன்றி அவ்வக்காலத்திற்கேற்ப ஒன்பதுசுவைகளையும் புலப்படுத்தி ஆடும்பெருமைவாய்ந்தும் விளங்கிவந்தார்கள். அவர்களுக்கு விறலியர் என்று பெயர். விறல்-சத்துவம். பாடுவோர்க்குப் பாடினியரென்றும் பாணிச்சியரென்றும் பெயருண்டு.

பொருநர் என்று ஒருசாதியார் உளர். அவர் கூத்தர்வகையினர். பொருநுதல் - ஒருவர்போல வேடங்கொள்ளுதல். அவர்கள் கூத்திலன்றிப் பாடுதலிலும் திறமையை யுடையவர்களாக இருந்துவந்தார்கள்; ஏர்க்களம்பாடும் பொருநர், போர்க்களம்பாடும் பொருநர், பரணிபாடும் பொருநர், கிணைப்பொருநர் என அவருட்பலவகையினர் உண்டு.

## நாடகம்.

இலக்கிய இலக்கண வகைகளில் இயற்றமிழின் சார்பாகப் பல நூல்கள் தமிழ்நாட்டில் மிகுதியாகக் காணப்படுதல் போல நாடகத் தமிழின் சார்பாக முற்கூறிய இரண்டுவகைகளிலும் ஒரு நூலாவது முழுவடிவமாக இக்காலத்தில் இந்நாட்டிற் காணப்படவில்லை. இசைத்தமிழுக்குக் கிடைத்த கருவிநூல்கள் கூட இதற்குக் கிடைக்கவில்லை. **சிலப்பதிகார**வுரையில், "நாடகத்தமிழ்நூலாகிய **பரதம் அகத்திய** முதலிய தொன்னூல்களும் இறந்தன. பின்னும் **முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றிய** மென்பனவற்றுள்ளும் ஒரு சாரார் சூத்திரங்கணடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தனபோலும்" என இறந்த நாடகத்தமிழ் நூல்களின் பெயர்களை எழுதிக்கொண்டு சென்ற **அடியார்க்குநல்லார்** தம்முடைய காலத்து வழங்கியனவாகத் தெரிவித்துள்ள **இசை நுணுக்கம், இந்திரகாளியம், பஞ்சமரபு, பரதசேனாபதீயம், மதிவாணர் நாடகத்தமிழ் நூ**லென்பவைகளுங்கூட இக்காலத்துக்கிடைத்தில. ஆதலால் பழைய நூல்களிலும் உரைகளிலும் அங்கங்கே காணப்படும் குறிப்புக்களைக் கருவியாகக்கொண்டு சிலவற்றைச் சொல்லுவேன்.

**சங்ககாலத்தில் நாடக இலக்கியங்களும் இலக்கணங்களும் மிகுதியாக இருந்தனவென்றும், அவற்றுள் இலக்கியங்கள்சில நாடகக் காப்பியங்களென்ற பெயர்கொண்டு வழங்கிவந்தன வென்றும், நாடகக் காட்சி எல்லாராலும் கண்டு இன்புறப்பெற்றுவந்ததென்றும், காண்**

போர் குழுக்கள் மிகுதியாக வந்தனவென்றும், அந்நாடகம் இசைப்பாட்டோடும் யாழ்க்கருவியோடும்கூடி விளங்கிவந்ததென்றும், அரசர்களின் மாளிகைக்கு நடிக்குங் கூத்தக்குழாங்கள் சென்று நடித்து அவர்களால் ஆதரிக்கப்பெற்றுவந்தாரென்றும், நாடக நூல்களின் ஆழ்ந்த கருத்துக்களைக் கூர்ந்துணர்ந்து அக்காலத்தவர் இன்புற்று வந்தனரென்றும் பின்வரும் வாக்கியங்கள் தெரிவிக்கின்றன:

"பாடலோர்த்தும் நாடகம் நயந்தும்" (பட்டினப்பாலை.)

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செலவம்
போக்கு மதுவிளிந் தற்று" (திருக்குறள்.)

"பண்கனியப்பரு கிப்பயனுடகம
கணகனியக் கவர்ந்தணடு",

"நாடக நூற்களுற்றது",

"நாடக மியற்றுகின்றார்",

"இளைநரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந்து" (சீவகசிந்தாமணி.)

"ஆடற் கூத்தினோ டவினயந் தெரிவோர்
நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்
பாடல்சால சிறப்பிற் பரதத் தோங்கிய
நாடகம் விரும்ப" (மணிமேகலை.)

"இசையொடு சிவணிய யாழினூலு
நாடகப பொருளும்",

"கோயினுடகக் குழுக்களும் வருகென",

"நயத்திறம் பொருந்த நாடகங் கண்டும்",

"நண்புணத் தெளித்த நாடகம் போல." (பெருங்கதை.)

முதலிற் கூறிய **பட்டினப்பாலை** கரிகாற் பெருவளவன் மீது இயற்றப்பட்டது; அதிற் கூறப்படுவதால் நாடகததின் பழமை விளஙகும.

ஒருவனிடம் திடீரென்று பெருஞ் செல்வம உண்டாவதற்கு நாடக அரங்கின்கண் காண்போா கூடுதலையும, அவனைவிட்டு அச்செல்வம் விலகுதலை அக்கூத்தாட்டு முடிந்தவுடன் அக்குழாம போதலையும் மேலே காட்டிய "கூத்தாட்டவை" என்னுங் குறளில் திருவள்ளுவர் உவமையாகக் கூறியிருததலின் அவர் காலத்தில் நாடகநிகழ்சசி யுண்டென்பதும் அதைக்காணப் பலர் வருவரென்பதும் புலனுகின்றன.

திருப்பெருந்துறையிற் குருமூர்த்தியாக எழுந்தருளிக் காட்சி கொடுத்து உபதேசித்து அடியார் கூட்டங்களோடும மறைந்தருளிய சிவபெருமானைக் காணப்பெறுத **திருவாதவூரர்**,

"[illegible] தருமெம் பிரானென்னை நீசெய்த நாடகமே"

என்றும்,

"நாடகத்தா ளுன்னடியார் போனடித்து"

என்றும் வருந்திப் பாடியவற்றில் அக்காட்சியை நாடகமெனக் கூறி யிருப்பதும் இங்கே அறிதற்பாலது.

"நன்பணைத் தண்ணுறவுண்ணளி போன்றெளிர் நாடகமே"

என்ற கோவையாரின் விசேட வுரையில், 'கண்டார்க்கு இன்பஞ் செய்த லில் நாடகமென்றார்' என்பர் பேராசிரியர்.

'இசை நாடகங்கள் இன்பத்தை விளைவிக்கும்'

எனபர் நச்சினார்க்கினியர். வேறுசிலர் கற்றார்க்குங் கல்லார்க்கும் நாடகக்காட்சி இன்பத்தை விளைவிக்கு மென்பர்.

நாடகம் மதசம்பந்தமாகவும் பெரியோர்களுடைய சரித்திர சம்பந்தமாகவும் இயற்றப்பெற்றிருப்பின், காண்போர்களுக்குப் பல வகையான நற்குண நற்செய்கைகளும் தெய்வபக்தியும் உண்டாகும் என்பது பண்டையோர் கருத்து. நாடகம் இன்பசுவையோடு கூடிப் பழையகதைகளைத் தழுவி யமையவேண்டுவதாதலால், காண்போர்க்கு உலகவியல்பைச் செவ்வனே தெரிவித்து உவப்புச் செய்வதாகும். கேள்வியால் இன்பத்தைத்தரும் இசையினும் காட்சியால் இன்பத்தைத்தரும் இதுவே சிறந்ததென்பர் சிலர். இசையில் அறிவில்லார்க்கு அவ்விசை மிக்க இன்பத்தைச் செய்யாது. நாடகமோ யாவருக்கும் மிக்க இன்பத்தை அளித்துத் துன்பத்தைப் போக்கும். இதன்பெருமையை இக்காலத்தில் யானெழுதுவது மிகை.

நாடகத்திற்குப் பரமாசாரியர் சிவபெருமானென்று பழைய நூல்களால் தெரியவருகின்றது.

நாடகங்கள் பெரும்பாலும் விழாக்காலங்களில் நடைபெறுமென்றும் அவை செய்யுளும் வசனமும் விரவப் பெற்றிருக்குமென்றும் சொல்வார்.

நாடகம் கூத்தென்னும் பெயராலும் வழங்கப் பெற்று வந்தது. அந்நாடகங்களில் முன்புகூறிய யாழேயன்றி முழவு, ஆகுளி, பாண்டில், கோடு, நெடுவங்கியம், குறுந்தூம்பு, தட்டைப்பறை, சல்லி, பதலை முதலிய பல வாச்சியங்களும் நடிக்குங்காலத்துத் துணைக்கருவிகளாக இருந்தனவென்றும், ஏதேனும் ஓரிடத்திற்குச் செல்லுங்கால் கூத்தராவது அவருடைய ஏவலாளராவது அவ்வாச்சியங்களைப் பலாக்காய்க்கொத்துக்களைப்போலத் தொகுத்துக் காவடியில் வைத்துத்தோளிற் காவிச் சென்றாரென்றும்,

“ திண்வார் விசித்த முழவொ டாகுளி
நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில்
மின்னிரும் பீலி யணித்தழைக் கோட்டொடு
கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பி
னிளிப்பயி ரிமிருங் குறும்பரந் தூம்பொடு
விளிப்பது கவருந் தீங்குழ றுதைஇ
நடுவுநின் றிசைக்கு மரிக்குரற் றட்டை
கடிகவர் பொலிக்கும் வல்வா யெல்லரி
நொடிதரு பாணிய பதலையும் பிறவும்
கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப
நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையர் ” (மலைபடுகடாம், 3-13)

என்பதனால் தெரியவருகின்றது.

நாடகம் நடிப்போர் கூத்தரென்றும், பொருநரென்றும், கோடியரென்றும் வழங்கப்பெறுவர். அக்கூத்தர்களுக்குப் பாணர்கள் பாடினிகள் விறலிகளென்பார் உடனிருந்து உதவிசெய்து வந்தார்களென்பதும், அவர்கள் உபகாரிகளிடம் சென்று சென்று தங்கள் புலமையைப் புலப்படுத்திப் பரிசுபெற்று மனமகிழ்ந்து வந்தார்களென்பதும், அவ்வுபகாரிகளின் வண்மையைத் தமக்கு எதிர்ப்பட்ட கூத்தர்களுக்குத் தெரிவித்து அவர்களையும் அவ்வுபகாரிகளிடம் அனுப்பிப் பயனடையும்படி செய்துவந்தார்களென்பதும் **பத்துப்பாட்டி**லுள்ள **பொருநராற்றுப்படை, மலைபடுகடாம்** (கூத்தராற்றுப்படை) என்பவற்றாலும், **புறநானூற்றி**லுள்ள சில செய்யுட்களாலும், **புறப்பொருள் வெண்பாமாலை**யாலும் விளங்கும்.

முதலில் நாடகமுண்டானதற்குக் காரணங்கள் சில உண்டென்று ஆராய்ச்சியால் தெரியவருகின்றது. அவற்றுள் ஒன்று:—

மிகுந்த உழைப்பால் துன்பமுற்றவர்களின் அயர்ச்சியைப் போக்குவதற்குச் சிறந்த கருவியாக நாடகம் இயற்றி நடிக்கப்பட்டதென்றும், திரிபுரத்தைப் பரமசிவன் எரித்தபின்பு அங்கே சூழ்ந்திருந்த தேவர்களுடைய வெப்பத்தையும் அயர்ச்சியையும் போக்குதற்கு, ‘**திரிபுரவிசயம்**’ என்ற நாடகம் இயற்றி அவர்களுக்கு முன் ஆடப்பட்டதென்றும், அமிர்தம் எடுத்தற்காகக் கடலைக்கடைந்த தேவாசுரர்களின் அயர்ச்சித் துன்பத்தைப் போக்குவதற்கு ‘**அமிர்தமதனம்**’ என்ற நாடகம் இயற்றி அவர்களுக்கு முன் ஆடப்பட்டதென்றும், அக்காட்சிகளால் அவ்விருதிறத்தாரும் இளைப்பு நீங்கி இன்புற்றார்களென்றும் வடமொழிவாணர் கூறுவர்.

செங்குட்டுவனென்னும் சேரவரசன் பத்தினிக்கடவுளாகிய கண்ணகியின் திருவுருவத்தைஅமைத்தற்கு இடையிலுள்ள நாடுகளின் அரசர்களை வென்று இமயஞ்சென்று கற்கொண்டு நகரத்தையடைந்த பின்பு நாடக அரங்கைச்சார்ந்து ஓராசனத்தில் தன்தேவியோடு ஓலக்கமாக வீற்றிருந்தபொழுது, அந்நாட்டின்கண்ணதாகிய பறையூரிலிருந்தவனும் நாடகத்தில் வல்லவனுமான கூத்தச்சாக்கையனென்பவன் சிவபெருமானுடைய ஆடல்களுள் ஒன்றாகிய கொடுகொட்டியென்பதை மிகவும் நன்றாக ஆடினனென்றும் அக்காட்சியால் செங்குட்டுவனும் அவன் தேவியும் அயர்ச்சி நீங்கி மகிழ்வுற்றார்களென்றும் **சிலப்பதிகாரம்** தெரிவிக்கின்றது. கொடுகொட்டியென்பது திரிபுரத்தையெரித்தபின்பு சயானிந்ததால் உமாதேவியாரை ஒரு பாகத்திற்கொண்டு பரமசிவன் ஆடிய ஆடல். சிவபெருமான் நடித்ததுபோற் சாக்கையன் நடித்ததை **இளங்கோவடிகள்** கூறியிருக்கும் பகுதி யாவரும் அறிந்து இன்புறுதற்குரியது, அதனை இங்கே தெரிவிக்கின்றேன்:

"ஆங்கவ டன்னுட னணிமணி யரங்கம்
நீங்குநீர் ஞால மாள்வோ னேறித்
திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவுஞ்
செங்க ணாயிரந் திருக்குறிப் பருளவுஞ்
செஞ்சடை சென்று திசைமுக மலம்பவும்
பாடகம் பதையாது சூடகந் துளங்காது
...மேகலை யொலியாது.. ......அசையாது
வார்குழை யாடாது மணிக்குழ லவிழா
துமையவ ளொருதிற னாக வோங்கிய
இமையவ னாடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்து."

(சிலப்பதிகாரம், நடுகற்காதை, 65-77.)

மேலே கூறியவற்றால் உழைப்பினாலுண்டாகும் அயாச்சியைநீக்க நாடகம் நடிக்கப்பட்டதென்பது அறியப்படும்.

இங்கே கூறிய கூத்தச்சாக்கையன்மரபினர் நாடகத்தொழில் புரிவோராய் அவ்வூரில் இன்னும் இருக்கின்றனரென்று கேள்வியுற்றிருக்கிறேன்.

தனக்குப் பேருதவி செய்தவனாகிய சுதஞ்சணன் என்பவனுடைய சரித்திரத்தை நாடகமாகச் செய்து நடிப்பித்துச் சீவகன் இன்புற்று வாழ்ந்தானென்று **சீவகசிந்தாமணி**யால் தெரிதலால் ஒருவர் செய்த நன்றியைப் பாராட்டுதற் பொருட்டும் நாடகம் நடிக்கப்பெற்றதென்று கொள்ளவேண்டும்.

நாடகத்திற்குரிய அரங்கம் தூய்மையான இடத்தில் அமைக்கப்படவேண்டும். அவ்வரங்கத்தின் உயரம், அதற்குரிய வாயில்கள், அதில் எழுதப்படும் தெய்வ உருவங்கள், விளக்கு வைத்தால் நிழல் புறத்தே செல்லும்படி நிறுவிய தூண்கள், அங்கே கட்டப்படும் ஒருமுக வெழினி பொருமுகவெழினி கரந்துவரலெழினியென்னுந் திரைகள், அவற்றின் இயல்பு, மேலே கட்டப்படும ஓவியவிதானம், அவைகள் அமைக்கப்படவேண்டிய முறை முதலிய விஷயங்கள், **சிலப்பதிகாரம்** அரங்கேற்று காதையில் உரையாசிரியரால் மிக நன்றாககக்கூறப்பட்டிருத்தலால் பண்டைக்காலத்தில் நாடக அரங்கு மிகச செவ்வனே அமைக்கப் பெற்றிருந்தமை விளங்கும்.

பின்னும், நாடகத்திற்கு இன்றியமையாதவர்களாகிய இசையாசிரியன், கவிஞன், தண்ணுமையோன், வேய்ங்குழலோன், யாழாசிரியனென்பவர்களின் இலக்கணங்களும் அந நூலில் நன்கு கூறப்பெற்றிருக்கின்றன. இவ்வைவரும் வடமொழியில் பஞ்சாசாரியரெனப்படுவர். இவர்களுட் கவிஞன் கூறப்பட்டிருத்தலால,இயற்றமிழில வல்லவனாகிய கவியொருவன் அர்த்தபுஷ்டியும பாவபுஷ்டியும ஒன்பது சுவையுமமைந்துள்ளனவாகிய இசைப்பாட்டுக்களை இடத்திற்கு ஏற்றவாறு இயற்றியளித்துப் பாடச்செய்து உடனிருந்து வந்தானென்பது புலனாகின்றது. இன்னும், செய்யுள், இசை, யாழ், தண்ணுமை, வேய்ங்குழல் முதலியவற்றினிலக்கணங்களும் தகக ஆதாரங்களுடன் **சிலப்பதிகார**த்தில் தெரிவிக்கப்பட்டிருபபதுடன் நாடகம் பலவகையாக வழங்கப்பட்டுவந்ததென்றும் அந் நூலால் தெரியவருகின்றது.

அஃது, அகக்கூதது, புறக்கூதது; வேத்தியல், பொதுவியல்; வசைக்கூத்து, புகழ்க்கூத்து; வரிககூத்து, வரிசசாநதிககூத்து; சாந்திககூத்து, விநோதக்கூத்து; ஆரியக்கூத்து, தமிழ்ககூதது; இயல்புககூத்து, தேசிக்கூத்தெனப் பல பகுதிப்பட உரிய இலககணங்களுடன் அந் நூலின் உரையாசிரியாகளால் விளக்கி எழுதபபட்டுள்ளது.

சுவைகளுக்குரிய அவிநயம் வீரசசுவை அவிநயமுதலாக உருத்திரச்சுவை அவிநயமிறுதியாக ஒன்பதுவகைப்படுமென்றும், மற்றொருவகையில் வெகுண்டோனவிநய முதல் நஞ்சுண்டோனவிநய மிறுதியாக இருபத்துநான்கு வகைப்படுமென்றும கூறி அவற்றின் இயல்புகளைப் பழைய சூத்திரங்களின் முகமாக **அடியார்க்குநல்லார்** நன்கு விளக்கியிருக்கிறார். இவ்விரண்டுவகையான அவிநயங்களையும் புலவர்கள் தம்முடைய காவியங்களில் ஆங்காங்கே அமைத்துப் பாடிய இடங்கள்பல. அவற்றுள் உதாரணமாக அவிநயச் சூத்திரமொன்றையும் அதற்கிலக்கியமாகவுள்ள இரண்டு செய்யுட்களையும் தெரிவிக்கின்றேன்:

### வெகுண்டோனவிநயம்.

"வெகுண்டோ னவிநயம் விளம்புங்காலை
மடித்த வாயு மலர்ந்த மார்புந்
துடித்த புருவமுஞ் சுட்டிய விரலுங்
கனற்றின வுள்ளமொடு கைபுடைத் திடுதலு
மன்ன நோக்கமோ டாயத்தனர் கொளலே"

(சிலப்பதிகாரம், மேற்கோள்.)

"இறைக்கடை துடித்தபுரு வத்தளவி றென்னும்
பிறைக்கடை பிறங்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை யரக்கிவட வைக்கன லிரண்டாய்
நிறைக்கடன் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்."

(கம்பராமாயணம், தாடகை வதைப்படலம்.)

"கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூறுதல
ஏற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மபிநயந் தெரிக்கின்றாரினே."

(ஷை. உண்டாட்டுப் படலம்.)

நாடகத்திற்குரிய வாத்தியங்கள்பலவும் கூறப்பட்டுள்ளன. அவற்றைக் கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கமென மூன்றுவகையாகப்பிரித்து ஒவ்வொன்றன் இலக்கணங்களையும் செவ்வையாக விரித்தெழுதிச் செல்கின்றனர். கீதாங்கம் இசைப்பாட்டிற்குரியவை; நிருத்தாங்கம் நிருத்தத்திற் குரியவை; உபயாங்கம் இரண்டிற்கும் உரியவை.

இசைப்பாட்டின் பொருளைக் காண்போர்க்குப் புலப்படுத்துவனவாகிய அவிநயக் கைவகைகளில் ஒற்றைக்கை யென்பது பதாகைமுதல வலம்புரிக்கை இறுதியாக முப்பத்துமூன்று வகைப்படுமென்றும், இரட்டைக்கை யென்பது அஞ்சலிமுதல் வருத்தமானக்கையீறாகப் பதினைந்து வகைப்படுமென்றும் பழைய ஆதாரங்களுடன் அவர் விளக்கியிருக்கிறார். ஒற்றைக்கை பிண்டிக்கை இணையாவினைக்கை யென்றும், இரட்டைக்கை இணைக்கை பிணையற்கையென்றும் வழங்கப்படும்.

இன்னும் ஆண்கை, பெண்கை, அலிக்கை, பொதுக்கையென நால்வகைப்படுமென்றும், எழிற்கை, தொழிற்கை, பொருட்கையென மூன்றுவகைப்படுமென்றும் அவிநயக்கைகளை வகுத்துக் கூறுவாருமுளர்.

ஆடல்களுள் தெய்வவிருத்தியென ஒருவகையுண்டு; அஃது, அல்லியம், கொடுகொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி,

கடையம், பேடு, மரக்கால், பாவையெனப் பதினொருவகைப்படும். இவை சிவபெருமான், திருமால், முருகவேள், மன்மதன், காளி, திருமகள் முதலிய தெய்வங்களின் ஆடல்களென்பர். இவற்றுள் அல்லிய முதலிய ஆறும் நின்றாடலெனவும், துடி முதலிய ஐந்தும வீழ்ந்தாடலெனவும் சொல்லப்படும்.

நாடகத்திற் பாடப்படும் இசைபபாட்டுக்கள் உருவென்று வழங்கப்படும்; இககாலத்தார் அதனை உருப்படியென்பர். அகநாடகத்திற் பாடப்படும உருக்கள் கந்தவுருமுதற் பிரபந்தவுரு ஈறாக இருபத்தெட்டுவகைப படுமென்றும், புறநாடகத்திற்குரிய உருக்கள் தேவபாணி முதல் அரங்கொழி செய்யுளிறுதியாகவுள்ளவை யென்றும் அவர் அறிவிபபா. கநதவுரு, அடிவரையறை யுடைத்தாய் ஒருதாளத்தாற் பாடபபடும் பாவைஷபபாட்டு; பிரபநதவுருவாவது அடிவரையறையின்றிப் பலதாளங்கள் புணாத்துப் பாடப்படும பாவைஷப்பாட்டு.

இப்படியே **சிலப்பதிகார** மூலத்தாலும் அதன் உரைகளாலும தெரிந்துகொள்ளபபடும நாடகப் பகுதிகள் பல.

மேலேகூறிப்போநத இலக்கணததின்படி அமைந்த பழைய தமிழ் நாடகநூல இக்காலத்தில யாண்டுங் கிடைத்திலது. **இராஜராஜ நாடக** மென்பதொன்று இராஜராஜ சோழன்மேற் செய்யபபட்டதென்று தஞ்சைச் சிலாசாசனததால தெரியவந்தாலும அந்நூல் இபபொழுது கிடைககவில்லை. **அமிர்தமதன நாடக**மென்பதொன்று தமிழிற் செய்யப்பட்டுத திருநெல்வேலியைசசார்ந்த நாங்குனேரிப பக்கத்தில் வழங்குகின்றது. அது பழைய காலததததன்று; மிக்க பிற்காலத்தது. முற்கூறிய வடமொழி அமிாதமதன நாடகததைப பிற்காலததில் ஒருவர் பெயர்ததியற்றி யிருககலாமெனறு தோற்றுகிறது.



# III. சங்கநூல்களிற் கூறப்படும் தெய்வங்கள்.

சங்கச் செய்யுட்களில் சொல்லப்பட்டிருக்கிற தெய்வங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். முதனூலாகச் சொல்லப்படும் அகத்தியம் இப்பொழுது அகப்படாமையால் அதன்வழி நூலாகிய தொல்காப்பியத்திலும் இப்போது கிடைக்கும் சங்கச் செய்யுட்களிலும் உள்ள ஆதாரங்களைக்கொண்டு அவற்றைப்பற்றிப் பேசத் தொடங்குகின்றேன்.

பூமியை ஐந்து பாகமாகப் பிரித்து அதனதன் இயல்பையும் அதனதன் தெய்வத்தையும் தொல்காப்பியம் தெரிவிக்கின்றது. இந்த முறை பிற்காலத்து நூல்களாலும் தெரிகின்றது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பன நிலத்தின் பாகுபாடுகள். அவற்றுள் காடும் காட்டைச் சார்ந்த இடமும் முல்லை; அதற்குத் தெய்வம் திருமால்; மலையும் மலையைச்சார்ந்த இடமும் குறிஞ்சி; அதற்குத்தெய்வம் முருகக்கடவுள்; வயலும் வயலைச்சார்ந்த இடமும் மருதம்; அதற்குத் தெய்வம் இந்திரன்; கடலும் கடலைச்சார்ந்த இடமும் நெய்தல்; அதற்குத்தெய்வம் வருணன்; நீரும் நிழலுமற்ற இடம் பாலை; அது வேனிற் காலத்தில் குறிஞ்சி முல்லை என்பவற்றின் ஒவ்வொரு பாகத்திலிருந்து உண்டாவது;

> "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
> நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
> பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"

என்பது **சிலப்பதிகாரம்.** அதற்குத் தெய்வங்கள் காளி, சூரியன்,

"**மாயோன் மேயகாடுறையுலகமும்,** சேயோன் மேய மைவரையுலகமும்" என்பது **தொல்காப்பியம்.** இதிலுள்ள "மேய" என்றசொல் கவனிக்கத்தக்கது. 'மேய' என்பதற்கு விரும்பிய தங்கிய என்பன பொருள். 'மாயோன் மேயகாடுறை உலகமும்' என்றதனால், முல்லைத் திணையில் திருமாலுக்குப் பிரீதி உண்டென்றும் அதனால் அங்கே அவர் விரும்பித் தங்கியுள்ளார் என்றும் அறியவேண்டும். பிறவற்றிற்கும் இப்படியே கொள்க.

மாயோன் என்ற சொல்லுக்கு ஆச்சரியசக்தி உடையார் என்று இக்காலத்தார் பொருள்கூறுவர். **பரிமேலழகர் பரிபாடலில்** அதற்கு, 'கரிய நிறமுடையவர்' என்று பொருள் செய்திருக்கிறார். மா வெனப

தற்குப் பொருள் கூறுங்கால், "செல்வம, கருநிறம, கமலே" என்று நிகண்டில் செலவத்திற்கும கமலேக்கு மிடையில் திருமாலுககுரிய கருநிறம் சொல்லபபட்டிருபபது அழகுடையது.

முல்லே நிலத்தில் மழைபெய்யாதிருந்தாலும் வியாதிகளால் துன்பம் உண்டாஞலும திருமாலேக்குறித்து மகளிர் குரவைக்கூத்தாடுவர்; எழுவர் அலலது எண்மா அல்லது ஒன்பதின்மர் கைகோததுக்கொண்டு ஆடுவது வழக்கம. கண்ணன், பலராமன், நபபின்னே என்பவர்கள் குரவைக்கூத்தாடியதாக **மணிமேகலே** முதலியவறருல தெரிகிறது. குரவைக்கூத்தாடிஞல மழைபெய்யும; ஓஷதிகள வளரும; பசு கறககும்; நோய்நீங்கும். சிலப்பதிகாரத்தில் "ஆய்சசியர் குரவை" என்னும் பகுதியில் இடைப்பெண்கள் குரவைக கூததாடினதாக இளங்கோவடிகள் சொல்லியிருக்கிருா. மாதரி என்ற இடைமாதிடததில் கௌந்தியடிகள் என்ற சைனத்தவமுதியார் கண்ணகியை அடைககலமாக ஒபபிதது விட்டுப்போனபின், கோவலன் நகாகாண மதுரைககுப போஞன். அங்கே அவன் கள்வன் என்று கொலலபபடவே, இடைசசேரியில் துர் நிமித்தங்கள் நிகழ்ந்தன. அபபொழுது அவற்றிற்குச சாநதியாக ஆய்ச்சியர் குரவை ஆடினா. ஏழுபோகளே ஏழு ஸ்வரங்களாக வரிசைப படுத்தி நிறுத்திக குரவை நடததியதாகச சிலபபதிகாரததுள்ள ஆய்சசியர்குரவையால தெரியவருகிறது. அககூததின்முடிவில்,

1 "கன்று குணிலாக கனியுதிர்த்த மாயவ
ஷின்று நம் மானுள வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல கேளாமோ தோழீ"

2. "பாம்பு கயிருக் கடல்கடைந்த மாயவ
னீஙகுநம் மாஞுள் வருமே லவன்வாயி
லாம்பலந் தீஙகுழல் கேளாமோ தோழீ"

3. "கொல்லேயஞ் சாரற் குருந்தொசித்த மாயவ
னெலலேநம் மாஞுள் வருமே லவன் வாயின்
முல்லேயந் தீஙகுழல கேளாமோ தோழீ"

என்று பாடியும,

4. "பெரியவனே மாயவனேப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனேக் கண்ணுந்
திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய
கரியவனேக் காணுத கண்ணென்ன கண்ணே
கணணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே"

5 "மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனுர் வஞ்சம்
கடந்தானே நூற்றுவர்பா லூற்றிசையும் போற்றத்

தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே''

என்று பாடியும் கண்ணனை ஏத்தினார்.

இவை பழைய செய்யுட்களாக இருந்தும் யாரும எளிதில் பொருள் தெரிந்து கொள்ளும்படி அமைந்திருப்பது மிகவும பாராட்டத் தக்கது.

**பரிபாடல்** என்ற சங்க நூலில் திருமாலுக்கு ஏழுபாடல்கள் உள்ளன; உபநிடதங்களில சொல்லப்பட்டிருக்கிற அவருடைய குணவிசேடங்கள் மிகவும அழகாக முறையே அந்தப்பாடல்களில சொல்லப்பட்டிருக்கின்றன.

சிலப்பதிகாரத்திலுள்ள ஆய்ச்சியர் குரவையில், மதுரையின் கண் உள்ள **இருந்தவளமுடையார்** கோயில் கூறப்பட்டுளளது. பரிபாடலிற் கூறப்படும இருந்தையூரென்பது இதுதானென்று தெரிகின்றது. **பெரும்பாணாற்றுப்படை**யிலும திருமால பாராட்டப்பட்டிருக்கிறார். காஞ்சீபுரத்தைச சார்ந்த திருவெஃகா என்ற திருப்பதியில் உள்ள திருமாலின் சயனத்திருக்கோலம அந்நூலிற கூறப்பட்டிருக்கிறது.

"வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசைப்
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோ னின்ற வண்ணமும்''

என்று **சிலப்பதிகாரத்**தில் திருவேங்கடத்தில் திருமால நின்றுகொண்டு காட்சி யளிப்பதாகச சொல்லப்பட்டிருக்கிறது. அழகர மலையிலும அவர இருப்பதாகப **பரிபாடலும் சிலப்பதிகாரமும்** கூறும.

அழகர்மலையைச சோலைமலை என்று **திருமுருகாற்றுப்படை**யில் சொல்லியிருப்பதுடன், அது முருகக்கடவுளுடைய திருப்பதியென்றும் நக்கீரர் பாடி யிருக்கிறார். அப்படியே திருவேங்கடமும முருகக் கடவுளின் ஸ்தலமென்று சில பழைய நூல்களால் தெரிகிறது. சோலை மலையில் இன்றும சரவணப பொய்கையென்று பெயருள்ள ஒரு தீர்த்தம் காணப்படுகின்றது. திருவேங்கடத்திலுள்ள கோனேரி என்பது குகனேரியே. அதனை ஸ்கந்த புஷ்கரிணியென்பர். இவற்றால் அந்நாளில் அம்மலைகளில் எங்கேயாவது முருகக்கடவுளின் ஆலயமிருந்திருக்கலாமென்றும் அந்த ஆலயங்கள் பரிபாலிக்கப்படாமையால அழிந்து போயிருத்தல் கூடுமென்றும தெரிகிறது. வேங்கடம் போனால் இம்மை மறுமைப்பயன்களைத் திருமால் அளிப்பாரென்ற கருத்துள்ள ஒருவெண்பா **புறப்பொருள் வெண்பாமாலையில்** உள்ளது. **திருமுருகாற்றுப்படையில்,**

"பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் செல்வன்"

என்று திருமாலைக் கருடக்கொடி உடையாரென்று சொல்லியிருக்கிறார்.

**அகநானூற்றிலும், புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும்** திருமால் கூறப்பட்டிருக்கிறார். அவரை, '**ஆலமர் கடவுள்**' என்பர். ஆல் அமர் கடவுள் என்பது பரமசிவனை உணர்த்துவதாகவும் உரையாசிரியர்கள் கூறுவார்கள். ஆலிலையின்மேல் சயனம் செய்யும் கடவுள் என்று கொண்டு திருமாலிற்கும்,ஆலின் கீழிருந்து உபதேசித்த கடவுள் என்று கொண்டு பரமசிவனுக்கும் கொள்ளவேண்டுமென்பது அவர்கள் கருத்து.

முல்லை நிலத்தார்கள் கலியாண காலத்தில் பெண் எருமையின் கொம்பை நட்டு வழிபடுவது வழக்கமென்று **கலித்தொகையால்** தெரிகிறது;

"தருமணற் ஞூழப்பெய் தில்பூவ லூட்டி
எருமைப் பெடையோ டெமரீங் கயரும்
பெருமணம்" (கலித்தொகை, 144)

என்பதும் அதனுரையும் இங்கே அறிதற்பாலன.

## ஆ குறிஞ்சிக்கடவுள்.

குறிஞ்சிக்குக் கடவுள் முருகன் என்பது, "சேயோன் மேய மைவரை யுலகம" என்பதனால் விளங்கும். தமக்கு அப்பொழுதப்பொழுது நேரும் துன்பங்களை நீக்கிக்கொள்ள அக்கடவுளுடைய அருள் பெறவேண்டித் தம்முடைய பரிவாரங்களுடன் மலைநாட்டுமக்கள் குன்றக்குரவை ஆடுவர். அவரைப் பூசிப்பவன் வேலன் என்று சொல்லப்பட்டிருக்கிறான். அவனைப் போன்றவனை இக்காலத்தார் பூசாரி யென்பார். அவன் ஆவேசங்கொண்டு குறிசொல்லுவான். வேடர்கள் முருகக்கடவுளுக்குப் பலிகொடுப்பது வழக்கம். **திருமுருகாற்றுப்படையில்** முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் ஸ்தலங்கள் ஆறு சொல்லப்பட்டிருப்பதுடன் அவருடைய பெருமைகள் பல கூறப்பட்டிருக்கின்றன. அந்த ஸ்தலங்களாவன திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை யென்பனவாம். அவற்றுள் திருச்செந்தூரென்பது திருச்சீரலைவாயென்றுங் கூறப்படும். ஒரு பாண்டியனைப் பலகாலம் வாழ்ந்திருக்கவேண்டுமென்று வாழ்த்த எண்ணிய **மருதனிளநாகனா**ரென்னும் புலவர் திருச்செந்தூரில கடலின் அலைகளால் மோதப்படுவதும் முருகக்கடவுள் எழுந்தருளியிருப்பதுமாகிய திருக்கோயிலின் முன்னுள்ள துறையில் கடுங்காற்றால் திரட்டித் தொகுக்கப்பெற்ற மணலைவிடப் பலகாலம் நீ வாழ்வாயாக என வாழ்த்தியிருக்கின்றனர்;

“ நீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவா ழெக்கர் மணலினும் பலவே.” (புறநானூறு, 55.)

இதனால் திருச்செந்தூரின் பழமை முதலியன புலப்படுகின்றன. திருவேரகம என்பது கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ள ஸ்வாமிமலை என்று சொல்லுகிறார்கள். நச்சினார்க்கினியர் திருமுருகாற்றுப்படையின் உரையில் ‘மலைநாட்டிலுள்ள ஒரு திருப்பதி’ என்று தெரிவித்திருக்கிறார். பழமுதிர்சோலையில் இப்பொழுது முருகக்கடவுளுக்குக் கோயிலில்லை. ஆனால் சரவணப்பொய்கையென்ற ஒரு தீர்த்த மிருத்தலால் அங்கே முன்னமே முருகக்கடவுளின் தலம் இருந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. இந்த ஆறு தலங்களும் படைவீடு என்று வழங்கப்படும். படைவீடு என்பது இன்னதென்று பத்துப்பாட்டில் ஒன்றாகிய மலைபடுகடாத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. சேயாற்றங் கரையில் நவிரமென்னு மலையில் காரியுண்டிக் கடவுளின் கோயில் சேனைகளாற் சூழப்பட்டிருந்ததென்று சொல்லியிருத்தல் இக்கருத்தைப் புலப்படுத்தும். காரியுண்டிக்கடவுள் என்றால் விஷத்தை உணவாக உடையகடவுள் (நீலகண்டர்) என்பது பொருள். அது நஞ்சுண்ட தேவஸ்தலங்களுள் ஒன்று. நன்னன் என்பான் அந்த ஸ்தலத்தைப் பாதுகாத்தற்குப் படைகளை அங்கே வைத்திருந்தான். சத்துருக்களாலும் அந்நிய மதத்தினராலும் நேரக்கூடிய இடையூறுகளைத் தவிர்த்தற்குச் சேனைகளை அங்கு வைத்திருந்தான் போலும். பிற்காலத்தில் ஒவ்வொரு தலமும் படைவீடாகிவிட வேண்டிய அவசியம் நேர்ந்ததுண்டு. குறுந்தொகை முதற்பாட்டும் பரிபாடலில் எட்டுப்பாடல்களும் முருகக்கடவுள் துதிகளாக உள்ளன. அவற்றில் முருகக்கடவுளின் மகிமை பலவகையாக விரித்துக் கூறப்பெற்றுள்ளது. மதுரைக்காஞ்சியிலும் பரிபாடலிலும் திருப்பரங்குன்றத் திருவிழா பலபடப் பாராட்டப்பட்டுள்ளது.

சில், களவு கற்பு என்னும் இரண்டு பகுதிகள் உண்டு. அவற்றில் காந்தர்வ விவாகமே களவெனப்படும். அஃது எல்லாநிலத்திலும் நடந்ததன்று; எப்பொழுதும் நடந்ததுமன்று. ஊழ்வினைப்பயனாக, நல்ல குலத்துதித்த தலைவனும் குறிஞ்சி நிலத்துக் கன்னியும் ஒரு தனி இடத்தில் தற்செயலாக ஒருவரை ஒருவர் சந்திப்பர். பின்பு தம் முட் காமுற்றுக் காந்தர்வ விவாகம் செய்துகொண்டு பிரிவர். அதனைத் தலைவியின் உயிர்த்தோழி மட்டும் அறிந்து கொள்வாள். அப்படியே தலைவனியல்பை அவனுடைய உயிர்ப்பாங்கன்மட்டும் தெரிந்துகொள்வான். மறுபடியும் ஒவ்வொரு காலத்தில் தலைவியும் தலைவனும் கண்டு தம்முள்

மகிழ்வர். தலைவன் பிரிவாற்றாமையால் தலைவி கவலைப்படுவள்; அவன் மறுபடி தன்னை அடைவானோ வென்றும், தன்னைத் தன்பெற்றோர் வேறு யாருக்கேனும் மணம் செய்விப்பார்களோ வென்றும், தனது கற்புத்தவறி விடுமோ வென்றும் கவலைப்படுவாள். அதனால் அவள் யாருடனும் பேசாமலும் உண்ணாமலும் உறங்காமலும் மயங்கி இருப்பாள். காரணத்தை அறியாத பெற்றோர் மேற்கூறிய வேலனை அழைத்துக் கேட்பர். அவன் அவளைப் பேய் பிடித்திருக்கிறதென்று ஆவேசத்துடன் சொல்வான். தோழி அதைத்தடுப்பாள்; 'ஏன்தடுத்தாய்' என்று தாய் கேட்கும்போது தோழி, "நானும் தலைவியும் பூக்கொய்வதற்காக காட்டுக்குச் சென்றபோது ஒருநாள் மழை பெய்தது; வெள்ளம வந்து எங்களை இழுத்துச் சென்றது; அப்பொழுது மிக்க வீரமும் அழகுமுள்ள ஒருவன்வந்து அவ்வெள்ளத்திலிருந்து கரையிலெடுதெதுவிட்டு எங்களைக்காத்தான். அதுமுதல் அவன் நினைப்பாக இருக்கிறாள்" என்பாள்; அல்லது, "யானை எங்களைத் துரத்திற்று; அப்பொழுது சிறந்ததலைவன் ஒருவன் வந்து எங்களைப்பாதுகாத்தான்; அதுதொடங்கி அவன் நினைப்பாக இருக்கிறாள்" என்பாள்; அல்லது, "ஒருநாள் பூக்கள் பறிக்கப போனபோது பூ எட்டவில்லை; ஒருவன் வந்து தன் தோளின்மேல தலைவியை ஏற்றிக்கொண்டு பூவை எட்டிப்பறிக்கும்படி செய்துவிட்டுச சென்றான். அது தொடங்கி அவன் நினைப்பாக இருக்கிறாள்" என்பாள். இங்ஙனம் தலைவியின் நிலைமையை எடுத்துச் சொல்வதற்கு 'அறத்தொடு நிற்றல்' என்று பெயர். மேற் கூறியபடி முருகக்கடவுள் ஆவேசம வந்ததாக அபிநயித்துக் குறி சொல்லும் வேலனைநோக்கித் தோழி கூறியதாக **கற்றிணையில்,**

"கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே"

என்று ஒருபாடலுண்டு. அதாவது, "தலைவி காதலால்தான் வருந்துகிறாள். நீ தெய்வமாக இருந்தாலும் இரு. இந்த விஷயத்தை நீ தெரிநதுகொள்ளவில்லை; அதனால் அறியாமையை யுடையை" என்பது இதன் பொருள். "தெய்வமல்ல" என்று சொன்னதால் தெய்வ அபசாரமேற்படுமோ என்று அஞ்சி, 'வாழிய முருகே' என்று சொல்லி யிருக்கிறாள். முருகக்கடவுளைப் பற்றியுள்ள துதிகள் பழைய நூல்களில் மிக அழகாக உள்ளன; அவற்றுட் சில வருமாறு:—

"ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத்தலைவ
மாலை மார்ப நூலறி புலவ

## III. சங்கநூல்களிற் கூறப்படும் தெய்வங்கள்.

செருவி லொருவ பொருவிறன் மள்ள
வந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே
யரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்து மிசைபே ராள
வலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந குரிசில்" (திருமுருகாற்றுப்படை.)

" தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றி
னெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
வேம வைகலெய் தின்றா லுலகே." (குறுந்தொகை.)

### (௫) மருதக்கடவுள்.

மருத நிலத்தின் தெய்வம் இந்திரன். தமக்குத் துன்பம் நேர்ந்த போது அதற்குப் பரிகாரமாக இந்திரனை வழிபட்டுத் திருவிழா நடத்துவர் மருதநில மக்கள். அது கொடியேற்றத்துடன் இருபத்தெட்டுநாள் நடைபெறும். தாடகை வீழ்ந்ததை வான்மீகி முனிவர் வருணிக்கையில் இந்திரத்துவசம் சாய்ந்தாற்போல அவள் வீழ்ந்தாள் என்று சொல்லியிருக்கிறார். காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்கு வருஷந்தோறும் 28-நாள் விழாச் செய்யப்பட்டதாகச் **சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கூறும்.** இந்திரவிழா அக்காலத்து நடைபெற்றமை வேறு நூலாலும் தெரிகின்றது. இந்திரனைப் பாவித்து அவனுடைய வச்சிராயுதத்தையே வைத்து வழிபடுவர். இப்படியே முருகனுக்கு வேலையும், திருமாலுக்குச் சக்கரத்தையும் வைத்து அந்த அந்த ஆயுதத்தையே அவற்றையுடைய தெய்வமாகப் பாவித்து வழிபடுவது வழக்கமாக இருந்தது. இன்றும் சிவாலயங்களில் விழாவின் முடிவில் தீர்த்தங் கொடுக்கையில் சூலத்தைப் பரமசிவனாகப் பாவித்து எழுந்தருளுவித்தலைப் பார்க்கலாம். சூலத்தை அஸ்திரதேவர் என்று சொல்வது வழக்கம். இந்திர விழாச் செய்ய ஆரம்பிக்கும் செய்கையில் பழமணல் மாற்றுதல் புதுமணல் பரப்பல் முதலிய

அலங்காரங்களைச் செய்யும்படி நகரத்தார்க்கு முரசறைவித்துத் தெரிவித்ததாகச் **சிலப்பதிகாரத்தாலும் மணிமேகலையாலும்** தெரிகிறது. இந்திர விழாவின் பொருட்டு நகரத்தை அலங்கரிக்கும்படி கூறுகையில்,

"பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்"

என்று **மணிமேகலையில்** சொல்லியிருப்பதால் பிரசங்கம் செய்யக்கூடிய வித்தியா மண்டபம் ஒன்றிருந்ததாகத் தெரிகிறது. வித்தியா மண்டபங்களில் புத்தகங்கள் இருந்தன.

**புறநானூற்றில்** ஆய் என்பவன் இறந்து போனதைப் பற்றிப் புலவர் ஒருவர் பிரிவாற்றாமல் வருந்திப பாடிய பாட்டொன்றில், ஆயை எதிர்கொள்ள வானத்தில் இந்திரன் சயபேரி அடித்தான்என்று சொல்லியிருக்கிறார்.

இந்திரனைப் பற்றிய செய்தியைச் சங்க நூல்களில் இன்னும் விரிவாகக்காணலாம.

## (8) நெய்தற்கடவுள்.

நெய்தற்கடவுள் வருணன். சுறாமீன்கொம்பை நட்டு அந்நிலத்தவர் வருணனை வழிபடுவர். இது **பட்டினப்பாலை** முதலியவற்றால் விளங்கும்;

"சினைச்சுறவின் கோடுநட்டு
மனைசேர்த்திய வல்லணங்கினால்" (பட்டினப்பாலை),

"சுறவு முண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல்" (பெரிய புராணம்),

"சுறவுக்கோட்டுட் கடலரசன் றொன்றி வரங்களினிதருளும்"
(திருவானைக்காப்புராணம்.)

## பாலை நிலக்கடவுள்.

பாலைக்குத் தெய்வங்கள் சூரியன், காளி, அக்கினி (**தொல்காப்பியம்**, அகத்திணையியல், 5-ஆம சூத்திரவுரை); 'பரிதியஞ் செல்வனும் திகிரியஞ் செல்வியும் பாலைக்குத் தெய்வம்' என்பர் **அடியார்க்கு நல்லார். கலிங்கத்துப்பரணி** போன்ற பரணிகளிற் பாலைநிலத்துக்குத் தெய்வம் காளி என்பதும் அத்தெய்வத்தின் விசேடங்களும் மிக விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

## (1) விநாயகர்.

பழைய தமிழ்ச்சுவடிகளில் நூலின் தொடக்கத்தில் 'உ' என்னும் வடிவமுள்ள பிள்ளையார்சுழியென்ற ஓரெழுத்து பண்டைக் காலந் தொட்டே எழுதப்பெற்று வருதல் வழக்கமாக இருத்தலின், விநாயகக் கடவுளை வழிபடுமுறை முற்காலந்தொட்டே தமிழ்நாட்டி

விருந்து வந்ததாக நன்கு தெரிந்தாலும் இப்பொழுது கிடைக்கும் சங்க நூல்களில் இவரைப் பற்றிய செய்தியொன்றும் எனக்குக் கிடைக்கவில்லை.

"தன்றோ ணன்கி ளென்றுகைம் மிகடவும்
களிறவளர் பெருநகா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே"

என்னும் ஆசிரியப்பாவொன்று மிகப்பழைய சுவடிகளின் முதலிற் காணப்படுகின்றது.

## பரமசிவன்.

ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களின் முதலில் பரமசிவனுடைய துதிகள் காணப்படுகின்றன. அதிகமான் என்னும் வள்ளல் தனக்கு நெல்லிக்கனி ஈந்ததைப்பாராட்டி ஒளவையார் சொன்னபாடலில்,

"நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே" (புறநானூறு, 91.)

என்று சொல்லியிருக்கிறார்.

மலைபடுகடாத்தில் காரியுண்டிக்கடவுள் என்னும் சிவபெருமான் கோயில் நவிரமென்னுமலையில் இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. புறப்பொருள் வெண்பாமாலையில் பாசூர் என்ற சிவக்ஷேத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. மணிமேகலையில் இந்திரவிழாவெடுத்தபோது,

"நுதலவிழி நாட்டத் திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறா"

என்று ஒவ்வொரு கடவுளுக்கும் சிறப்புச் செய்யும்படி சொல்லியிருப்பதில், பரமசிவன் கோயிலையே முதலில்வைத்துச் சொல்லியிருக்கிறார். பௌத்த நூலாகிய மணிமேகலையில் இங்ஙனமே கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. சீவகசிந்தாமணியில் நாமகளிலம்பகத்தில்,

"போகம் மீன்ற புண்ணிய னெய்த கணையே போல்
மாகம்மீன்ற மாமதியன்னான் வளர்கின்றான்"

என்ற செய்யுளில், மறைந்து வளர்ந்தசீவகனுக்கு மறைந்து வளர்ந்த கண்ணனை உவமானம் கூறவந்த திருத்தக்கதேவர் பரமசிவனுக்குத் திருமால் திரிபுர சங்காரகாலத்தில் அம்பாக இருந்ததைக் குறிப்பித்திருக்கிறார். சிலப்பதிகாரத்தில்,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்"

என்று பரமசிவன் கோயில் மற்றக் கோயில்களுக்கு முன்னே கூறப்பட்டிருக்கிறது. இன்னும், இவர் முதுமுதல்வன், ஆலமர்கடவுள், இறைவனென்றும் கூறப்படுவர். இவர் திரிபுரத்தையும் காலனையும் வென்றமை, கொடுகொட்டி பாண்டரங்கம காபால மென்னுமிவருடைய ஆடல்கள், பிறையையும் கங்கையையு மணிந்தசடை, திருநீறு, நீர்க்கரகம, மழுப்படை, சூலப்படை, நீலகண்டம், உமையொருபாகம், நெற்றிககண், புலித்தோல், கொன்றைமாலை, ஏற்றூர்தி, ஏற்றுககொடி, திருக்கோயில், அதனை அரசா முதலியோர் வணககத்துடன் வலம வருதல், பூசை, விழாமுதலிய இவர்க்குரியனவெல்லாம் சங்கசசெய்யுட்களில் அங்கங்கே கூறப்பெற்றுள்ளன. ஆனாலும் பின்னுள்ள பழைய வெண்பாவை மட்டும தெரிவியாமலிருககமுடியவில்லை;

" கண்ணவனை யல்லது காணா செவியவன
தெண்ணருஞ்சீ ரல்ல திசைகேளா-அண்ணல்
கழலடி யல்லது கைதொழா வஃதால்
அழலங்கைக் கொண்டான்மாட் டன்பு."

இச்செய்யுள், சேரமான்பெருமாணயனாரருளிச செய்த **ஆதியுலாவில்** எடுத்தோதிப்பாராட்டபபட்ட பெருமையும தொன்மையும வாய்நதது.

உமை, திருமகள், கலைமகள் என்பவர்களைப்பற்றிய செய்திகள் சங்கநூல்களிற் சில இடததுக காணப்படுகின்றன. **மணிமேகலையிற்** கூறபபட்டுள்ள '**சிந்தாதேவி கோயில்**' என்பது கலைமகள் கோயிலே. திருமகளியல்பு, **புறநானூற்றில்**, " விட்டோரை விடாஅ டிருவே, விடாதோரிவள் விடபபட்'டோரே " என்று கூறபபெற்றுள்ளது. பற்றுவிட்டோரைத் திருமகள் நீங்காள; பற்றுவிடாதவரை அவள் பிரிநதுவிடுவாள் என்பது இதன் பொருள்.

## (1) பிரமன்.

ஒருவீட்டில் துக்கமும ஒருவீட்டில் சந்தோஷமும் நிகழ்ந்ததைப் பற்றித் தெரிவிக்கும் **புறநானூற்றுச்** செய்யுளொன்றில், 'பிரமமா ஏன் இப்படிச செய்கிறார்?' என்று கூறியிருபபதால், பிரம்மாவும் சங்கச்செய்யுட்களில் சொல்லப்பட்டிருப்பது விளங்கும். அசசெய்யுள்,

" ஓரி னெய்தல் கறங்க வோரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்
இன்னா தம்மவிவ் வுலகம்
இனிய காண்கித னியல்புணர்ந் தோரே " (194.)

சோழநாட்டில், கும்பகோணத்திலும், நாலூரென்ற ஊரின் பக்கத்திலும் பிரமதேவனுக்குக் கோயிலுண்டு.

## IV சதுக்கப்பூதம்.

**சதுக்கப்பூத**மென்பதொன்று காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்ததாகச் **சிலப்பதிகாரத்தாலும் மணிமேகலையா**லும் தெரிகிறது. முசுகுந்தன் தேவர்களுக்கு உதவி செய்தபோது இந்திரன் இந்தப்பூதத்தை முசுகுந்தனுடன் அனுப்பினான். முசுகுந்தன் அதைக் காவிரிப்பூம்பட்டினத்தில் பிரதிஷ்டை செய்வித்தான்.

"தவமறைந் தொழுகுந் தன்மை யிலாளர்
அவமறைந் தொழுகு மலவற் பெண்டிர்
அறைபோ கமைச்சர் பிறர்மனை நயப்போர்
பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காதந் நான்கும் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்"

என்று **சிலப்பதிகாரத்தி**லுள்ள இந்திரவிழவூரெடுத்தகாதையில் சதுக்கப் பூதத்தின் இயல்பைத் தெரிவித்திருக்கிறார். சதுக்கப்பூதமாவது நான்கு தெருக்கள் கூடுமிடத்திலுள்ள ஒருதெய்வம்.

இது போன்ற ஒரு தெய்வம் வஞ்சிமாநகரிலும் இருந்ததென்று,

"சதுக்கப் பூதரை வஞ்சியுட் டந்து
மதுக்கொள் வேள்வி வேட்டோ னாயினும்"

என்னும் **சிலப்பதிகாரப்**பகுதியாலும் கருவூர்ச்சதுக்கப்பூதனாரென்ற ஒரு புலவர் பெயராலும் தெரிகிறது.

தவவேடந் தாங்கித் தீயவழியில் நடப்போர், நெறிதவறி நடக்கும் பெண்டிர், அரசனுக்குத் துரோகம் செய்யும் அமைச்சர், பிறர் மனைவியை விரும்புவோர், பொய்ச்சாட்சி சொல்லுவோர், புறங்கூறுவோர் ஆகிய இவர்களைச் சதுக்கப்பூதம் அறைந்துண்ணும். பிறமனை நயப்போர் என்பதனால் தீய எண்ணம் கொண்டாலே பூதம் புடைத்துண்ணுமென்பது விளங்கும். இது சம்பந்தமாக **மணிமேகலையிற்** சொல்லியுள்ள ஒரு கதை இங்கே கவனிக்கத் தக்கது. மிகுந்த கற்புடையவளாகிய ஒரு பதிவிரதை, காவிரியில் நீராடிவிட்டுத் தன் மனைக்குப் போய்க்கொண்டிருக்கையில் அரசன் மகன் அவளைக்கண்டு, "நீ இங்கே வா" என்றான். பத்தினியாகிய தான் பிறன் நினைப்பில் புகுந்ததைப் பொறாமல் அவள் இந்தச் சதுக்கத் தெய்வத்தின் முன்னேபோய், "இதுவரையில் யான் ஒரு குற்றமும் செய்தறியேன்; ஆனாலும் பிறனுடைய நெஞ்சில் நான்

புகுந்தமையால் அபுத்தி பூர்வமாக யான் ஏதேனும் ஒரு குற்றம் செய்திருக்கலாமென்று தோற்றுகிறது. ஆதலால், என்னைக் கொன்றுவிடு". என்று முறையிட்டாள். "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை" என்று பெரியோர் சொல்லியிருப்பதை அத்தெய்வம் அவளுக்கு நினைப்பூட்டிக் கொழுநனையே தெய்வமாகக் கொண்டொழுகும் பெண்டிர் பிறர் நினைப்பில் புகாரென்றும், அந்தப்பெண் கணவன் அனுமதியின்றிக் கோயில்கள் முதலிய இடங்களுக்குப் போய்வந்தவளாகையால் பிறனுடைய நினைப்பிற் புகாது தடுக்கும் வல்லமை அவளுக்கில்லையென்றும், ஆயினும் அரசன்மகன் தவறிழைத்தவனாதலால் விரைவில் அவன் தண்டிக்கப்படுவானென்றும் சொல்லியனுப்பியது. அப்படியே பிறகு நடந்தது.

## V பரசுராமர்.

பரசுராமர், 'மழுவாள் நெடியோன்' என்று சங்கச் செய்யுளில் வழங்கப்படுகிறார். காசியபருக்கு அவர் பூமியைக்கொடுத்த இடம் மலைநாட்டில் 'இருஞாலக்கொடை' என்று பெயர்பெற்றிருக்கின்றது. அங்கும் வேறு பல இடங்களிலும் பரசுராமருக்குக் கோயில்கள் உள்ளன.

## VI பலராமனும் கண்ணனும்.

சேரனும் சோழனும் ஒருசமயஞ் சேர்ந்திருந்ததானது பலராமனும் கண்ணனும் சேர்ந்திருந்தாற்போல் இருந்ததென்று **புறநானூற்றில்** கூறப்பட்டிருக்கிறது. **பரிபாடலில்,** சோலைமலையில் கண்ணனும் பலராமனும் கோயில் கொண்டெழுந்தருளியிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இப்பொழுது அந்தச்சந்நிதி காணப்படவில்லை.

பரமசிவன், பலராமன், கண்ணன், முருகக்கடவுளென்னும் இந்நால்வரும் ஒருங்கு கூறப்பெற்றுள்ளார்.

"ஏறுவல னுயரிய வெரிமரு ளவிர்
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்
மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்
மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென
ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வ ருள்ளும்"

என்பது **புறநானூறு.**

"முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழுகின்னா
சக்கரத் தானை மறப்பின்னா தாங்கின்னா
சத்தியான் றாடொழா தார்க்கு"

என்பது இன்னா நாற்பது.

## VII இராமர்.

இராமருடைய பெருமை சங்கச் செய்யுட்களில் பல இடத்தும் காணப்படுகின்றது. சங்கத்தில் இராமாயணம் இயற்றப்பெற்று வழங்கி வந்ததாகத் தெரிதலின், அவரைப்பற்றி நான் அதிகஞ்சொல்ல வேண்டுவதில்லை. புறநானூற்றில் ஓர் அரசனை ஒரு புலவர், "இராவணன் வசமிருந்த நாட்டை விபீஷணனுக்கு இராமர் கொடுத்து விட்டதுபோல் நீ சத்துருக்கள் வசமாயிருக்கிற நாடுகளைத்துணிந்து இரவலர்க்குக் கொடுத்துவிடுவாய்" என்று பாராட்டியிருக்கிறார்.

## VIII காலன்.

இவன் 'காலன் என்னும் கண்ணிலி' என்று சொல்லப்பட்டிருக்கிறான்; கூற்றம் என்றும் வழங்கப்படுவான்; சிறந்த உபகாரிகளிறந்தபொழுது, பிரிவாற்றாமல் வருந்திய சில பெரியோர் பாடல்களால் இவனுண்மை வெளியாகின்றது. இக்கருத்தைத்தொடர்ந்து, "கரிவேண்டுமானால் கற்பகத்தை வெட்டலாமா? நல்ல உபகாரிகளைக் காலன் கொண்டுபோய் விடுகிறானே" என்று பிற்காலத்தவரும் கூறியிருக்கிறார்.

## IX காமன்.

முன்னாளில் மன்மதன்கோயில் பற்பல இடங்களில் இருந்தது. காமன்கோட்டம் என்று அக்கோயில் சொல்லப்படும்.

திருமாலைப் பெறவேண்டுமென்று சூடிக்கொடுத்த நாச்சியார் மன்மதனைத் துதித்த ஒரு பதிகம் நாச்சியார் திருமொழியில் காணப்ப

கன்னிப்பெண்கள் நல்ல கணவனைப்பெறக் காமனை வழிபட்டுத் துதிப்பார். காமன் கோட்டத்தில் விவாகம் செய்வதும் வழக்கம். சுரமஞ்சரி என்னும் கன்னிப்பெண் காமன்கோயிலில் தனது நினைப்பைச்சொல்லி, "சீவகனைத் தருவாயாக" என்று பிரார்த்தனை செய்தாள். காமனது விக்கிரகத்துக்குப் பின் மறைந்திருந்த சீவகனுடைய தோழன் அக்கடவுள் சொன்னதுபோல், "தந்தேன்" என்றான். அருகில் மறைந்திருந்த சீவகன் வெளிப்பட்டு அவளை மணந்து கொண்டதாகச் சிந்தாமணியிற் காணலாம்.

"தாமரைச் செங்கட் செவ்வாய்த் தபனியக் குழைழி லோர்
காமனின் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின்
மாமணி மகர மம்பு வண்சிலைக் கரும்பு மூன்றோர்
பூமலி மார்ப வீவ லூரொடும் பொலிய வென்றான்"

(சீவக சிந்தாமணி.)

**பெருங்கதையில்** உத்தமஸ்திரீயாகிய பத்மாவதியின் கதையாலும் காமன் கோட்டமுண்மையும் அவனை அவள் வழிபட்டுப் பேறுபெற்றமையும் விளங்கும்.

## X சூரியன்.

சூரியன் சங்கச் செய்யுட்களில் பலபடப் பாராட்டப் பெற்றுள்ளான். காவிரிப்பூம பட்டினத்தில் சூரியன்கோயில் இருந்ததாக, "உச்சிக்கிழான் கோட்டம்" என்ற **சிலப்பதிகாரப்பகுதி** விளக்குகின்றது. கும்பகோணத்தில் ஸ்ரீ நாகேசுவரசுவாமி கோவிலிலும், பேரளத்திற்கருகிலுள்ள திருமீயச்சூரில் இருக்கும சிவாலயத்திலும், சூரியனர் கோயிலென்னுமூரிலும் சூரியனுடைய ஆலயங்கள் இருக்கின்றன.

## XI சந்திரன்.

சந்திரனுக்கும் பண்டைக்காலத்தில் ஆலயமிருந்ததாகத் தெரிகிறது. "நிலாக்கோட்டம்" என்று **சிலப்பதிகாரத்து**ள்ள தொடர்மொழியாலும் இது விளங்கும். பிறையைத் தொழுவது சில தேசங்களில் இன்றும் நடைபெறுகிறது. பயிர்களுக்கு அவன் அதிபனாகையால் எருவை முன்னே இறைத்து அவனைத் தொழுவது வழக்கமென்று அகப்பொருள் இலக்கணத்தால் தெரிகிறது. கன்னிப்பெண்கள் பண்டைக்காலத்திற் சந்திரனைத் தொழுதுவந்தனர்.

மதுரையில் கன்னி, கரியமால், காளி, ஆலவாய் (பரமசிவன்) முதலானோர் கோவில்கள் இருந்தனவென்று **கலித்தொகை, கல்லாடம், வேம்பத்தூரார், திருவிளையாடல்** முதலியவற்றால் விளங்கும். **சிலப்பதிகாரத்தில்,**

"அமரர் தருக்கோட்டம் வெள்ளானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல்வாயி
லுச்சிக் கிழான் கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக்கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம் புக்கெங்குந்
தேவிர்கா ளெம்முறுநோய் தீர்மென்றுமேவி"

என்று கூறியிருத்தலால், கற்பகதரு, வெள்ளையானை, பலராமர், சூரியன், கைலாயம், வேலாயுதம், வச்சிராயுதம், ஐயனார், நிக்கந்தன் (அருகதேவன்), சந்திரன் இவர்களுக்கு ஆலயமிருந்தமை புலப்படும்.

## XII நகரத் தெய்வம்.

மதுராபுரி என்பது மதுரை நகரத்தெய்வத்தின்பெயர். கோவலன் வெட்டுண்டதால் கோபமடைந்த கண்ணகிமுன் நேரில்வர அது பயந்து பின்புறமாகவந்து கோவலன் கண்ணகி ஆகிய இருவரின் பழம் பிறப்பை உணர்த்தி அவளுடைய கோபத்தைத் தணித்ததாகத் தெரிகிறது. காவிரிப்பூம்பட்டினத்தில் அந்நகரத் தெய்வமாக, 'சம்பாபதி' என்று ஒன்று இருந்ததாக மணிமேகலை தெரிவிக்கின்றது; இப்படியே பெரிய நகரம் ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு தெய்வமிருந்து அதனைப் பாதுகாத்து வந்ததாகப் பழைய நூல்கள் கூறுகின்றன.

### பத்தினிக் கடவுள்

பதிவிரதையைப் பத்தினிக்கடவுள் என்பர். 'மாஸதிகற்கள்' பதிவிரதைகளை உத்தேசித்து அமைக்கப்பட்டவை; மாஸ்திகல் லென்று இக்காலத்துச் சிதைந்து வழங்குகின்றது. மைஸூர் சமஸ்தானத்தில் மிகுதியாகக் காணலாம். மங்களூர் என்று சொல்லப்படும் மங்களாபுரத்திற்கு அப்பெயர் கண்ணகியால் வந்ததே; கண்ணகிக்கு மங்கலாதேவி என்று ஒரு பெயருண்டு. கண்ணனூரில் கண்ணகிகோயில் உள்ளது. மலைநாட்டிலும் யாழ்ப்பாணம் முதலியவற்றிலும் கண்ணகிக்குப் பல கோயில்கள் உள்ளன. நாகபட்டினத்திற்கு அருகில பத்தினி கோயிலென்றே ஓரிடமிருக்கின்றது.

### வீ ர ன்.

யுத்தத்தில் பகைவர் கவர்ந்த பசுக்களை மீட்டு யுத்தஞ் செய்து இறந்த வீரர்கள் தெய்வமாகக் கொண்டாடப்படுவார்கள். அவர்கள் இறந்த இடத்தில அவர்கள் பெயரெழுதிய கல்லை நட்டு மாலைசூட்டி வழிபடுவது வழக்கம். அது வீரக்கல்லென்று கூறப்படுவதன்றி வீரனென்னுந் தெய்வமாகவும் வழிபட்டு வரப்பெறுகின்றது. அவர்களுடைய உருவம் போன்ற ஒரு சிலை செய்வித்து அதனை வழிபடுதலுமுண்டு; அதற்கு உருக்கல்லென்று பெயர்.

கடவுளின் இருப்பிடங்கள் திருமுருகாற்றுப்படையிற் சிலசொல்லப்பட்டிருக்கின்றன.

"சதுக்கமுஞ் சந்தியும் புதப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினும்"

என்னும் திருமுருகாற்றுப்படையையும்,

"ஆலமுங் கடம்புநல் யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்"

என்னும் பரிபாடலையும் அவற்றின் குறிப்பையும் பார்க்க.

## வேறு தெய்வங்கள்.

இல்லுறை தெய்வம், வருணப்பூதங்கள், நீரரமகளிர், வரையரமகளிர், காட்டரமகளிர், கொல்லித்தெய்வ முதலாகப் பலதெய்வங்கள் சங்க நூல்களிற் கூறப்படுகின்றன.

கந்துகள் (தம்பங்கள் அல்லது கந்தங்கள்) சிலசில விடங்களிலுள்ளாரால் தத்தமக்குரிய தெய்வங்களாக வழிபடப்பெற்று வந்தன. அவற்றிற்காக அமைக்கப் பெற்றவிடம் அம்பலமென்று வழங்கப்படும். தம்மால் வெல்லப்பட்ட பகையரசர்களுடைய உரிமைமகளிரைக் கொணர்ந்து வந்து அங்கே யிருக்கும்படி செய்து அத்தெய்வங்களுக்குவழிபாடு செய்து வரும்படி அரசர்கள் செய்வித்தார்களென்பதும் அந்நூல்களால் தெரிகின்றது.



# IV. சங்க காலத்துப் புலவர்கள்

## ஆண்பாலார்.

'புலவர்' என்ற சொலலுக்குப்பொருள் அறிவுடையோரென்பது; புலம்-அறிவு. இவர்கள் பெயர் பழைய நூல்களிலும் உரைகளிலும் நல்லிசைப் புலவரென்றும சான்றோரென்றும காணப்படும்; 'இவர் செய்த செய்யுளை **நல்லிசைப் புலவர்** செய்த ஏனைச செய்யுட்களுடன் சங்கத்தார் கோவாமல் நீககுவா; அங்ஙனம் நீக்காமல் கோத்தற்குக் காரணம் ஆனந்தக் குற்றமென்பதொரு குற்றம் இச்செய்யுட்கு உறாமையானென்று உணர்க..................அகததியனாரும தொல்காப்பியனாரும் இக்குற்றம் கூறாமையிற் சான்றோர் செய்யுட்கு இக்குற்ற முண்டாயினும் கொள்ளாரென மறுக்க' (**மலைபடுகடாம்**, அடி 145-நச்சினார்க்கினியர் உரை) என்பதனாலுணாக.

சான்றோர்-பல குணங்களாலும் நிறைந்தோர்;

"அன்பு நாணொப்புரவு கண்ணோட்டம வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்"

"கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு"

"நவிறொறு நூனயம் போலும் பயிறொறும
பண்புடை யாளா தொடர்பு"

என்பவை இங்கே அறியற்பாலன; இவர்கள்பால் இச்சிறந்த குணங்களைக் கண்டறிந்தே திருவள்ளுவர் மேற்கூறிய பாடல்களை இயற்றினார போலும். இவர்கள்பாலமைந்திருந்த உத்தம குணங்கள் யாவராலும் அளவிடப் படுவனவல்ல;

"உவப்பத் தலைக்கூடி புள்ளப் பிரிதல்
லனைத்தே புலவர் தொழில்"

என்பதும் இவர்களுடைய இயல்பே. எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னர் இவர்களியற்றிய நூல்களிலுள்ள பாடல்கள் முற்றும் அகப்படாவிடினும் கிடைத்தவைகள் பிற்காலத்துக் கவி

களுடைய பாடல்களைக் காட்டிலும் மிக உயர்வுற்றுப் புகழ்பெற்று விளங்குதலையும் பௌதிகப் பொருள்கள் அழிந்தே போதலையும் உற்று நோக்குமிடத்து,

" கலைமகள் வாழ்க்கை முகத்ததெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்-மலரவன் செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யுமுடம்பு "

என்று மிக அழகாக ஸ்ரீகுமரகுருபரமுனிவர் பாடிய அருமைச் செய்யுள் ஞாபகத்திற்கு வருகின்றது; 'தன் முகத்தில் இடைவிடாமல் கலைமகள் வாழப்பெற்றாலும் பிரமன் புலவரையொவ்வான்; ஏனெனின் பிரமனாற் படைக்கப்படும் வெற்றுடம்புகள் அழிந்தேவிடும்; புகழைப் பெறுவனவுமல்ல; புலவர்களியற்றும் கவிகளாகிய பொருள்பொதிந்த உடம்புகள் காலவுடைவில் புகழைப்பெற்று அழியாமல் விளங்கும்' என்பது இச்செய்யுளின் பொருள்.

" நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சீலை
நாற்றிங்க ளுக்குமேல் நில்லாதே - மாறலரை
பொன்றப் பொருதடக்கைப் போர்வேல் வகைவேள்
என்றும் அழியாதென் பாட்டு "

" காவல ரீகை கருதுங்காற் காவலர்க்குப்
பாவலா நல்கும் பரிசொவ்வா-பூவினிலை
ஆகாப் பொருளை யபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருளளித்தேன் யான் "

என்னும் பெரியோர்களுடைய பாடல்கள் இதனைப் புலப்படுத்தும்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் இருந்த இவர்கள் பாடல்கள் வர வரக்குறைந்தும் சிதைந்தும சுடச்சுடப் பொன் ஒளி விடுவதுபோல மிக அழகுற்று விளங்குகின்றன. இவர்களுடைய பெருமையையாவது செய்யுட்களின் சுவையையாவது பிறநலங்களையாவது எடுத்துக் கூறுவதற்கு ஒரு சிறிதும் வல்லேனல்லேன். ஆனாலும் சொல்லவேண்டிய சமயம் தக்கவர்களாற் கிடைத்தமையின் சொல்லி என் நாவைத் தூய்மை செய்து கொள்வேன்.

சங்ககாலத்துப் புலவர்கள் ஒரு காலத்தினரல்லர்; ஒரு தேயத்தாரல்லர்; ஒரு சாதியாரல்லர்; ஒரு குலத்தினரல்லர்; ஒரு தொழிலினரல்லர்; ஒரு மதத்தினரல்லர்; தமிழ்நாட்டில் முதலில் தாமிருந்தவிடத்திலேயே யிருந்து அங்குள்ள பெரியோரிடம் முறையே நூல்களைக்கற்று அப்பால் மதுரைக்கு வந்து,

"பொன்னும் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமருமணியும்
இடைபடச் சேயவாயினுந் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித்தோன்றியாங் கென்றுஞ்
சான்றோர் சான்றோர் பாலராப"

என்பதற்கேற்ப அங்கேயுள்ள புலவர்களோடு நட்புற்று அளவளாவி நூல்களை ஆராய்ந்து தாமும் நல்லிசைப் புலவர்களாகித் தத்தமிடஞ் சென்றார்களென்று தெரிகின்றது.

பழையபாடல்களிலும் உரைகளிலும் சங்கமிருந்து தமிழாராய்ந் தார் என்று இவர்கள் கூறப்படுதல் இதனைப் புலப்படுத்தும். இவர்கள் வைத்தியம், கணிதம், சிற்பம், இசை முதலிய பல கலைகளுள் தததமக் கியன்றவற்றில் நல்ல பயிற்சியுள்ளவர்களென்றும் செல்வம பெறுதலைக் கருதியே கற்றவர்களல்லரென்றும் பிழைப்பிற்குரிய வழி ஒவ்வொரு வர்க்கும் வேறு வேறிருந்ததென்றும் அச்செய்யுட்களாலும் அவற்றைச சார்ந்துள்ள வாக்கியங்களாலும் தெரிய வருகின்றன.

சிற்ப முதலியவற்றுள் இன்னகலையில் இன்னார் பயிற்சியுள்ளவ ரென்பதை இவர்களியற்றிய செய்யுட்களே தெரிவிக்கும். ஒவ்வொரு பொருளின் இயற்கையை நன்றாக அறிந்து நுகர்ந்தே பின்பு செய்யுள் செய்வர். ஒன்பது சுவைகளுள் இவர்கள் நுகருஞ் சுவையே செய்யுளாக வெளிப்பட்டதென்று சொல்லலாம். செய்யுளியற்றுவதில் யாதோரிடர்ப் பாடும் இவர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. அவற்றில், சொற்கள் எழுத்தளவிற் சுருங்கிப் பொருள் விரிந்திருத்தலைப் பாரக்கக் காணலாம். சங்கம் நன்கு நடைபெறும்படி பாதுகாத்த பாண்டிய அரசர்களும் சங் கப் புலவர்களுடன் ஒப்ப இருநது தமிழாராய்ந்தாரென்றும் கவிபாடினு ரென்றும் சேர சோழர்களிலும் அங்ஙனமே கல்வி கேள்விகளிற் சிறந்த வர்களாய் வந்திருந்து தமிழாராய்ந்தோர பலரென்றும் அவரவாபாடல் கள் முதலியவை தெரிவிக்கின்றன.

இவர்கள் பாடல்களில் ஆணி, கலவம், கோவலர், மேதை, தசம், திசை, பலம், மணி, வாதி, முதலிய சிலவட சொற்களே காணப்படுத லால், இவர்கள் காலத்தில் வடசொற்கள் பெரும்பாலும் தமிழ்மொழி யிற் கலக்கவில்லை யென்று சொல்லலாம். நாளடைவில் இங்கே வந் தனவாகிய வடநூல்களின் கலப்பாலும் தெய்வ வழிபாட்டிற்குரிய வகை யாலும் சில சங்கப்புலவர்களாற் சில வட நூல்கள் பெயர்த்தியற்றப் பெற்றமையாலும், வேறு சூலாசம்புசத்தாலும், வட சொற்களும் கருத்துக்களும் இடையிடையே விரவிப் பிற்காலத்துப் பெருகுவனவா

பினை. அங்ஙனம் கலப்பதும் பெருகுவதும் ஒவ்வொரு பாஷைக்கும் இயல்பென்பது பலரும் அறிந்ததே. இராமாயணமும் பாரதமும் சங்க காலத்திற் செய்யுள் வடிவமாக மொழிபெயர்க்கப்பட்டு வழங்கிவந்தன வென்பதைப் பழைய வுரைகளில் மேற்கோள்களாகக் காணப்படும் அந்நூற் செய்யுட்கள் தெரிவிக்கின்றன.

தனித் தனியே இவர்களால் இயற்றப்பெற்ற செய்யுட்கள், பத்துப் பாட்டு, எட்டுத் தொகை முதலியனவாகச் சான்றோரால் தொகுக்கப் பெற்றன. பதினெண்கீழ்க்கணக்கும் இத்தொகை நூல்களைச் சேர்ந்தனவே; தொகுப்பித்தோர் பாண்டியர் முதலியோர்; குணநாற்பது, மூவடி முந்நூறு, சிற்றட்டகம், முத்தொள்ளாயிரம், ஆசிரியமாலை, தகடூர் யாத்திரை முதலிய பழைய நூல்களிலிருந்து சில சில பாடல்களே பழைய உரைகளில் மேற்கோள்களாகக் காணபபடுகின்றன.

மேற்கூறியபடி தனிப்பாடல் ஒவ்வொரு நூலாகத் தொகுக்கப் பெற்றதற்குக் காரணம் பாட்டு முதலியவை யென்பர்; பாட்டால் தொகுக்கப்பெற்றவை கலித்தொகை, பரிபாடலென்பன; பொருளால் தொகுக்கப்பெற்றவை அகநானூறு, புறநானூறு; இடத்தால் தொகுத்தது களவழி நாற்பது; காலத்தால் தொகுத்தது கார்நாற்பது; தொழிலால் தொகுத்தது ஐந்திணையைம்பது முதலியன; அளவால் தொகுக்கப்பட்டவை குறுந்தொகை, ஐங்குறுநூறு.

இந்த நல்லிசைப் புலவர்களுள்ளே அரசர்பால் மந்திரக்கிழமை பெற்று விளங்கியவர்களுமுண்டு. மந்திரிகளுக்குக் கலைக்கண்ணெனவொரு பெயருண்டன்றோ? இப்புலவர்களுள்ளே சிலர் சிலருடைய இயற்பெயர் விளங்கவில்லை. ஊர் முதலியவற்றாலும் பிறகாரணங்களாலும் சிலர் சிலர் பெயர்பெற்றுள்ளார்.

இவர்களுள் ஆலங்குடி வங்கனார், ஆலத்தூர் கிழார், ஆவூர் கிழார், காரி கிழார், தாமப்பல் கண்ணனார், இடைக்காடனார், கல்லாடனார் முதலியோர் ஊராற் பெயர்பெற்றோர்.

உறுப்பாற் பெயர்பெற்றோர் நெடுங்கழுத்துப்பரணர், நெட்டிமையார், நரிவெரூஉத்தலையார், பரூஉமோவாய்ப் பதுமனார், காரிக்கண்ணனார், குண்டுகட் பாலியாதன் முதலியோர். இப்பெயர்களுள் பரணர், பதுமனாரென்பன அப்புலவர்களின் இயற்பெயர்கள்.

ஊரும் உறுப்பாலும் பெயர் பெற்றோர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஐயூர் முடவனார் முதலியோர்.

தொழிலாற் பெயர்பெற்றோர் தமிழ்க்கூத்தனார், முதுகூத்தனார், கணக்காயனார், தேவகுலத்தார், வண்ணக்கன், இளம்பொன்வாணிகன், பொன்வாணிகன், உலோச்சனார் முதலியோர்.

ஊராலும் உறுப்பாலும் தொழிலாலும் பெயர்பெற்றோர் நல்லூர்... முடக்கொல்லனார் முதலியோர்.

நாண்மீனாற் பெயர்பெற்றோர் மூலங்கிழார் முதலியோர்.

தாம் இயற்றிய செய்யுட்களில் அமைத்துள்ள இனிய ஒருமொழி தொடர்மொழிகளின் நயத்தாற் பெயர்பெற்றோர் பதடிவைகலார், கல் பொருசிறுநுரையார், தேய்புரிப் பழங்கயிற்றினார், வில்லகவிரலினார், தொடித்தலை விழுத்தண்டினார், ஓரேருழவர், அணிலாடு முன்றிலார், அங்குல் வெள்ளத்தார், கவைமகன், ஓரம்போகியார், ஓரிற் பிச்சையார், கூகைக்கோழியார், காக்கைபாடினியார் நச்செள்ளையார், காலெறி கடிகையார், குப்பைக்கோழியார், குறியிறையார், செம்புலப்பெயனீரார், தனிமகன், தும்பிசேரினனார், நெடுவெண்ணிலவினார், பக்குடுக்கை நன் கணியார், மீனெறி தூண்டிலார், விட்ட குதிரையார் முதலியோர்

தந்தை பெயரோடு சார்த்திய பெயரினர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், சேந்தம் பூதனார் முதலியோர்.

சிறப்புப் பொருளைத்தரும் 'ந' என்னும் பட்டத்தைச்சார்ந்த பெயரினர் நக்கீரனார், நப்பாலத்தனார், நத்தத்தனார், நக்கண்ணனார் முதலியோர்.

'நன்மை' என்னும் அடைமொழியுள்ள பெயரினர் நல்லச் சுதனார், நல்லந்துவனார் முதலியோர்.

'தொன்மை', 'வன்மை' என்னும் அடைமொழிகளுள்ள பெயரினர் தொல்கபிலர், வன்பரணர் முதலியோர்.

சிறப்பால் வந்த பெயரினர் ஆசிரியனல்லந்துவனார், முதுகண்ணன் சாத்தனார் முதலியோர்.

மேற்கூறிய புலவர்களுள் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், மதுரைக்கணக்காயர், இவர்மகனார் நக்கீரர், பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார், கடியலூர் உருத்திரங்கண்ணனார், கோதமனார், கபிலர், வெம்பத்தூர்க் குமரனார் முதலியோர் அந்தணர்.

பாலைபாடிய பெருங்கடுங்கோ (சேரன்), கோப்பெருஞ் சோழன், ஒல்லையூர்தந்த பூதபாண்டியன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன்

# சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார், பண்டவாணிகன் இளந்தேவனார் முதலியோர் வணிகர்.

அம்பர்கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன், அரிசில்கிழார், ஆலூர்கிழார், நல்லாவூர்கிழார், நொச்சிநியமங்கிழார் முதலியோர் வேளாளர.

வேளாளரில் உழுவித்துண்போர், உழுதுண்போரென இருபிரிவுண்டு.

பித்தாமத்தர், நல்லச்சுதனார், கண்ணனாகனா முதலியோர் இசையில் வல்லோர்.

கேசவனார் முதலியோர் இயலினும் இசையினும் வல்லோர்.

மருத்துவன் தாமோதரனார், மருத்துவன் நல்லசசுதனார் முதலியோர் ஆயுள்நூலிற் பயிற்சியுற்றோர.

கணியன் பூங்குன்றன், கணிமேதாவியார் முதலியோர் கணித நூலில் வல்லோர்.

ஐந்திணைகளுள், குறிஞ்சியைப் பாடுதலிற் கபிலர் முதலியோரும், முல்லையைப பாடுதலிற் பேயனார், சோழன் நல்லுருத்திரன் முதலியோரும், பாலையைப்பாடுதலிற் சேரன்கடுங்கோ முதலியோரும, மருதத்தைப்பாடுதலில் மருதனிளநாகனார் முதலியோரும, நெய்தலைபபாடுதலில் அம்மூவனா, நல்லந்துவனார் முதலியோரும புகழ்பெற்றவர்கள்.

**புறநானூற்றில் 2-ஆம்** பாட்டின் ஆசிரியராகிய முரஞ்சியூர் முடிநாகராயரென்னும புலவரை முதற்சங்கப்புலவருள் ஒருவரென்று சிலர் எண்ணுகின்றனர்; அந்தச் செய்யுளிற் பாரதபபோா கூறபபட்டிருத்தலின், அபபெயருள்ளவேறொருவர் முதற்சஙகததில் இருநதிருததல் கூடுமென்று ஒரு சாரார் நினைககின்றனா.

சைனரும் பௌத்தரும இச்சங்கத்திற் சோந்திருநததாகத் தெரிகிறது. பதினெண்கீழ்க்கணக்குக்களில் நாலடியார், ஏலாதி, பழமொழியென்பவை சைனரால் இயற்றப்பட்டவை. மணிமேகலை பௌத்தசமய நூல். சங்கப்புலவர்களில் ஒருவராக இருந்த உலோசசனாரென்பவரைச் சைனராக எண்ணுகின்றனர்; உலோச்சென்பது சைனர்களில் ஒரு வகைக்கிரியைக்குப் பெயர். போதியாரென்பவரைப் பௌத்தராக எண்ணுகின்றனர்; போதி-அரசமரம். கி.பி. நான்காம் நூற்றாண்டிலோ ஐந்தாம் நூற்றாண்டிலோ ஒரு சைனாசாரியர் மதுரையில் சைனசங்கமொன்றை ஸ்தாபித்ததாகக் கேட்டிருக்கிறேன்.

பக்குடுக்கை நன்கணியாரென்ற ஒரு புலவர் பெயர் முன்னமே சொல்லப்பட்டது; அவர் சோதிடத்திற் பயிற்சியுள்ளவர். அதற்குரிய கழற்சிமணிகளையும பலகறைகளையும் நிரப்பிய பைகளை உடையில் அவர் செருகிவைத்துக்கொண்டிருந்தனர போலும். பக்கு-பை; கழற்சிக்காயை வைததுககொண்டு எண்ணும் வழக்கம், இக்காலத்திற் போலவே மலைநாட்டிற் சங்ககாலததிலுமிருந்ததாகப பதிற்றுப்பத்தால்

இவர்கள் வாககில் வந்துள்ள அழகிய உவமைகளிற் சிலவற்றைச சொல்லுவேன். அரசனுக்கு உயிரையும், பெரும்பாலும் வண்மையே இல்லாத இடத்திலிருந்து தனியேவிளங்கும உபகாரியாகிய ஒருவனுக்கு அருஞ்சுரத்திலுள்ள நிழன் மரத்தையும், உசாவினது அகலத்திற்கு ஆகாயத்தையும, எருமைக்குக் குண்டுக்கல்லையும், கந்தைத் துணிக்குப பாசிவேரையும பருந்தின் சிறகையும், கள்மயக்கத்திற்குத் தேட்கடுப்பையும, மெல்லிய வெள்ளாடைக்குப்பாலாவியையும் பாம்பின் சட்டையையும, செங்நெலுக்கு வேங்கைமரப்பூவையும், சேவற்கோழியின் நெற்றிசூட்டிற்கு வேங்கைமரததின் பூவையும் முள்ளு முருங்கையின் பூவையும, தடாரிப்பறைககுத் திங்களையும் யானைக்காற்சுவட்டையும,நிமிர்ந்த சோற்றின் அவிழுககுக் கொக்கின் நகத்தையும், தமிழ்நாட்டரசா மூவாக்கும் முததீயையும இறைவனுடைய மூன்றுகண்களையும், தலைவனுக்குச சூரியனையும, நண்பர்க்குக் கண்களையும, பலவகைப் பூக்களாலாகிய மாலைககு இநதிரவில்லையும, பன்றித்தலைக்கு உரலையும், பனைமரததினடிக்கு முழவையும், மகளிர்நடைக்கு மயில்நடையையும், முத்தாரத்திற்குப் பிறையையும், முயல்விழிக்கு நீர்க்குமிழியையும், வறுமைக்கு அராவையும் நரகவேதனையையும், வேள்விதீக்குச் செந்தாமரைப்பூவையும் உவமை கூறியிருக்கின்றனர். இன்னும், கிளியின் மூக்கிலுள்ள வேப்பம்பழத்திற்குக் கொல்லன் நகநுதியிற்கொண்ட ஒரு வகைப் பொற்காசினையும், வறியவனுடைய வாடிய உடம்பிற்கு ஒரு வகைக் கொள்கையுமில்லாதானுடைய உடம்பையும், அரசனுடைய ஆட்சியில்லாத குடிகளுக்குத் தாயில்லாத இளங்குழந்தைகளையும், வானத்திலுள்ள அங்காரகனுக்குக் கடலில் உலாவும் திமிலிலுள்ள விளக்கையும், யானையின் மேலே தைக்கபபட்ட அம்புகளுக்குக் குன்றத்தில் மொய்த்துள்ள குருவிகளையும், தலைவனையே நோககிக்கொண்டிருக்கும் மகளிர் பார்வைக்குச் சூரியனையே நோக்கிக்கொண்டிருக்கும் நெருஞ்சிப் பூக்களையும், திண்ணிய வீரனொருவனுக்கு ஒருநாளில் எட்டுத்தேர்களைச் செய்யும் தச்சன் ஒருமாதம் முயன்று செய்த உருளையையும், உடலைச் சூழ அம்பு தைக்கப்பெற்ற ஒரு வீரனுக்கு முள்ளம்பன்றி

[illegible]யும் கழற்சிக்காயையும் வடமொடு கழன்று ஆரைக்கால்களோடுமட்டு [illegible]ருக்கும் தேருருள்களையும் உவமை கூறியிருத்தல் இவர்களுடைய [illegible]ழ்ந்த அனுபவத்தைப் புலப்படுத்துகின்றது.

புலவர்களுக்குள் ஒருவர்பால் மற்றொருவர்க்குள்ள அன்பு மிக அதிகம்; "மோசி பாடியவாய்" எனப் பெருஞ்சித்திரனாரென்னும் புலவரால், ஏணிச்சேரிமுடமோசியார் பாராட்டப் பெற்றிருத்தலையும்,

"அரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய
மறம்புரிகொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையி னெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்"

எனப் பெருங்குன்றூர் கிழாரென்னும் புலவராலும், "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க்கபிலன்" எனப் பொருந்திலிளங்கீரனாரென்னும் புலவராலும், "புலனழுக் கற்ற வந்த ணாளன், இரந்துசென் மாக்கட் கினி யிடனின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்", "பொய்யா நாவிற் கபிலன்" என மாறோக்கத்து நப்பசலையாரென்னும் புலவராலும் கபிலர் பாராட்டப் பெற்றிருத்தலையும், "அன்றும் பாடுநர்க் கரியை யின்றும், பரணன் பாடினன்" என ஔவையாரால் பரணர் பாராட்டப் பெற்றிருத்தலையும், 'கபில பரணர்', 'கல்லாட மாமூலர்' என்னும் வழக்கத்தையும் உற்று நோக்கும்பொழுது இவர்களுள் ஒருவர் பால் மற்றொருவர்க்குள்ள அன்புடைமை விளங்கும். தமிழ்ப்பெருக்கத்திற்கு இதுவும் ஒரு காரணமே.

இவர் அரசர்களுக்குப் புத்தி புகட்டலும் உண்டு:—

தருமத்தைச் செய்வதற்கு வலியிலலீராயினும் தீயசெயல்களைச் செய்யாதிரென்பதைச் சொல்ல எண்ணி, "நல்லது செய்த லாற்றீ ராயினும், அல்லது செய்த லோம்புமின்" எனவும், பொய்யைச் சொல்லற்கவென்பார், "நிலம் பெயரினு நின்சொற் பெயரல்", "நிலந்திறம் பெயருங் காலை யாயினுங், கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே" எனவும், பகைவர்பால் இரக்கத்தையுண்டாக்க வெண்ணியவர், பகைவரைக் கொன்றவிடத்து அவர் பெண்டிர் தம் இளம்புதல்வரைப் பாதுகாத்தற் பொருட்டுத் தாம் இறந்துபடாது அடகு தின்று உயிர் வாழ்கின்றாரென்பதைப் புலப்படுத்த நினைந்து, "அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச், சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை, பூளை நீடிய வெருவரு பறந்தலை, வேளை வெண்பூக் கறிக்கும், ஆளி லத்த மாகிய காடு வழியே வருவல்" எனவும், நீ தீயவரோடு இணங்கலாகா தென்பார், "நின்னொன்று மொழிவல், அருளு மன்பு நீக்கி நீங்கா, நிரயங் கொள்பவரோ டொன்றுது காவல், குழவி கொள்பவரி னோம்புமதி", "நல்ல

வல்லுநர் தீயதன் தீமையும், இல்லை யென்போர்க் கினனு கிலியர்" என வும் துணிந்துகூறுதல் யாவரும் கைக்கொள்ளற்பாலது.

ஒருவகையாக அரசர்களைப் புகழ்ந்து அவர்களுக்கு நற்செய்கை யை அறிவித்தலும் இவர்கள் கொள்கை.

நீ பெரும்போரில் முன்னே நின்று வாளின் தழும்புபட்ட தேகத்தை உடையையாய்ப் புகழோடு விளங்குதலின், கண்ணுக்கு இன்னாய், செவிக்கு இனியை; நின்பகைவர், நினக்குப் புறங்கொடுத்து ஓடிப் போதலிற் சிறிதும் உடம்பிற் புண்ணில்லாமலிருந்து பழிக்கப்படுதலால் கண்ணுக்கினியர், செவிக்கின்னர்; நீயும ஒன்றிலினியை; அவரும் ஒன்றிலி னியரென்பார்,

"நீயே, அமர்காணி னமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர்நிற்றலின்
வாஅள்வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக்கினியை கட்கின் னாயே,
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக்கினியர் செவிக்கின்னரே
நீயுமொன் றினியை யவரு மொன் றினியர்"

என்று கூறியது தலைவன் வீரத்தையும புலவரின் இயல்பையும் எங்ஙனம்!

கொடுத்துச செல்வப் பெருக்கத்தை நீ அடையவேண்டு மென் பவர், "நின் பகைவர், அருளிலர் கொடாமை வல்ல ராகுக" என்பார்.

இன்னும், இவர் அரசர்களுடைய பள்ளியெழுச்சியில் அவர்கள் முன்னோர்களின் நற்குண நற்செய்கைகளையும அவர்களுடைய நல்ல வர லாறுகளையும் இனிய பாடலில் அமைத்துப்பாடி அவர்களுக்கு நல்ல அறி வைப் புகட்டுவர்.

இரண்டு அரசர்கள் பெரும்போர் செய்கையில் இப்புலவர்கள் அவர்களுக்கு இடையே துணிந்துசென்று நின்று இனிய மொழிகளால் சமாதானஞ் செய்வித்துக் கலந்து வாழச்செய்வர்.

இவர்கள் பயிர்களின் இயற்கை நலத்தைக் கூறல் மிக்க இன் பத்தை அளிக்கும்;

"பைங்கனி யவரை பவழங் கோப்பவும்
கருங்கனிக் காயா கணமயி லவிழவும்
கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்

கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
முல்லை சான்ற முல்லையம் புறவு"

என்பதனால் அவரைப்பூ, காயாம்பூ, முசுட்டைப்பூ, காந்தட்பூ என்பவை கூறப்பெற்றிருத்தல் காண்க. இப்படியே **மலைபடுகடாம்,** 110 - ஆம் அடி முதலியவற்றிலும முசுட்டைக்கொடி முதலியவை கூறப்பெற்றிருத்தல் அறிந்து இன்புறற்பாலது. மலைவளங்கூறுதலும மிக்கசுவை பயப்பதாகும்; அவற்றுள் ஒன்று வருமாறு:—

> "பாரியது யறம்பு, உழவருழாதன நான்கு பயனுடைத்து;
> ஒன்றே, சிறியிலைவெதிரி னெல்விளையும்மே
> இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழ மூழ்க்கும்மே
> மூன்றே, கொழுங் கொடிவள்ளி கிழங்கு வீழ்க்கும்மே
> நான்கே, அணிநிறவோரி பாய்தலின் மீதழிந்து
> திணி நெடுங்குன்றந் தேன்சொரி யும்மே"

என்பது. இப்படியே இவர்களுடைய செய்யுட்களிலுள்ள பலவகைச சுவைகளையும அவற்றால் அறியக்கூடிய பண்டைக்கால வழக்கங்களையும பிறவற்றையுஞ் சொல்லுதற்கு நேரம சிறிதும் பற்றாது; ஆதலால் இதனோடு இந்த விஷயத்தை ஒருவகையாகப் பூர்த்திசெய்கிறேன்.



# V. சங்க காலத்துப் புலமைவாய்ந்த பெண்பாலார்.



தமிழாராய்ந்து தங்கள் புகழைப்பரப்பிய பெண்மணிகள் பண்டைக்காலத்திற் பலர் இருந்தனர். பெண்பாலார் சுதந்தரமில்லாதவர்கள் என்று சொன்னாலும் அவர்களுடைய பெருமை பெரிது. தாய் என்ற சொல் அவர்களுக்கே அமைந்துள்ளது. தாய் என்கிற பதவியைக் காட்டிலும் பெரியதொன்றில்லை. "அன்னையே யப்பா வொப்பிலா மணியே" என்று பெரியோர் இறைவனைத் தாயாகக் கூறியிருப்பது இதனைப் புலப்படுத்துகின்றது. உலகப்பற்று நீங்கிய துறவிகளைத் தந்தை முதலிய எல்லோரும் பணியவேண்டுமாயினும், தாயைக்கண்டால் அத்துறவிகள் பணியவேண்டும் என்பது விதி. பட்டினத்துப் பிள்ளையார் உலகைத் துறந்தவராயிருந்தும், தம் தாயின் ஈமக்கடனைக் கழித்துவிட்டு அப்பால் வேறிடஞ் செல்லவேண்டுமென்பதைக் கருதி, குடியிருந்த வீட்டிற் கொள்ளிவைக்க வேண்டுமென்று காத்துக்கொண்டிருந்ததாகச் சொல்வார்கள். பிரபோதசந்திரோதயமென்ற நூலில் ஒரு விவாதத்தில், "சந்நியாசிகளும் வந்த தாயரை வணங்குவாரே" என்று கூறப்பட்டுள்ளது. பெண்பாலார் அவ்வளவு பெருமை வாய்ந்தவர்கள். மேன்மை, அறிவு முதலிய குணங்கள் இயற்கையில் அமைந்தவர்கள். இயற்கை அறிவுடன் செயற்கை அறிவும் சேர்ந்துவிடின், அவர்களுடைய பெருமை அளவிடற்கரிதாகும். சங்ககாலத்தில் தமிழாராய்ந்து விளங்கிய பெண்பாலார் ஐம்பதின்மருக்கு மேலிருந்திருக்கலாமென்று தெரிகிறது. அவர்களுட் சிலரைப்பற்றிச் சொல்லுவேன்.

## காக்கைபாடினியார் நச்செள்ளையார்.

காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்ற பெயருடைய ஒருவர் இருந்தார். செள்ளையார் என்ற சொல் தாயார் என்ற பொருளுடையதென்றும், தள்ளை யென்பதன் மரூஉவாகிய சள்ளையென்பது பின்பு செள்ளை யென்று மாறிவிட்டதுபோலுமென்பர். இவர் மலைநாட்டரசன்பாற் பரிசு பெற்றவராகையால், 'ந' என்ற சிறப்பெழுத்துடன் நச்செள்ளையார் என்று இவர் வழங்கப்பட்டாரென்று தெரிகிறது. கணவனுடைய பிரிவினால் வருந்தியிருந்தபொழுது அதற்குப்

பரிகாரமாக விருந்துவரக் கரைந்ததைப் பாராட்டி இவர் ஒரு பாடல் பாடினமையால், காக்கைபாடினியார் என்று பெயர் பெற்றார் போலும். அச்செய்யுள் வருமாறு :—

" திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே "

(குறுந்தொகை, 210.)

'தலைவனது பிரிவாற்றாமையால் வருந்தும் எனக்கு அவ்வருத்தம் நீங்கும்படி விருந்துவரக் கரைந்த காக்கைக்குப் பலியாக நள்ளியின் காட்டிலுள்ள பசுக்களின் நெய்யோடு கலந்த தொண்டியில் விளைந்த நெல்லின் சுடுசோற்றை ஏழுபாத்திரத்தில் ஏந்தினாலும் அது சிறிதாகும்; காக்கைசெய்த உதவி அவ்வளவு பெரியது' என்பது இதன் பொருள்.

தலைவன் பிரிந்த காலத்தில் விருந்திடுதல் முதலியவற்றால் மகளிர் தம் துன்பத்தைப் போக்கிக்கொள்வர்.

**பதிற்றுப்பத்தில்** ஆறாவது பத்தை இவர் பாடி ஆடுகோட் பாட்டுச் சேரலாதனிடமிருந்து ஒன்பதுதுலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பரிசு பெற்றார். அணிகலனுககாக அவன் இவருக்குப் பொன் கொடுத்தமையாலும் இவர் பெண்பாலாரென்பது தெளிவாகிறது.

## பொன்முடியார்.

பொன்முடியார் என்ற பெண்பாலார் ஒருவர் இருந்தார். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இவருடைய கல்விப் பெருமையையும் கவிப்பெருமையையும் நோக்கி அவற்றின் அறிகுறியாக அக்காலத்திருந்த அரசர் ஒரு பொன்முடி அளித்தமையால் இவர் இக்காரணப் பெயரைப் பெற்றிருக்கலாமென்று தோற்றுகிறது. மூரஞ்சியூர் முடிநாகராயரென்னும் பெயரில், 'முடி' என்பது காணப்படுதலின், அப்பெயர்க்குரிய புலவரும் சிறப்பினால் ஒரு முடிபெற்றிருத்தல் கூடுமென்று சிலர் நினைக்கின்றனர். "தொண்டர் சீர்பரவுவாரெனப் பெயர் சுமத்தி ஞான முடிசூட்டி" என்பதனால் சேக்கிழாரும், "ஐந்து பாவுடை நால்வகைக் கவிக்கதி பதியாய், வந்து வட்டமா மணியினன் மணிமுடி புனைந்து" என்பதனால் வில்லிபுத்தூராழ்வாரும் இங்ஙனமே ஒவ்வொரு வகை முடி சூட்டப் பெற்றிருந்தமையும் இங்கே கருதற்பாலது. தலையாலங்கானத்

யென்னும் நூலில் இவராற் செய்யப்பட்ட பாடல்கள் சில உண்டென்று தொல்காப்பிய உரையால் தெரிகின்றது. புறநானூற்றில் இவர் பாடிய பாடல் வருமாறு:—

"ஈன்றுபுறந் தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
யொளிறுவா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே."

இதனால், தம்முடைய மகனைப் போருக்கு அனுப்பி இவர் களித்திருந்தாரென்பதும், இவர் வீரக்குடிப்பெண்டிரென்பதும் தெளிவாகின்றன.

## பூதபாண்டியன் தேவியார்.

பூதபாண்டியனென்பவன் இறந்ததும் அவன் தேவியாராகிய இவர் அவனுடன் தீக்குளிக்க விரும்பினர். மூப்புடைய சிலமகளிர் வந்து தடுத்தனர். அப்பொழுது இவர் அவர்கள் வார்த்தையை ஏற்றுக்கொள்ளாமற் பாடியதாகப் புறநானூற்றில் ஒரு பாட்டுள்ளது. அது,

"பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
யணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியு
முயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே"

என்பது. கணவன் இறந்தபிறகு உடம்பை வைத்துக்கொண்டு உயிர் வாழ்வதை இகழ்ந்து தீப்பாயத் தாம் விரும்பியதை இப்பாட்டில் இவர் சொல்லியிருக்கிறார்; செந்தாமரைக் குளத்தின் நீரும் தீயும் தமக்கு ஒன்றுதான் என்பது இவரது கருத்து. இவரது இயல்பைப் பாராட்டி மதுரைப் பேராலவாயாரென்னும் புலவர்பெருமான் பாடிய, "யானை தந்த" (உசஎ) 'என்னும் புறநானூற்றுச் செய்யுளும் இங்கே அறியத்தக்கது.

## ஆதிமந்தியார்.

இவர் கரிகாற்பெருவளவனுடைய புத்திரியார்; ஆதிமருதியார் என்பது இவரது பெயராக இருந்திருக்கலாமென்றும், பிறகு எழுதுவோர்கைப்பிழையால் அப்பெயர் ஆதிமந்தியார் என்று மாறியிருக்குமென்றும் நான் நினைக்கிறேன். இவர் சேரநாட்டரசன் மகனாகிய ஆட்டனத்தியென்பானை மணந்தார்; ஒருகால், கழாரென்னுமூரிலுள்ள காவிரியின் முன்றுறையில் ஒரு விழாவில் அவனுடன் இவர் நீர் விளையாடிக் கொண்டிருக்கையில் அவனை ஆறு அடித்துக்கொண்டு போய் விட்டது. அவனைக் காணாது வருந்தி,

"மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோ ராடுகள மகளே யென்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குருசிலுமோ ராடுகள மகனே"
(குறுந்தொகை)

என்று பாடி அரற்றித் தேடித்திரிந்துசென்று கடலைநோக்கி, 'நான் பத்தினியாயின் அவனைத் தரவேண்டும்' என்று இவர் பிரார்த்திக்கக் கடல் அவனைக் கொணர்ந்து காட்டியது. இதனைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்,

"மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
றன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவி றோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள்"
(2-ஆம் காதை, 11-5)

என்று, கோவலன் கொலைசெய்யப்பட்டபிறகு கண்ணகி பாண்டியனைக்கண்டு வழக்குரைத்துவிட்டு வஞ்சினங் கூறும்போது தான் பிறந்த காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள கற்புடைமகளிர் பெருமையைச்சொல்லுதல் முகமாக ஆதிமந்தியாருடைய கற்பைச் சிறப்பித்துக் கூறினர். கி-பி.55-முதல் 95-வரையிற்* கரிகாற் பெருவளவனென்று ஒருவனிருந்தானென்று சிலாசாசன ஆராய்ச்சியாளர் கூறுதலால், அவன் மகளாகிய இவர்காலமும் அறியத்தக்கதே. சங்கச்செய்யுட்களை ஆராய்ந்து பார்க்கையில் வெள்ளிவீதியார், ஔவையாரென்ற பெண்புலவர்க்கும் பரணர்க்கும் இவர் காலத்தால் முற்பட்டவராக நினைக்க இடமுண்டாகிறது.

* கரிகாலனென்ற பெயருள்ள சோழர் இருவரென்று பழம்பநூல்களால்

## V. சங்ககாலத்துப் புலமைவாய்ந்த பெண்பாலார்.

### வெண்ணிக்குயத்தியார்.

வெண்ணிக்குயத்தியார் என்ற புலமைவாய்ந்த பெண்பாலார் ஒருவர். வெண்ணி என்பது இக்காலத்தில் கோவிலுண்ணி என்று வழங்கப்படுகிறது. நீடாமங்கலம் ரயில்வேஸ்டேஷனுக்கு மேற்கில் உள்ளது; இவர் குயச்சாதியார்; கரிகாற்சோழனைச் சேரனும் பாண்டியனும் மேற்கூறிய வெண்ணியூரிலுள்ள போர்க்களத்தில் எதிர்த்துப் போர்செய்து தோற்றனர். தன் மார்பில் தைத்து முதுகில் உருவிச் சென்ற அம்பாலுண்டாகிய புண்ணிற்கு நாணிச் சேரன்போய் வடக்கே இருந்தான்; ஓடுங்காலத்தது தன் முதுகில் அம்பின் காயம் பட்டதாகப் பிறர்கருதக் கூடுமோவென்று எண்ணி அவன் நாணினன்.

வடக்கிருத்தல் என்பது தோல்வியுற்றவர் உலகவாழ்க்கையை வெறுத்து இனி உயிரைத் துறக்கவேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டு வடக்கே சென்றிருந்து ஊண் உறக்கமின்றி உடம்பைவாட்டி உயிர் விடுவதாகும். இஃது உத்தரகமனம் என்றும் வழங்கப்படும். சேரன் வடக்கிருந்ததைப் பாராட்டிக் கரிகால்வளவனை நோக்கி,"வென்றோய் நின்னினு நல்ல னன்றே, கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை, மிகப்புக ழுலகம்ெய்திப், புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே" என்று பாடியிருக்கிறார்; "நின்றோகை கற்பி னிலைமையெண் ணாதெதிர் நின்று வெந்நிட், டன்றோ வடக்கிருந் தாண்மடப் பாவை யருந்ததியே" எனத் தஞ்சைவாணன்கோவையிலும், "பெரும்பதிக் குவமையும் பெறுமவ், மறக்கடுங் களிற்றுக் குபேரன்வா ழளகை வடக்கிருந்தது" என வில்லி புத்தூராழ்வார் பாரதத்தும் காணப்படும் வாக்கியங்கள் வடக்கிருத்தலின் கருத்தைப் புலப்படுத்தல் காண்க. புறப்புண்ணைப் பெற்றவர்கள் நாணுவதல்லாமல் அவர்களோடு சண்டை செய்தவர்களும் நாணுவார்களென்பது பின்னுள்ள வரலாற்றால் விளங்கும்.

இராவணன் இறந்த பிறகு அவனைப்பார்ப்பதற்கு விபீஷணனுடன் சென்ற இராமர் அவன் முதுகில் புண்கள் இருந்ததைக் கண்டு தம்மை இகழ்ந்துகொள்ளவே விபீஷணன், 'இவன் மார்பில் இருந்த திக்குயானைக் கொம்புகள் அனுமானுடைய குத்தினால் புறத்தே கழன்றுபோனமையால் உண்டாகிய புண்கள் இவை' என்று சொல்லி ஆற்றுவித்தனன். இதனைக் கம்பராமாயணம் இராவணன் வதைப்படலத்துள்ள, "தனிரியல் பொருட்டின் வந்தசீற்றமும்" என்னும் செய்யுள் முதலியவற்றிற் காணலாம்.

### பாரிமகளிர்.

முன்னாளில், பாரி என்று ஒரு சிற்றரசன் இருந்தான். அவன் வள்ளல்களில் ஒருவன். அவனுக்கு இரண்டு புதல்வியருண்டு. அவ்

இருவரும் தமிழ்ப்புலமையுடையவர்களென்பது புறநானூற்றில் அவ்வருடைய பெயராலுள்ள பாட்டிலிருந்து விளங்குகிறது. தன் மகளிரை மூவேந்தர்கள் மணம் செய்துகொள்ள விரும்பியபோது பாரி மறுத்தமையால் அவர்கள் அவனோடு போர்செய்யக்கருதினர். குறிஞ்சிபாடி தமிழ்ப் பெரியாராகிய கபிலர் அப்பொழுது அவனுடன் இருந்தார். அவர் மூவேந்தரையும் நோக்கி, "நீங்கள் ஆடுநர் போலவும் பாடுநர் போலவும் வேடங்கொண்டு வருவீராயின், பாரி தன் மலையை உங்களுக்குக் கொடுத்து விடுவன்" என்று பாரியின் வள்ளன்மையும் வீரமும் விளங்க ஒருபாடல் செய்திருக்கிறார். "கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்று சுந்தரமூர்த்திநாயனார் ஒரு தேவாரத்திற் சொல்லியிருப்பதிலிருந்து பாரியின் புகழ் விளங்குகிறது. மூவேந்தரும் மலையைவளைந்து பெரும்போர் செய்தபோது பாரி இறந்து போனான். அதை நினைந்து அவன் மகளிர் உருகிப் பாடியபாட்டு வருமாறு:—

"அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவி
னெந்தையு முடையேமெங்குன்றும் பிறர்கொளா
விற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
குன்றங் கொண்டார்யா மெந்தையு மிலமே"

(புறநானூறு, 235.)

இம்மகளிரிருவர்க்கும் பிறகு கபிலர் விவாகம் செய்வித்தார். இம்மகளிரின் பெருமை 'பழமொழி' என்னும் நூலிலும் பாராட்டப்பட்டுள்ளது.

## ஔவையார்.

ஔவை என்றது சோற்றுக்குத் தாய் என்பது பொருள். இவர் அதிகமானென்னும் வள்ளலைப் பாடி நெல்லிக்கனி பெற்று அதன் விசேடத்தால் வெகுகாலம் வாழ்ந்திருந்தார். அதிகன்காலத்தில் ஒரு நெல்லிமரம் இருந்தது. அது பலவருஷங்களுக்கொருமுறை ஒரு பழம் தருவது. அப்பழத்தை உண்பவர் வெகுகாலம் ஜீவித்திருப்பார். அதிகன் தன் ஆட்சிக்கு உட்பட்ட இடத்தில் தோன்றியிருந்த அந்த நெல்லிமரத்துக்குக் காவல்வைத்து அது பழுத்ததும் அதைப்பெற்றுப் புசிக்க நினைந்து அதன் அருகே சென்று இருந்த சமயத்தில் ஔவையார் திடீரென்று அவன்முன் சென்றனர். உடனே அதிகன் அதனை அவர் கையிற் கொடுத்துவிட்டான். தனக்குப் பிறகு நாட்டைப் புரக்க மகன் இருப்பதால் தான் நீண்ட காலமிருப்பதிலும் ஔவையார் நெடுங்காலம் வாழ்ந்திருந்தால் உலகுய்யும்படி அவர் செய்விப்பார் என்று அவன் நினைத்துத் தன் கைப்பழத்தை அவர் கையிற் கொடுத்தனன். பழத்தின் அருமையை முதலில் அறியாத ஔவையார் அதை உண்டுவிட்டார். பிறகு அவன்

விசேஷத்தை அறிந்து அதிகனைப் பாராட்டிப் பேசியவர் அவனுக்கு ஒப்பிட்டு, "நீல மணிமிடற் றொருவன் போல, மன்னுக பெரும நீயே" என்று பாடியுள்ளார். ஔவையார் பெயர் பற்பல காலங்களிலிருந்த வித்வான்களின் சரித்திரங்களிற் சம்பந்தப்படுவதால் பல ஔவையார் இருந்திருக்கவேண்டுமென்று சிலர் கருதுகிறார்கள். அதிகன் கொடுத்த நெல்லிக்கனியைத் தின்றதால ஔவையார் சிரஞ்சீவியாக இருந்திருக்கக் கூடுமென்பது சில பெரியோர் கருத்து. கம்பர், ஒட்டக்கூத்தர் காலத்திலும் ஔவையார் இருந்ததாக ஒரு கதை வழங்குகின்றது. அது நம்பத் தக்கதன்று. இவருடைய அருள் மனோதைரியம் கவித்துவம் முதலியன அளவிடற்கரியன. இவரைக் கலைமகள் என்றே பாராட்டுவர். இவரது முதுமையில் திருவாலங்காடு என்னும் சிவக்ஷேத்திரத்திற்கு அருகிலுள்ள பழையனூரில இருந்த காரி என்பான் இவர் ஊன்றிக் கொள்வதற்காக ஒரு மூங்கிற்கோல் கொடுத்து உதவினான். குறிப்பறிந்து அவன்செய்த உதவியால் மகிழ்ந்த ஔவையார் அவனுக்கு விருப்பமுள்ள கறவையாடொன்று வாங்கிகொடுக்க நினைந்து சென்று ஓர் ஆடுவேண்டுமென்று சேரனைகேட்டார். பொன்னால் ஆடொன்று செய்வித்து அதை அவன் அவர்கருக் கொடுத்தான். அதனைக்களிப் புற்று வியந்த ஔவையார், 'சிரப்பான் மணிமௌலிச் சேரமான் றன்னைச், சுரப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தா, னிரப்பவ ரென் பெறினுங் கொள்வர் கொடுப்பவா, தாமறிவர் தங்கொடையின் சீர்' என்ற பாடலைச்சொல்லி, 'சேரா உன்னாடு பொன்னாடு' என்று வாழ்த்தினர். உன் ஆடு பொன் ஆடு என்றும், உன்நாடு பொன்நாடு என்றும் பொருள் படும்படி விளங்குகின்றது இத்தொடர்மொழி. இதனால் 'இன்றும் சேரநாட்டில் மழை தவறாமற் பெய்கிறது; தர்மம் ஓங்குகிறது' என்பர். போரில் அதிகமான் இறந்தபோது

"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையால்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர...

அஞ்சொ னுண்டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
"ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப்பாடுந ருமில்லைப் பாடுநர்க்கொன் றீகுந ருமில்லை"

(புறநானூறு, 235.)

என்றுசொல்லி அவனது கொடையைப் பாராட்டியிருக்கிறார்.

சிலர் கூடி, கோடி என்று மதித்தற்குரிய விஷயங்களைச் சொல்லும்படி கேட்டபோது, ஔவையார்,

"மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று
மிதியாமை கோடி யுறும்
உண்ணீருண் ணீரென்றே யூட்டாதார் தம்மனையில்
உண்ணாமை கோடி யுறும்
கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுவதே கோடி யுறும்
கோடானு கோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்
கோடாமை கோடி யுறும்"

என்று பாடி மகிழ்வித்தனர். இவை யாவரும் எப்போதும் சிந்திக்கத் தக்கவை.

கல்வியறிவில்லாத சிலர் ஒருசமயம் தங்களைப் பாடும்படி கேட்ட போது இவர்,

"மூவர் கோவையு மூவிளங் கோவையும்
பாடிய வென்றன் பனுவல் வாயால்
எம்மையும் பாடுக வென்றனிர் நும்மையிங்
கெங்ஙனம் பாடுகேன் யானே வெங்கட்
களிறுபடு செங்களங் கண்ணிற் காணீர்
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்
புலவர் வாய்ச்சொற் புலம்பலுக் கிரங்கீர்
அவிழ்ச்சுவை யல்லது தமிழ்ச்சுவை தேரீர்"

என்று கூறித் தமது ஆற்றலைப் புலப்படுத்தினர்.

அறம் பொருள் இன்பம் வீடென்பவற்றை யாவரும் எளிதில் அறிந்து கொள்ளும்படி சுருக்கிக்கூறவேண்டும் என்று தமிழ்நாட்டரசர் கேட்டபோது,

இவர்,

"ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு

## V. சங்ககாலத்துப்புலமைவாய்ந்த பெண்பாலார்.

பட்டதே யின்பம் பரமனையோர் நிம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு"

என்று கூறியதாக ஒருவெண்பா வழங்குகிறது.

இங்கே ஈதல் அறம் என்றதற்கேற்ப ஈதலின் பெருமையை இவர்,

"சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி" (நல்வழி)

என்று பாடியிருத்தல் அறியத்தககது.

இராமாயணத்தில் சுக்கிராசாரியரை நோக்கி மகாபலி கூறியதாக வுள்ள,

"மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே"

என்னும் செய்யுளாற் கம்பரும் கொடையின் பெருமையை விளக்கி யிருத்தல் காண்க.

திருக்கோவலூரில் அங்கவை, சங்கவை என்னும் இரண்டு பெண்களுக்கு ஔவையார் விவாகம் செய்வித்ததாகவும், அதற்காகப் பெண்ணையாறு நெய்யாகவும் பாலாகவும் ஓடும்படி இவர் செய்ததாகவும் ஒரு கதை உண்டு. அது வில்லிபுத்தூரார் பாடிய பாரதததுள்ள பாயிரச் செய்யுட்களால் தெரிகிறது.

பெரிய வீரனாகிய அதிகமான் ஒருகாலத்தில் ஔவையாரைத் தொண்டைமானிடம் தூதனுப்பினான். தொண்டைமான் தனது செல்வப்பெருமையும் படைப்பெருமையும் புலப்படும்படி தனது ஆயுதசாலையை அவருக்குக் காட்டினான். ஆயுதங்கள் பளபளவென்று மின்னிக்கொண்டிருந்தன. அப்பொழுது ஔவையார்,

"இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்
தில்லோ ரொக்கல் தலைவன்

யில்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே"

(புறநானூறு, 95.)

என்று பாடி, 'பகைவரை எதிர்த்துக் குத்துதலால், போரிற்சிறந்த அதிகமானுடைய படைகள் நுனிமழுங்கிக் கொல்லனுலையில் திருத்த முறுதற்குக் கிடக்கின்றன. உன்னுடைய படைகள் பளபளவென்று இருக்கின்றன' என்று தொண்டைமான் போர்செய்யச் செல்லாதிருந்ததைப் புலப்படுத்தி அவனை நாணும்படி செய்தனர். இங்ஙனம் சமத்காரமாகக் கூறுவது இவருக்கு இயல்பு.

கும்பகோணத்தில் மருத்தன் என்றும் திருத்தங்கி என்றும் இருவர் இருந்தனர். மருத்தன் பெருத்த கொடையாளி; வந்தவர்களுக்கு வேண்டிய உணவளித்துப் பாராட்டுபவன்; திருத்தங்கி பரமலோபி; ஒளவையார் சென்றபோது இவருக்கு மருத்தன் உணவளித்துப் பாராட்டினான்; அடுத்த வீட்டுக்காரனாகிய திருத்தங்கி தன் வீட்டையும் கொல்லையையும் பார்த்துவிட்டுப் போகவேண்டுமென்று இவரைக் கேட்டுக்கொண்டான். அப்படியே இவர் போய்ப்பார்த்துவிட்டு மருத்தனுடைய கொடைப்பெருமையும் திருத்தங்கியின் உலோபத்தன்மையும் புலப்படும்படி,

"திருத்தங்கி தன்வாழை தேம்பழுத்து நிற்கும்
மருத்தன் திருக்குடந்தை வாழை-குருத்தும்
இலையுமிலை பூவுமிலை காயுமிலை யென்றும்
உலகில் வருவிருந்தோ ருண்டு"

என்ற செய்யுளைப் பாடினர்.

இன்னும் இவர்களைப்போல் தமிழாராய்ந்து புலமை வாய்ந்த வேறு பெண்பாலாருடைய குணவிசேடங்களையும் அவர்களுடைய வரலாறுகளையும், அவரவர்கள் கூறிய அருமைச் செய்யுட்களையும், அவை கூறப்பட்ட சந்தர்ப்பங்களையும், அவற்றால் உலகம் அடைந்த பயனையும் கூற இப்போது நேரமில்லாமையால் இம்மட்டோடே நிறுத்துகிறேன். அச்சிடப்பட்டுள்ள தொகைநூல்களின் முகவுரைகள் முதலியவற்றால் சிலவரலாறுகள் நன்கு விளங்கும்.

# VI. புலவர்களை ஆதரித்த பிரபுக்கள்.

பிரபு என்ற சொல்லானது சங்க காலத்தில் வழக்கத்தில் இருந்ததன்றென்று சொல்லலாம். ஆயினும் பல அருமையான குணங்களை அது குறிப்பிடுவது. சங்ககாலத்துப் புலவர்களுக்குச் சமமான யோக்கியதை படைத்திருந்த துறைமங்கலம் சிவப்பிரகாசஸ்வாமிகள் தாம் இயற்றிய "பிரபுலிங்கலீலை" என்ற நூலில் அல்லமாதேவரை "அல்லமாப் பிரபுவெனுங் குரு ராயன்" என்றே சொல்லியிருக்கிறார். ஆகையால் போற்றத் தகுந்த குணங்கள் நிறைந்திருந்தவர்களைப் பிரபுக்கள் என்று சொல்லவே நானும் விரும்புகிறேன். முடிமன்னர்களான சேர சோழபாண்டியர்கள், மண்டலத்தலைவர்கள், சிற்றரசர்கள், மந்திரிகள், சேனாதிபதிகள், வீரர்கள், வேளாளர்கள், மற்றச்சாதியார்கள் முதலியவர்களே சங்கப்புலவர்களை ஆதரித்த பிரபுக்கள். அரசர்கள் கற்றுக் கேட்டுத் தெளிந்து செங்கோன்மையுடையராயிருந்தது பற்றியே அவர்கள் சார்பிலிருந்த ஏனையோரும் அங்ஙனம் ஒரு குழுவினராயினர். பிரபுக்கள் சரித்திரமும் புலவர்கள் சரித்திரமும் ஒன்றோடொன்று கலப்புற்றிருத்தலால் இவர்கள் சரித்திரத்தில் புலவர்கள் சரித்திரமும் வாக்கும் விரவி வரும்.

ஒவ்வொரு பிரபுவும் ஒரு புலவரையேனும் சிலபலரையேனும் ஆதரித்து வந்தார். சிலர் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்ததுடன் திப் பாடல்களின் இயல்புகளை யறிந்து அவற்றை முறைப்படி நூல்களாகத் தொகுப்பிக்கவும் செய்தனர். பலர் தாமே பாடல்களை இயற்றினர். செல்வம் இங்ஙனம் கல்வி விஷயத்தில் ஒழுங்காக உபயோகிக்கப்பெற்று வந்தது; புலவர்களின் வறுமையை ஒழித்தற்கு இவர்கள் இன்ன முறையைக் கைக்கொண்டனரென்பதும் புலவர்களுக்கு மிக எளியர்களாகவும் ஏனையோர்க்கு அரியர்களாகவும் இருந்தனர் என்பதும் இப்பிரபுக்களுடைய சரித்திரத்திலிருந்து விளங்குகின்றன. சௌலப்யமென்பது தெய்வத்தின் குணம். ஒரு யானை அழைத்ததும் அதன் அருகில் தோன்றி அதைக் காப்பாற்றியது ஒரு தெய்வம். ஒரு நாயனார் தம் தலையைப்பாறையில் மோதிக்கொள்ளப் போகையில் அங்கே தோன்றி ஒரு கையால் அத்தலையைத் தாங்கி அவரைக் காப்பாற்றியது ஒரு தெய்வம். புலவர்கள் பிரபுக்களுடைய இஷ்டப்படியே பேசாமல் தங்களுடைய கருத்தைத் தைரியமாக அவர்களிடத்தில் தெரிவிப்பது வழக்கமாக இருந்தது. முதலில் மேற்கூறியவற்றைச் சொல்லி விட்டுப் பின்பு உதாரணமாக நள்ளி, குமணன், கரிகாற்சோழன் ஆகியவர்களின் சரித்திரத்தைச் சொல்லுவேன்.

## பிரபுக்களும் புலவர்களும்.

பாரி ஒரு வள்ளல். கபிலர் அவனுடைய புலவர். மூவேந்தரால் எதிர்க்கப்பட்ட பொழுது கபிலர்மிக்க அனுகூலஞ்செய்து வந்ததன்றிப் பாரி இறந்துபோனபிறகும் இவர் பாரியின் மகளிர்க்கு மணம் செய்வித்தார். கோப்பெருஞ்சோழன் என்பவனுடைய புலவர்கள் பிசிராந்தையார், பொத்தியார் என்ற இருவரும். சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறையின் புலவர்கள் பொருந்திலிளங்கீரனும் கபிலரும். அதிகமானெடுமானஞ்சியால் ஆதரிக்கப்பெற்றவர்கள் பரணரும் ஔவையாரும். ஆய் என்ற வள்ளல் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவரை ஆதரித்தவன். "மோசி பாடிய ஆய்" என்று ஆயின் பெருமை பாராட்டப் பெற்றிருக்கிறது.

சேரன் கணைக்காலிரும்பொறையென்பவன் பொய்கையாரை ஆதரித்தவன். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய னெடுஞ்செழியன் மாங்குடி மருதனாரை ஆதரித்தவன். மாங்குடிமருதனார் இயற்றிய மதுரைக் காஞ்சியில், "தொன்முது கடவுட் பின்னர் மேய, வரைத்தா முருவிப் பொருப்பிற் பொருந" என்று சொல்லியிருப்பதில் அகத்திய முனிவருடனிருந்து தமிழாராய்ந்த ஒரு பாண்டியன் பாராட்டப்பட்டிருக்கிறான்.

## நூல்களைத் தொகுப்பித்த அரசர்.

அங்கங்கே வழங்கிவந்த பாடல்களைத் தொகுப்பித்த அரசர்களைச் சொல்லுவேன். பன்னாடுதந்த பாண்டியன் மாறன்வழுதி என்பவன் நற்றிணையைத் தொகுப்பித்தவன். பூரிககோவென்பவன் குறுந்தொகையைத் தொகுப்பித்தான். யானைக்கட் சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை யென்பவன் ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தவன். பாண்டியன் உக்கிரப்பெருவழுதி யென்பவன் அகநானூற்றைத் தொகுப்பித்தவன்.

## பாடிய அரசர்.

இளம்பெருவழுதியாரென்பவர் பரிபாடலில் 15-ஆம் பாடலை இயற்றியவர். அப்பாடலில்,

> "கல்லறை கடலுங் கானலும் போலவும்
> புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
> எல்லாம், வேறுவே றுருவி னொருதொழி லிருவர்த்
> தாங்கு நீணில யோங்கிருங் குன்றம்"

என்னும் பகுதியால் சோலைமலையிலுள்ள பலதேவனையும் கண்ணபிரானையும் சேர்த்துப் பாராட்டியிருப்பதும் கூறிய உவமையும் இன்புறற்பாலன.

நல்வழுதியார் என்பவர் வையையாற்றின் இயல்பையும் நீர்விழவின் சிறப்பையும் புலப்படுத்திப் பாடிய, "வளிபொரு மின்னோடு" என்னும் பரிபாடல் அறிஞர் உள்ளத்தினின்றும் நீங்குவதன்று.

பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னுமரசன் பாலைத்திணையின் இயல்பைப் பாடுதலில் மிக்க ஆற்றல் படைத்திருந்ததுபற்றி, "பாலை பாடிய" என்ற அடைமொழி அவருடைய பெயர்க்குமுன் சிறப்பாக வழங்கி வந்திருக்கிறது. அவர் கலித்தொகையில் பாலைத்திணைக்குரிய 35-பாடல்களையும் இயற்றியவர். பாலையானது நீரும் நிழலும் இல்லாத இடம். பாலைநிலமாக்கட்கு வழிப்பறியே விவசாயம். வழிப்போக்கரிடத்தில் பொருளில்லையாயினும் அவரை வெட்டி வீழ்த்தி மகிழ்வர். பட்சிகள்கூடப் பாலை வழி போகா. மரமேயில்லாத மிக்க உஷ்ணமான அந்த இடத்தில் முள்ளைபோன்ற பருக்கைக் கற்கள் நன்மை செய்யாதவனுடைய கொடுங்கோல் போலக் குத்து மென்பர். அதை எப்படி வர்ணிப்பது? அதில் வாழும் சனங்கள் எயினர்.

"வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற்
சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தையர்
அற்றம்பார்த் தலகுங் கடுங்கண் மறவர்தாங்
கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற்
புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை"

எனவும்,

"ஆள்பவர் கலக்குற லைபெற்ற நாடுபோற்
பாழ்பட்ட"

எனவும்,

"கடுவிசை தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல
ஞாயிறு தெறுதலான்"

எனவும்,

"வறியவ னிளமைபோல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணு மிகந்துசெய் திசைகெட்டா னிறுதிபோல்
வேரொடு மரம்வெம்ப"

எனவும்,

"ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம்போற் றீங்கரை மரநந்த"

எனவும்,

"மடியிலான் செல்வம்போன் மரநந்த வச்செல்வம்
படியுண்டார் நுகர்ச்சிபோற் பல்சினை மிஞிறார்ப்ப"

னவும் அவர் கூறியிருக்கும் பாலையின் இயல்பையும் அங்கங்கே காட்டி ருக்கும் பொருள்களின் இயற்கை அழகையும் படிப்போர் வியவாதிரார்.

சோழன் நல்லுருத்திரன் என்னுமரசன் கலித்தொகையில் முல்லைத் திணைக்குரிய 17-பாக்களையும் பாடியவன்.

"மத்தம் பிணித்த கயிறுபோ லின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு"

என்று கலித்தொகையிலும், "எலிபோன்றவர்களுடைய கேண்மை எனக்கு வேண்டுவதில்லை, புலி போன்றவர்களுடைய நட்பே எனக்கு வேண்டுவது" என்று புறநானூற்றிலும அவன் சொல்லியிருக்கும் உவமைகள் அறியற்பாலன.

எலியானது தானியக கதிர்களைத திருடிககொண்டு போய்த தானுண்ணாது வளையிற் சேமிததது வைததிருககும். புலி தானறைந்த பன்றி இடபபக்கம் வீழின் அன்று உண்ணாமலிருநதுவிட்டு மறுநாள் யானையைத தாககி அது வலபபககம விழுமபடி செய்து அதன் மத்தகத்தைத் தின்னும். அபபடிபபட்ட ஊககமுடையவருடைய நட்பே தனக்கு வேண்டுமென்று சோழன் நலலுருததிரன் பாடினன். அநதப பாடல் வருமாறு:—

"விளைபதச சீறிட நோக்கி வளைகதிர்
வலசி கொண்டளை மல்க வைக்கு
மெலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ
டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
வன்றவ ணுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத
துரனுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ."

குறுவழுதி என்பவன், "கல்வி யென்னும் வல்லாண் சிறாஅன்" என்று கல்வியை ஆண்மகவாகப் பாராட்டியிருக்கிறான்.

நெடுஞ்செழியன் என்று ஒரு பாண்டியன் இருந்தான். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்று அவனுக்குப் பெயர் வழங்கிவந்திருக்கிறது. அவன் சிறு பிராயத்திலேயே பட்டம் பெற்றான். சேரசோழர்கள் சிற்றரசர்கள் ஐவரைத்

துணைக்கொண்டு அவனை எதிர்த்தபோது, "நான் இளையன் தனிய னென்று அவமதித்து நால்வகைச் சேனையோடும் என்னை எதிர்ந்த இப்பகைவர்களைத் தாக்கி ஒருங்கே வென்று இவர்களுடைய முரசத் தையும் கைபபற்றேனாயின், எம்மரசன் கொடியன் என்று குடிகள் தூற்றும் கொடுங்கோலை உடையேனாகுக; மாங்குடி மருதனைத் தலைவராகப்பெற்ற புலவர் என்னுடைய நிலத்தைப் பாடாதொழிக; இரவலர்க்குக் கொடுத்தற்கியலாத மிகக வறுமையை யான் அடைக" என்று அவன் பாடிய பாடல் ஒன்று உள்ளது. அது வருமாறு:—

"நகுதக் கனரே நாடுமீக் கூறுந
ரிளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தா
ணெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடலினஞ் செருக்கிச
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
யருஞ்சமஞ் சிதையத தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
வென்னிழல வாழ்நா சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
வோங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாஙகுடி மருதன் றலைவ னாக
வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
விரப்போர்க் கீயா வின்மையா னுறவே."

இப்பாடலிலிருந்து பாண்டியனுடைய வீரம், நடுவு நிலைமை, தமிழ்ப்புல வர் பாலுள்ள அன்பு, ஈகை என்பவை வெளியாகின்றன. இந்தப் பாண் டியன் போரில் வென்ற தலையாலங்கானம் என்பது இக்காலத்துத் தலை யாலங்காடென்று வழங்குகிறது. நன்னிலந்தாலுகாவில் பெரும்பண்ணி யூருக்கு அருகிலுள்ளது; ஒரு சிவ க்ஷேத்திரம்.

பூதபாண்டியன் என்று ஓர் அரசன் இருந்தான். ஒல்லையூர் தந்தபூதபாண்டியன் என்று அவனுடைய பெயர் வழங்கி வந்திருக் கிறது. செய்யுள் இயற்றுவதிற் சிறந்தவன். "என்னை எதிர்த்த அரசர் களை வென்று புறங்காணேனாயின் என்னுடைய உயிர்த்துணைவியை யான் விட்டுப் பிரிக; நீதிமன்றத்திற் சிறிதும் அறிவில்லாத ஒருவனை வைத்துச் செங்கோலை மெலிவித்தேனாகுக; சிறந்த நண்பர்களாகிய மாவன் முதலி

இவர்களைப் பிரிந்து விடுவேனாகுக; இனி இந்தப்பாண்டியர் குடியிற் பிறவாமல் பாலை நிலத்தலைவனாகப் பிறந்து ஆறலைப்பேனாகுக" என்று. அவன் பாடிய பாடலொன்றுள்ளது. அது வருமாறு:—

"மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை
யாரம ரலறத் தாக்கித் தேரோ
டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரம ருண்க ணிவளினும் பிரிக
வறனிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனு மன்னெயி லாந்தையு முரைசா
லந்துவஞ் சாத்தனு மாத னழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறரும்
கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
வின்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே."

அவனுடைய வீரம், ஏகபத்தினி விரதம், நியாய பரிபாலனம், நட்பு முதலிய குணங்கள் இச்செய்யுளால் விளங்குகின்றன. 'பூதபாண்டி' என்று தென்னாட்டில் இன்றும் ஓர் ஊர் உளது.

சேரன் கணைக்காலிரும்பொறை என்ற அரசன் ஒருவன் இருந்தான். மலைநாடாகிய சேரநாட்டைப் பகைவர் பிடிப்பது அரிதாகையால் அவன் இறுமாந்து வந்து சோழன் செங்கணானை எதிர்த்துப் போர்செய்து தோற்றுப்போனான். கும்பகோணத்திற்குத் தெற்கிலுள்ள குடவாயிற்சிறையில் சோழன் அவனை இட்டான். தாகம் மேலிட்டுச் சிறைக்காவலாளரைத் தண்ணீர் வேண்டுமென்று அவன் கேட்க, அவர்கள் கொடுத்தனர். பகைவனுடைய ஏவலாளரிடம் ஒன்றைப் பெறுவதா என்ற மானத்தால் அந்நீரை உண்ணாமற் சொல்லிய பாட்டு ஒன்று புறநானூற்றில் உளது. அதன் பின்னேயுள்ள வாக்கியத்திற் காணப்படும் துஞ்சிய என்ற சொல் இறந்த என்ற பொருளையே மிகுதியும் தருவதாயினும் இங்கு மூர்ச்சித்த என்று பொருள் கொள்ள வேண்டும். அச்செய்யுள் வருமாறு:—

## VI. புலவர்களை ஆதரித்த பெருக்கள்.

"குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினு
மாளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே."

குழந்தை இறந்து பிறந்தாலும் ஊன் பிண்டம் பிறந்தாலும் அவற்றை ஆளல்லவென்று நினையாமல் வாளால் வெட்டி அடக்கஞ் செய்யும் அரச பரம்பரையினர் சிறைக்கோட்டககாவலாளர்களிடத்துத் தண்ணீரை இரந்துண்பவாகளைப் பெறுவார்களா என்பது இசசெய்யுளின் பொருள்.

நோயாலிறந்த அரசருடமபைத் தருப்பையிற் கிடத்தி, 'போரி லிறந்த அரசரடையும் உலகை இவர் அடைக'என்று கடவுளைப்பிரார்த்தித்து வாளால் அவ்வுடமபை வெட்டி அடககஞ் செய்வது அரசகுல மரபு. இது, புறநானூறு 93-ஆம் பாட்டாலும மணிமேகலை 23-ஆம் காதையின் 11-ஆம் அடி முதலியவற்றாலும் தெரிகிறது.

சிறைககோட்டத்திருநத அநதச் சேரனை மீட்டவர் அவனுடைய புலவரான பொய்கையார். அவர் சோழன் செங்கணானிடம் போய் யுத்தகளத்தை வர்ணித்துப பாடியதைக் கேட்ட அவன் உருகி என்னவேண்டுமெனவே, அவா, 'என் தலைவனாகிய சேரனை விடுவிக்கவேண்டும்' என்று கேட்டு அபபடியே பெற்றாா. மேற்கூறிய யுத்தகளத்தை அவர் பாடிய நூல, பதினெண்கீழ்க்கணககு நூலகளுள் ஒன்றான களவழிநாற்பது எனபபடும. இச்சரிதம் கலிங்கத்துப்பரணி, மூவருலா முதலியவற்றாலும் விளங்கும; "களவழிககவிதை பொய்கையுரை செய்ய வுதியன் கால் வழித்தளையை வெட்டி யரசிட்ட பரிசும்" என்று கலிங்கத்துப்பரணியிலும், "இன்னருளின், மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப், பாதத் தளைவிட்ட பார்த்திபனும்" என்று விக்கிரமசோழனுலாவிலும், "பொறையனைப பொய்கைக் கவிக்குக் கொடுத்துக் களவழிப் பாக் கொண்டோனும" என்று குலோத்துங்க சோழனுலாவிலும், "பொய்கைக் களவழி நாற்பதுக்கு வில்லவன் காற்றளையை விட்டகோன்" என்று இராசராச சோழனுலாவிலும் பொய்கையார் களவழி நாற்பது பாடிச் சேரனைமீட்டது குறிப்பிடபபட்டிருக்கிறது.

சோழன் நலங்கிள்ளி யென்பவன் சிறந்த புலவன். தன் முன்னோர் இறந்தபின் உரிமையாற் கிடைத்த அரசாட்சிப்பாரம் ஊக்கமும் வீரமுமில்லாதவனுக்கு மலையைப்போல மிகக்கனமாகவும், அவ்விரண்டுமுள்ளவனுக்கு வாடிய நெட்டியைப்போல மிக நொய்தாகவுமிருக்குமென்று அவன் பின்வரும் செய்யுளால் தெரிவித்திருக்கிறான் :—

"மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறத் றாயம்
எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே
மண்டமர் பரிக்கு மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகுவ னாயி னாழ்நீர்
அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடுவறல் போல நன்று
நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே."

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சிறந்த புலவன். சிறுகுடிகிழான் பண்ணன் என்னும் வேளாள உபகாரிமீது அவன் பாடிய பாடலிலிருந்து அவனுடைய கவித்திறமை விளங்கும். சிறுகுடி என்பது தஞ்சாவூர் ஜில்லாவில் நாரசிங்கம்பேட்டைக்கு வடக்கில் மண்ணியாற்றங்கரையில் உள்ளது. சிறுகுடிகிழான பண்ணன் அகநானூற்றிலும் சொல்லப்பட்டிருக்கின்றான். அவனிடம் பரிசில்பெற்ற ஒரு புலவனைப் பார்த்துப் பரிசில்பெறச் சென்றானொருவன் பாடியதாகக் கிள்ளிவளவன் பாடியிருக்குஞ்செய்யுள் வருமாறு:—

"யான்வாழு நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி யரவந் தானுங் கேட்கும்
பொய்யா வெழிலி பெய்விட நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்
சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச
சோறுடைக் கையர் வீறுவீ றியங்கும்
இருங்கிளை சிறாஅர்க் காண்டுங் கண்டும்
மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவ னில்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே"

இதன் கருத்து:—ஆலமரம் பழுத்தால் பலவகைப் பறவைகளும் கூடிப் பழங்களைத்தின்று பெருமுழக்கம் செய்யும்; அப்படியே பண்ணன் வீட்டில் உண்ணும் பலருடைய பெருமுழக்கமிருந்தது; அவன் வீட்டில் தயிர்ச்சோற்றுத்திரளையைப் பெற்று வரிசை வரிசையாகப் போகும் இருவர்களுடைய தோற்றம் முட்டை கொண்டு போகும் எறும்பினம் போலிருந்ததென்பது. இவ்வுவமைகளிலிருந்து சோழனுடைய

கல்வியறிவு புலப்படுகின்றது. "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" என்று அகநானூற்றில் இப்பண்ணன் பாராட்டப்பட்டிருக்கிறான். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் என்ற சொற்றொடரும் பொருளும் மிகச்சிறந்தனவாயிருப்பதால் மணிமேகலையில் அந்தத் தொடர் சீத்தலைச்சாத்தனாரால் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

அறிவுடை நம்பி என்று ஒரு பாண்டியன் இருந்தான். மக்கட்பேற்றை அவன் மிகவும் அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறான்.

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே"

என்ற பாடலால் குழந்தைகளால் உண்டாகும் இன்பத்தைக் கூறி மக்களை அடையாதவர்களுக்குத் தம் வாழ்நாளில் அடையும் பயன் யாதுமில்லை என்று அவன் விளக்கியிருக்கிறான்.

பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ற பாண்டியன் ஒருவன் இருந்தான். கல்வி கற்க வேண்டிய முறை அவன் பாடலால் தெரிகின்றது. தன்னாசிரியனுக்கு ஓரிடையூறு வந்தவிடத்து உதவியும் மிக்க பொருளைக்கொடுத்தும் வழிபாட்டு நிலைமையை வெறாது கற்றல் ஒருவனுக்கு அழகியது. ஏனெனில் ஒரு வயிற்றிற் பிறந்தோருள்ளும் கல்வி விசேஷத்தால் தாயின் மனமும் வேறுபடும். ஒரு குடியிற் பிறந்த பலருள்ளும் மூத்தோன் வருகவென்று சொல்லாமல் அவருள் அறிவுடையோன் சென்ற நெறியே அரசனும் செல்வான். நாற்குலத்துள்ளும் கீழ்க்குலத்தான் கற்பானாயின் மேற்குலத்தானொருவன் அவமதியாது கல்வியின் பொருட்டு அவனை வழிபடுவன் என்று அச்செய்யுளில் அவன் சொல்லியிருக்கிறான். பண்டைநாளில் நாற்குலங்கள் இருந்தனவென்பது அச்செய்யுளிலிருந்து விளங்குகிறது. அது வருமாறு:—

"உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயு மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்

அறிவுடை யோனு றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே."

ஆசிரியனது வீட்டுக்குப்போய் வழிபாடு செய்து கல்வி கற்கவேண்டும். ஸ்ரீராமன் முதலானோரும் அப்படியே செய்தனா. சீவகன் பூமகள் புலம்பிவைகக் கற்றுனென்பதால், செல்வச செருக்கின்றி ஆசிரியன் பால் வழிபாட்டோடு அவன் கல்விகற்றுன் என்று சிந்தாமணியில் சொல்லியிருப்பது இங்கே கவனிககததககது.

அரிய குணங்கள் நிறைந்த பிரபுககளுடைய செல்வம் "பலர் புகழ் செல்வம்" என்றும, "கேட்டற் கினிது நின் செல்வம்" என்றும் பதிற்றுப்பத்துப் பாடல்களில் பாராட்டபபடடுளது. பலர் புகழ் செல்வம் என்பது பல மதத்தினராலும புகழப்படும் செல்வம் என்றும் பொருள்படும். காஞ்சியில் காமாட்சி அமமை முப்பத்திரண்டு தருமங் களையும் இயற்றியருளுகையில், அறுவகை மததகினர்க்கும் உண்டி அளித்தனள் என்று சொல்லபபட்டிருககிறது. திருவேட்டீசுவரர் ஆலயத்துக்கு ஒரு மகமதிய அரசா கொடுதத இடங்கள் இன்னும் உள.

பாரியின்மலையை மூவேந்தா சூழ்நது கொண்டபின், கபிலர் கிளி களைப் பழக்கி அவை வெளியிலிருநது தானியக கதிாகளைக் கொணரும படி செய்தார். பாரி இறநத பிறகு அவா சேரன செல்வக்கடுங் கோவாழியாதனை அடைநது, "பாரிபாலிருநத குணங்கள் உன்பா லுள்ளன வென்றுகேட்டு உன்னுடன் பழகவநதேன்" என்று பாடின தாகப பதிற்றுப்பத்தில் ஒரு செய்யுள் காணபபடுகிறது.

"நிரயத் தன்ன வென்வறன் களைந்து"

என்றும்,

"தொலபசி யுழந்தவென் பழங்கண் வீழ"

என்றும்,

"பசிப்பிணி மருத்துவன்"

என்றும் புலவர்கள் கூறியவற்றுல் அவாகள் வறுமையைப் பிரபுக்கள் போக்கினமை அறியக்கிடக்கின்றது.

செய்ந்நன்றி யறிதலென்னும பெரியகுணம அவர்களிட மிருந்த தாகப் பல பாடல்களால் தெரிய வருகின்றது. இவ்வரியகுணம பழைய வடமொழி நூல்களிலும் விளக்கப்பட்டிருக்கிறது. அவற்றுட் சில வற்றை இங்கே சொல்லுவேன்: துரோணர், பீஷ்மர், அசுவத்தாமா,

கும்பகர்ணன், கர்ணன் இவர்களுடைய செய்ந்நன்றியறிவுகளும் இத் தன்மையனவே.

கும்பகர்ணன் இராவணனுக்கு நல்லபுத்தி சொன்னதாக இராமன் கேள்வியுற்று அவன் கருத்தையறிந்துவருமபடி விபீஷணனை யனுப்பிய பின், இராமனைச் சரணமடையுமபடி விபீஷணன் அழைத்தபோது கும்பகர்ணன் சொன்னதாக அவன் நன்றியறிவைக் கம்பர மிகவும் அழகாகக் கூறியிருக்கிறார். அதாவது "யான தூககததிலிருந்து எழுந்திருக்கக்கூடிய நேரததை எதிரபாராதது அறுசுவை உண்டியை வைத்துக் கொண்டு அண்ணன் காததிருபபன; அவனுககாகப போரசெய்து உயிர் துறந்தேனும செஞ்சோற்றுக கடன் கழிக்க வேண்டும" என்று அவன் சொன்னானென்பது. பாரதபபோரில பதினேழாவது நாளன்று கர்ணன் கௌரவசேனைத தலைவனாக நியமிககபபட்டபோது செஞ்சோற்றுக் கடன்கழிகக வேண்டியதை அவன சொன்னதும கவனிககததக்கது:—

"ஓருரு மொருகுலமு மில்லா வெனனை
யுஙகளகுலத் தள்ளோரி லொருவனாககித்
தேருரு மவர்மனைக்கே வளர்ந்த வெனனைச்
செம்பொன்மணி முடிசூட்டி யம்பு ராசி
நீரெரும நரபாலர் பலருங காண
நின்னினுஞ்சீர் பெறவைத்தாய் நினககே யன்றி
யேருரும மணிமுடியா யிநதப் போரில்
யார்க்கினியென் னுயிர்துறப்ப தியமபு வாயே."
"செஞ்சோற்றுக் கடனிறே கழியே னயிற்
றிணடோள்கள் வளர்தததனுற் செயல்வே றுண்டோ."

இவை துரியோதனனை நோககிக கர்ணன கூறியவை.

விதவான்களுககுப பிரபுககள் எளியவா; சததுருக்களுககு அரியவா.

"எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச
செம்மனுளவை யண்ணுந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
.........மன்னர் நினைக்குங காலைப்
புலிதுஞ்சு வியனபுலத தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே"

என்று புறநானூற்றில் வந்திருததல் காண்க.

"ஞாயி றனையைநின் பகைவர்க்குத
திங்க ளனையை யெம்ம னோர்க்கே"

என்று பாண்டியன் சித்திரமாடததுத துஞ்சிய நன்மாறனைச் சீத்தலைச் சாத்தனூர் பாடியிருக்கிறார்.

"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலி
னீர்த்துறை படியும் பெருங்களிறு போல
வினியை பெரும வெமக்கே மற்றதன்
றுன்னருங் கடாஅம் போல
வின்னாய் பெருமநி ளொன்னா தோர்க்கே"

என்று அதியமானெடுமானஞ்சியை ஔவையார் பாடியிருக்கிறார்.

பிரபுக்கள் ஒவ்வொரு விஷயத்தையும் நன்கறிந்த தகுதியுள்ளவர்களாலேயே சூழப்பட்டிருந்தாகள் என்பதைச சிறுபாணாற்றுப்படை

"செய்ந்நன்றி யறிதலுஞ் சிற்றின மின்மையும்
இன்முக முடைமையு மினிய னாதலும்
செறிந்துவிளங்கு சிறப்பி னறிந்தோ ரேத்த
அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையும்
ஆணணி புகுதலு மழிபடை தாங்கலும்
வாண்மீக கூற்றத்து வயவ ரேத்த........
அறிவுமடம் படுதலு மறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில வாழ்க்கைப் பரிசில ரேத்தப்
பன்மீ னாப்பட் பான்மதி போல
இன்னகை யாயமோ டிருந்தோன்"

என்றதால் வரிசையறிந்து கொடுத்தனர் என்பதும், வரையாது கொடுத்தனர் என்பதும, சநதிரன் பிரகாசிககும்போது நட்சத்திரங்களும் விளங்குவதுபோல உடனிருநதோரும விளங்குமபடி அவாகள் இருநதனர் என்பதும அறியற்பாலன.

பிரபுக்களைக் கண்டால் புலவாகள் தைரியமுற்று அவாகளுககுநல உபதேசம செய்து தங்களுககு வேண்டியவற்றையும கேட்டுப

"அருந்துய ருழக்குமென் பெருந்துன் புறவிநின்
றுள்படு செல்வங் காண்டொறு மருளப்
பனைமருட் டடக்கையொடு முத்துப்பட முற்றிய
உயர்மருப் பேந்திய வரைமரு ளேன்பக
டொளிதிக ழோடை பொலிய மருங்கிற
படுமணி யிரட்ட வேறிச செம்மாந்து
செலனசை யுற்றனன்......
என்னளந் தறிந்தனை நோக்காது சிறந்த
நின்னளந் தறிமதி பெரும
.........வைத்தகம் பலவே"

என்றதனால் நின்பெருமைக்குத் தகுந்தவாறு கொடு என்றார்.

"இரவலர் புரவலை நீயு மல்லை
புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே"

என்றும் வந்துள்ள செய்யுட்கள் இங்கே அறியத்தக்கன.

வேந்தர்க்குப் புலவர் தருமங்களை உபதேசித்து அவர்களை நல்வழியினின்றும் நீங்காதபடி காத்தனர்.

"நிலம் பெயரினு நின்சொற் பெயரல்..............
நின்னனை வேட்கையி னிரவலர் வருவது
முன்ன முகத்தி னுணர்ந்தவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே"

என்று பாண்டியன் கருங்கையொள்வாட்பெரும்பெயர் வழுதியை நோக்கி இரும்பிடர்த்தலையாரும்,

"அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி"

என்று சேரமான் கருவூர் வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறையை நோக்கி நரிவெரூஉத்தலையாரும்,

"கொடியோர்த் தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி
நல்லத னலனுந் தீயதன் றீமையும்
இல்லை யென்போர்க் கினனா கிலியர்"

என்று சோழன் நலங்கிள்ளியை நோக்கி உறையூர் முதுகண்ணன் சாத்தனாரும்,

"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானைபுக்க புலம் போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே"

என்று அறிவுடைநம்பியை நோக்கிப் பிசிராந்தையாரும் பாடியவை மேற்கூறியவற்றிற்கு உதாரணங்களாகும்.

பிரபுக்கள் பரோபகாரத்தையே இயல்பாகக் கொண்டிருந்தனர் என்பதைப் பல புலவர்கள்,

"பிறர்க்கென வாழ்தி"

என்றும்,

"பிறர்க்கென முயல்வோர"

என்றும்,

"தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்"

என்றும் விளக்கியிருக்கிறார்கள்.

அவர்களுடைய அரண்மனை வாயில் சிலர்க்கு அடைக்கப்படாமலேயிருக்கும்.

"பொருநராக காயினும் புலவராக் காயினும்
அருமறை நாவி னந்தணர்க் காயினும்
அடையா வாயி லவனருங்கடை"

என்றும்,

"நசையுநர்த் தடையா நன்பெரு வாயில"

என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. இத்தன்மையுடையனுதலபற்றியே சடையப்பவள்ளலைக் கம்பர், "அடையாத பொற்கதவு மஞ்சலென்ற சொலலு முடையான் சடையப்பன்" என்றார்.

பிரபுக்களுடைய கொடை பதிற்றுப்பத்துப்பாடினோர்க்குச் சேரவரசர்கள் கொடுத்ததிலிருந்தே விளங்கும்.

பதிற்றுப்பதென்பது பத்துப் பத்துப் பாட்டுக்களை உடையது.

முதற்பத்தும் பத்தாம்பத்தும் கிடைக்கவில்லை.

இரண்டாம்பத்து, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க்கண்ணனார்பாடி உம்பற் காட்டு ஐந்நூறூர் பிரமதாயம் பெற்று முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகமும் பெற்றார்.

மூன்றாம்பத்து, பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாடிச் சுவர்க்கம் புகுதற்கு ஒன்பது பெருவேள்வி செய்விக்கப் பெற்றார்.

நாலாம்பத்து, களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக்காப்பியனார் பாடி நாற்பது நூறாயிரம் பொன்னும் ஆள்வதிற் பாகமும் பெற்றார்.

ஐந்தாம்பத்து, சேரன் செங்குட்டுவனைப் பரணர் பாடி உம்பற் காட்டுவாரியையும் அவன் மகனையும் பரிசில் பெற்றார்.

இந்தச் செங்குட்டுவன்தான் சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகளின் தமையன்.

ஆறாம்பத்து, ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடி ஒன்பது காப்பொன்னும் நூறாயிரம் காணமும் பெற்றார்.

ஏழாம்பத்து, செல்வக்கடுங்கோவாழியாதனைக் கபிலர்பாடி நூறாயிரம் காணமும் நன்றாவென்னுங் குன்றேறி நின்று அவன் கண்ணிற்பட்ட நாட்டையும் பெற்றார்.

எட்டாம்பத்து, பெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார் பாடிக் காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசுகட்டிலும் அவன் கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப் பூண்டார்.

ஒன்பதாம்பத்து, இளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் பாடினார். முப்பத்தீராயிரம் காணம் கொடுத்து அவர் அறியாது ஊரும் மனையும் வளமிகப் படைத்து ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி எண்ணற்கு ஆகா அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்பட வகுத்துக் காப்புமறம் தான்விட்டான் அக்கோ. குசேலர் கண்ணபிரானிடமிருந்து திரும்பிவந்தபோது தமது மனை முதலியன சிறப்புற்று நிற்கக்கண்டு திகைக்கும்படி அவரை அறியாமல் கண்ணன் கொடுத்தது இங்கு அறியத்தக்கது. (இங்ஙனம் பிரபுக்கள் கொடையை விளக்கும் பாடல்கள் பிருதியாகச் சொல்லப்பட்டதுடன் அவ்வப்பொழுது கூறிய பாடல்களுக்குப் பொருளும் விளக்கமாகக் கூறப்பட்டது.)

பல அரசர்கள், சிற்றரசர்கள் முதலியவர்களைப்பற்றிய விஷயங்கள் பண்டைக்காலச் செய்யுட்களில் சிதறிக் கிடக்கின்றன. ஒவ்வொருவரையும் பற்றித் தெரிந்திருக்கிற விஷயங்களைச் சொல்லவும் நேரமில்லை. சிலரைப்பற்றிமட்டும் சில விஷயங்களைச் சொல்லுவேன்.

## புலவருக்கு விசிறின அரசன்.

சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலாதன் என்ற அரசனை ஒருசமயம் மோசிகீரனார் என்ற புலவர் காணப்போனார். வழிநடந்துபோன சிரமத்தால் அவனது அரண்மனையிலுள்ள முரசுகட்டிலில் அவர் படுத்துக்கொண்டு தூங்கிப்போய்விட்டார்; முரசு அரசர்களால் வழிபடுவதற்கும் பூசித்தற்கும் உரியது. அரசர்கள் யுத்தத்துக்குப் புறப்படுவதற்கு முன்பு, அதனை நல்லவேளையில் எடுத்து முன்னதாக அனுப்புவது வழக்கம். இதற்கு முரசுநாட்கோள் என்று பெயர். அங்ஙனம் பெருஞ்சேரலாதன் தன் முரசை யெடுத்து அனுப்பியிருந்தமையாலே தான் மோசிகீரனார் கட்டிலிற் படுத்து அயர்ந்து நித்திரை செய்துவிட்

டார். அரசன் வந்தபோது அவர் அயர்ந்து நித்திரை செய்வதையும் அவருடைய சிரமத்தையும் உணர்ந்து விசிறி கொண்டுவந்து தானே, விசிறிக்கொண்டு நின்றான்.

அவர் விழித்துக்கொண்டு அரசன் விசிறுவதைக் கண்டு திடுக்கிட்டு அவனுடைய பெருந்தகைமையை வியந்து ஒரு செய்யுளியற்றினார். அது வருமாறு:—

"மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
யொலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
யறியா தேறிய வென்னைத் தெறுவர
விருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
யதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறித
லதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
விவணிசை யுடையோர்க் கல்ல தவணது
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே" (புறநானூறு, 50.)

## கரிகாற் சோழன்.

கரிகாற சோழனுடைய புகழைப் பல புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அவன் இளமையிலேயே அரசுரிமை பெற்றான். ஒரு சமயத்தில் தீப்பற்றிய ஒரு வீட்டிலிருந்து ஓடும்போது அவன் கால் வெந்து போய்விட்டது. அதனாலேதான் கரிகாலன் என்ற பெயர் அவனுக்கு வந்தது. இமயத்தில் அவன் புலிக்கொடியை நாட்டினதாகச் சொல்லப் பட்டிருக்கிறான். கால வெந்திராவிடின், திருமாலைப்போல் மூவுலகையும அவன் அளந்திருப்பான் என்று புலவர் ஒருவர் அவனுடைய

"முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்"

என்ற செய்யுளால் பாராட்டியிருக்கிறார். கரிகாலனுடைய பேரறிவை ஒரு சரித்திரம் உணர்த்துகிறது. ஒரு சமயம் அவன் நியாயசபையில் இருக்கையில் வழக்குரைத்துக்கொள்ள இருவர் வந்தனர். என்ன வழக்கென்று அரசன் கேட்டபோது, அவன் இளையவனாக விருந்ததைக்

கண்டு அவனிடம் வழக்கைச் சொல்ல அவர்களுக்குத் துணிவு உண்டாக வில்லை. அதனை அறிந்த கரிகாலன் நீதிபதி சீக்கிரம் வந்து விடுவார் என்று சொல்லிவிட்டு அப்புறம் போய் ஒரு முதியவன்போல் வேஷம் போட்டுக் கொண்டு நீதிமன்றத் துக்கு வந்து சேர்ந்தான். அப்போது வழக்காளி கள் தம் வழக்கைத் தெரிவித்துக்கொண்டனர். அவன் நியாயவிசாரணை செய்து தீர்ப்பளித்தான். கேட்டு அவர்கள் மகிழ்ந்து சென்றனர். இச்சரிதம்,

"இளமை நாணி முதுமை யெய்தி
உரை முடிவு காட்டிய வுரவோன்"

என்னும் மணிமேகலைப் பகுதியாலும்,

"உரை முடிவு காணன்"

என்னும் பழமொழிச்செய்யுளாலும் வெளியாகின்றது.

தன்னியல்பைப் பாராட்டிக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை யென்னும் நூலைக்கேட்டு அப்புலவர்க்குக் கரிகால்வள வன் பதினாறு லக்ஷம் பொன் பரிசளித்தான்; இது, "தழுவு செந் தமிழ்ப் பரிசில்வாணர்பொன், பத்தொ டாறு நூறாயிரம்பெறப் பண்டு பட்டினப் பாலைகொண்டதும்" என்னுங் கலிங்கத்துப்பரணியால் விளங் கும்.

## நள்ளி.

நள்ளி என்று ஓர் அரசன் இருந்தான். அவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். அவன் நாட்டுக்குத் தோட்டியென்று பெயர். ஒரு புலவர் அவனுடைய மலைநாட்டின் வழியே தம் சுற்றத்தார் சில ருடன் போனார். தன்னைத் தேடிக்கொண்டு புலவர்கள் வரின், ஓடிவந்து அதைத் தனக்கு அறிவிக்கும்படி அவன் தன் பரிவாரங்களுக்குக் கட்டளையிட்டிருந்தான். புலவர் அங்கே ஒரு மரத்தடியில் வந்திருப் பதை அறிந்து அவன் எதிரே சென்று தான் இன்னான் என்பதை அறி வியாமலே அவருக்கு உரிய உணவுகளைக் கொடுத்து அவருக்கும் அவ ருடன் போனவர்களுக்கும் பசிநீங்கும்படி செய்தான். அவர் உண்ட பிறகு தான் அணிந்திருந்த நவரத்னமாலையையும் கடகத்தையும் அவருக்குக் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். அப்பொழுதும் தான் இன்னான் என்பதை அவன் சொல்லவில்லை. பிறகு அங்கிருந்தவர்களைப் பின் தொடர்ந்து சென்று விசாரிக்க அவன்தான் நள்ளி என்று புலவர் தெரிந்து கொண்டு வியப்புற்றார். அதனைப் பின்வரும் அழகிய செய்யுள் உணர்த்துகிறது:—

"கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தி

தன்னு முன்னோன் பிறிதுபுலம் படர்ந்தவென்
உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
தொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
யிழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மா னளிய நறுந்தண் சாரற்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்தல் தொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லை காட்டுநாட் டோமென
மார்பிற் பூண்ட வயங்கு காழார
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தன
னெந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே
யிரும்புலி னோந் தியற்றுப் பெரும்பெயர்த் தோட்டி
யம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்
பளிங்கு வகுத் தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளியவ னெனவே." (புறநானூறு, 150.)

வறியவர்களைக் கண்டவிடத்து வேண்டியவற்றைப் பிறர் அறியாமல் அளித்துத் தான் இன்னுனென்றும் அறிவியாமல் உபகாரம் செய்வது அருமையிலும் அருமையாகும்.

## குமணன்

வள்ளல்கள் காலத்திற்குப பிறகு குமணன் என்ற ஒரு சிற்றரசன் இருந்தான். இரவலர்க்கு அவன் வரையாது கொடுத்து வந்தவன் அவன் தம்பி பெரிய உலோபி. அவன் சிலருடன் ஆலோசனை செய்து அரசைக் கைப்பற்றிக்கொண்டு குமணனைக கொல்ல முயன்றான். அதனால், தன் தம்பியறியாதபடி குமணன் காட்டிற்குப்போய் அங்கு ஒளித்திருந்தனன். அவனிருந்த இடத்தை அறியாததம்பி தன் தமையன் தலையைக்கொண்டு வருகிறவர்களுக்குப் பாதிநாட்டைக் கொடுப்பதாகப் பறை அறைவித்தான். இந்நிலைமையில் ஒருபுலவர் குமணனிருந்த

காட்டுக்குப்போய் அவனைக் கண்டு தம்முடைய வறுமையைப் புலப்படுத்தி ஒரு செய்யுள்பாடி அவனைக் கேட்பித்தார். தம்முடைய வீட்டு அடுப்பில் காளான் முளைத்துவிட்டதாகவும், தன் மனைவி உணவின்மையால் குழந்தைக்குப் பாலகொடுக்க வழியின்றியிருக்கையில் குழந்தை அவள் முகத்தைப் பார்த்ததாகவும், அவள் தம்மைப் பார்த்ததாகவும், அதன் பொருட்டுத் தாம் குமணனைப் பார்க்க வந்ததாகவும் புலவர் அச்செய்யுளில் சொல்லியிருக்கிறார். அது வருமாறு:—

"ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின் வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே." (புறநானூறு, 146.)

இதைக்கேட்ட குமணன் தன் கையிற் பொருளில்லையென்றும், தனது தலையை வெட்டிக்கொண்டுபோய்த் தன் தம்பியிடம் கொடுத்து உமது தரித்திரத்தைக் களைந்து கொள்ளலாமென்றுஞ் சொல்லித் தன் வாளைக் கொடுத்துவிட்டான். உடனே புலவர், அவன் கையில் இருந்தால் ஏதேனும் விபரீதம் நேரிடுமென எண்ணித் தாமே அவ்வாளை வாங்கி வைத்துக்கொண்டு, "பாடிய புலவன் வாடினன் பெயாதலென், நாடிழந்த தனினு நனியின்னாது" என நினைந்த அவன் செயலை வியந்துகொண்டு வேறிடஞ் சென்றனர். அவர் சிற்பத்தொழிலிலும் வல்லவர். வாழைக்கிழங்கால் குமணன் தலையென்று நினைக்கும்படி ஒரு தலைசெய்து அதற்கு வர்ணங்கொடுத்து ஒரு துணியால் மூடிக்கொண்டுபோய்க் குமணனது தம்பியிடங்காட்ட அவன் கண்டு திடுக்கிட்டு மூர்ச்சித்து விழுந்தனன். பின்பு எல்லோரும் அவனுக்குச் சைத்தியோபசாரம் செய்தனர். அதனால் அவன் நினைவுபெற்றுத் தன் செய்கைக்கு வருந்தித் தன் தமையனை உயிர்ப்பித்துக் கொணர்ந்தால் நாடு முழுவதையும் கொடுப்பதாகச் சொல்லிக்கொண்டே யெழுந்தான். புலவர், பிழைப்பிக்கும் ஆற்றல் தமக்கு உண்டென்றும் தமையனை அழைத்துவருவதாகவும் சொல்லிப்

போய் நடந்த செய்திகளைக் குமணனிடம அறிவித்து அவ்விருவரும் சந்திக்கும்படி செய்தார். அவர்கள் நாட்டைப் பெற்றுக்கொள்ளும் படி புலவரைக் கேட்கத் தமக்கு அது பெரும்பாரமென்று அவர் சொல்லித் தமது தரித்திரத்தை ஒழிப்பதற்குமாத்திரம் வேண்டிய வற்றை வாங்கிக்கொண்டுபோனாரென்பர.

இங்ஙனமே பல உபகாரிகளுடைய கொடை முதலிய அரிய செய்கைகள் நூல்களில் மிக நன்றாகப் பாராட்டப்பட்டிருக்கின்றன. அந்நூல்கள் பிரசுரமாகி இருக்கின்றன. அவற்றைப்படித்தால் எல்லாம் விளங்கும்.

# VII. கலைகள்.

கலை என்ற சொல்லுக்குப் பல பொருளுண்டு. எல்லா வித்தைகளுமே கலையாகும். வேதங்கள், அவற்றின் அங்கங்கள், சாஸ்திரங்கள் முதலியனவும் கலைகளே. அவையல்லாத வித்தைகளாகிய கலைகளே இங்கே சொல்லப்படும்.

மந்திரிகளுக்குக் கலைக்கண்ணுளர் என்று ஒரு பெயருண்டு. கலைகளைக் கண்களாகக் கொண்டமையின், அவர்கள் அப்பெயர் பெற்றனர். பல நூல்களையும் நன்றாக அறிந்திருந்தால்தான் அவர்கள் இராசகாரியங்களைச் செய்ய முடியும். அரசனை இடித்துரைக்க வேண்டியவர்கள் அவர்களே. ஆகையால் உலகியலை அறிந்தவர்களாகவும் படிப்புள்ளவர்களாகவும் கிழவர்களாகவும் அவர்கள் இருக்கவேண்டும்.

கலைகள் அறுபத்து நான்கென்று சொல்லப்பட்டிருக்கின்றன. குலமகளிர் அறிந்திருக்கவேண்டிய கலைகள் பல. பொதுமகளிர் அறிந்திருக்கவேண்டிய கலைகள் பல. அவை மணிமேகலை முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ளன.

"வண்டுமொய்த் தரற்றும் பிண்டி வாமனார் வடித்த நுண்ணூல்
உண்டுவைத் தனைய நீயும்"

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுள் குலமகளிர்க்குரிய கலைகளைக் குறிப்பிடுகின்றது.

"வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலும்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியும்
சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலும்
கோலங் கோடலுங் கோவையின் கோப்பும்
காலக் கணிதமுங் கலைகளின் துணிவும்
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த

ஓவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்
கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை" (மணிமேகலை)

என்பது பொதுமகளிர்க்குரிய கலைகளை விளக்குகின்றது.

## அகத்தியர்.

தமிழ்ப்பாஷை மூலமாக அறியப்படும் கலைகளைச் சொல்லும்போது அகத்தியரை முதலிற் சொல்லவேண்டியிருக்கிறது. இயற்றமிழுக்குப்போல் ஏனைத்தமிழுக்கும் ஆசிரியர் இவரே. இவருடைய மாணாக்கர்களின் தொகை பன்னிரண்டு என்று பரம்பரையாகச் சொல்லப்பட்டுவந்திருக்கிறது. அம்மாணாக்கர்களிற் சிகண்டி என்பார் ஒருவர். அவர் அகத்தியரிடத்திற் சங்கீதத்தைப் பயின்றவர். சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்குநல்லார் இயற்றிய உரையால் சிகண்டி ஆசிரியர் இசை நுணுக்கமென்னும் நூல் இயற்றியிருந்ததாகத் தெரிகிறது. அகத்தியருக்குச் சமமான சங்கீதவித்வான் இல்லை. தொல்காப்பிய உரை ஆசிரியரான இளம்பூரணர் இராவணனை அகத்தியர் கந்தருவத்தால் பிணித்ததாகச் சொல்லியிருக்கிறார். இராவணன் முதலில் தென்னாட்டை ஆண்டானென்றும், பிறகே இலங்கைக்குச் சென்றானென்றும் தெரிகின்றது. இராவணன் தென்னாட்டை ஆண்டபொழுது பலருக்குந் துன்பஞ்செய்துவந்தான். அகத்தியர் தென்னாடு வந்ததும் அவனை அங்கிருந்து அப்புறப்படுத்த நினைத்து அவன் இசையிற்சிறந்தவனாதலால் அவனைச் சங்கீதப்போருக்கு அழைத்தார். பொதியில்மலைக்கல் யாருடைய பாட்டால் உருகுகின்றதோ அவருக்கு அம்மலைக்கல்லை அங்ஙனம் உருகச்செய்யாதவர் தோற்றவர்; நீ தோற்றால் தென்னாட்டைக் கொடுத்து விட வேண்டுமென்று பேசிக்கொண்டனர். அகத்தியரை முதலிற் பாடும்படி இராவணன் சொன்னான். அவர் பாடவே மலைக்கல் உருகிறது. பிறகு இராவணன் பாடினபோது உருகியிருந்த குழம்பும் இறுகிற்று. முன்னமில் துஷ்டர்களும் சத்தியத்தால் கட்டுப்பட்டிருந்தனராகையால் பேசியபடியே இராவணன் தென்னாடு துறந்து இலங்கைக்குச் சென்று விட்டான். மதுரைக்காஞ்சியில், "தென்னவற் பெயரிய துன்னருந் துப்பிற், றொன்முது கடவுள்" என்ற இடத்தில் தென்னவன் என்றசொல் இராவணனை உணர்த்துவதாக நச்சினார்க்கினியர் எழுதியிருப்பதும், தொல்காப்பியப்பாயிரவுரையில் இச்சரிதம் கூறப்பெற்றிருப்பதும் இங்கே அறியத்தக்கன. தென்னவன் என்றசொல் இராவணனைக் குறியாதென்றும், பாண்டியனையே குறிப்பிடுமென்றும் சிலர் சொல்லுவர். நச்சினார்க்கினியருரையைத் தேவாரம் ஆதரிக்கிறது. இராவணன் கைலைமலை எடுத்ததைச் சொல்லுங்கால், "தென்னவன் மலையெடுக்க" என்று சொல்லப்பட்டிருக்கிறது. கல் உருக அகத்தியர் பாடியதைத் தனுசை

வாணன் கோவை இயற்றிய பொய்யாமொழிப்புலவரும் துறைமங்கலம் சிவப்பிரகாசஸ்வாமிகளும், பிறரும் பாராட்டியிருக்கிறார்கள். அகத்தியர் யாருக்குப் பிரதியாகத் தென்திசை வந்தாரோ அவர் சந்நிதத்தி லுள்ள மிக்க பிரீதியால் தம் இரண்டு காதுகளிலும் இரண்டுதோடாக இரண்டு கந்தருவரை வைத்துக் கொண்டிருக்கிறாரென்றும் அவ்விரு வரும் எப்போதும் கானஞ்செய்து கொண்டிருக்கிறார்களென்றும் சிவ புராணங்கள் கூறும். அவ்விருவர் கம்பளர், அசுவதர ரென்பார்;

"தோடுவார் காதனறே தோன்றாத் துணையையர்
பாடுவா ரோரிருவர்க் கிட்டபடை வீடே."

(திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்.)

"காதி லிரண்டுபேர் கண்டோ ரிரண்டுபேர்" (தில்லைக் கலம்பகம்.)

இசைத் தமிழ் நூல்களின் பெயர்களையும் நாடகத்தமிழ் நூல்களின் பெயர்களையும் சிலப்பதிகார உரை முதலியவற்றிற் காணலாம். இனி மற்றக் கலைகளைப் பற்றிச் சொல்லுவேன்.

அளவை நூல்:—அளவை நூல் என்று ஒன்று தமிழிலிருந்ததாகப் பழைய உரைகளால் தெரியவருகின்றது; அதிலுள்ள பாடல்கள் கட்டளைக்கலித்துறைகளாக வுள்ளன; அந்நூலில் காண்டல் முதல் சம்பவமிறுதியாகவுள்ள பத்து அளவைகளின் இலக்கணம் கூறப்பட்டிருத்தல் வேண்டுமென்று கிடைத்த பாடல்கள் தெரிவிக்கின்றன.

ஆயுர்வேதமாகிய வைத்தியநூல்கள் தமிழில் அளவிறந்தன உண்டு. அகத்தியரும் சித்தர்கள் பதினெண்மரும் பிறரும் ஆயுர்வேத நூல்களை இயற்றி அருளினார்கள். அவற்றிற் பெரும்பாலன இப்போது உள்ளன. ஸம்ஸ்கிருத பாஷையிலும் ஆயுர்வேத நூல்கள் மிகுதியாக இருக்கின்றன; தமிழ் ஆயுர்வேதநூல் பலவற்றை இன்றும் தஞ்சை அரண்மனையிலுள்ள ஸரஸ்வதிமஹாலில் காணலாம். வேறு அநேக இடங்களிலும் பல காணப்படுகின்றன; கிடைத்திருக்கும் தமிழ் வைத்திய நூல்கள் பலவற்றின் செய்யுள்நடை திருத்தமாகவில்லை என்று நினைத்தற்கிடமுண்டு; ஆயினும் விஷயங்கள் அருமையானவை; மருந்துகளை உட்கொண்டால் வியாதி தீர்தல் உள்ளங்கை நெல்லிக்கனி. அவற்றின் பொருளை ஆசிரியமுகமாக அறிந்தோர் கிடைப்பது மட்டும் இக்காலத்து மிக அருமையாக இருக்கிறது. "நீர் சுருக்கி மோர்பெருக்கி நெய் யுருக்கி யுண்பவர்தம், பேருரைக்கிற் போமே பிணி" என்று தேரையர் சொல்லியிருப்பது அறியற்பாலது. மலையிலிருக்கிற கல்லை யெடுத்துவந்து தலையில் போட்டால், தலைவலி போமென்று ஒருபாடலில் சொல்லப் பட்டிருக்கிறது. இஃது அசந்தர்ப்பமாகத் தோன்றும். ஆனால் தலைவலியை நிவர்த்திக்கக்கூடிய ஒரு செடிக்குக் கல்லை யென்பது பெயரென்று

அறுவேலண்டும். இங்ஙனமேயுள்ள தமிழ்வைத்திய பரிபாஷைகள் மிக அதிகம்.

மேற்கூறிய ஆயுர்வேத நூலாசிரியர்கள் சொல்லைக் கவனியாமல் பொருளையே பெரிதும் கவனிப்பவர்களென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். இந்நூல்களின் பெருமையைச் சொல்ல நேரமில்லை. சென்னையில் வேளாள வருணத்தில் சுப்பிரமணியபண்டிதர் என்ற சிறந்த வைத்தியர் தேரையரியற்றிய நூல்களில் மிக்க பயிற்சியுள்ளவராகச் சென்ற நூற்றாண்டில் இருந்தார். மூலிகைகளின் வேர், தண்டு, இலை, பூ, காய், விதை முதலியவைகளின் குணங்களைப்பற்றிய அறிவு அவருககு மிகவுமிருந்தது. மிகவும் ஆச்சரியகரமான வைத்தியர் அவா. வைத்திய சம்பந்தமான சில நூல்களை அவர் வெளியிட்டுமிருக்கிறார். வாகடம என்பது ஒரு நூல். அது வாகடாசாரியாா என்பவரால் இயற்றப்பட்டது. அந்நூல் மிகச் சிறந்ததாக இருந்தமையால், பொதுவாக எல்லா வைத்திய சாஸ்திரங்களையும வாகட மென்றே பிற்காலத்தில் வழங்கலாயினர்.

ஆரூடம் என்பது ஒரு கலை. இது சமபநதமாக அநேகம் புத்தகங்கள் உள்ளன. அந்நூல்களிற் சிலவற்றைச சைனரும் இயற்றியிருக்கிறார்கள். ஒருவன் வந்து இன்னமுகமாக உட்கார்நதால் இன்னபலன் அடைவான் என்பது முதலியவை அவற்றிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

இரத்தின பரீட்சை முதலியவற்றைககூறும் பல நூல்கள் இருந்தனவென்பது சிலப்பதிகார உரை, வேம்பத்தூரார் திருவிளையாடல், கல்லாடவுரை முதலியவற்றிலிருந்து தெரிகிறது. இரததினபரீட்சைக்கு நவமணி இலக்கணம் என்றும் பெயருண்டு.

எண்ணூல்:-இப்பெயருள்ள நூல் ஒன்று இருநததாகத் தெரிகிறது. எண்சுவடி, குழிமாற்று முதலியன இன்றும் உள. எண்சுவடியில் ஜினஸ்தோத்திரமே முதலில் இருந்தது; ஜைனர் அவைகளையியற்றியிருக்க வேண்டும். நன்னூல் மயிலைநாதருரையில மேற்கோளாக வநதுள்ள, "தாவிவர் தாமரைத தடமல ரொதுங்கிய, ஆதியை வணங்கி யறைகுவ னெண்ணே" என்பதனால் இப்பெயருள்ள நூலொன்று முற்காலத்தி லிருந்ததாகத் தெரிகிறது.

ஓவிய நூல்:—சித்திரமெழுதுதலைத் தெரிவிக்கும் நூல்; ஓவியம்-சித்திரம்; "ஓவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்" என்பது மணிமேகலை. ஒருவன் அரசனுடைய அவைக்குச் சென்றான். அங்கே அவன் அரசன் தன் மந்திரி முதலானோரோடு அவையில் உட்கார்ந்திருக்கக் கண்டான். ஆனால் அவர்கள் பேசவில்லை, அசையவுமில்லை. அருகில்

சென்று தான் கொண்டுவந்த பழம் முதலிய காணிக்கைப் பொருள்களை நீட்டினன். அரசன் பெற்றுக்கொள்ளவில்லை. அதன்மேல் நெருங்கிச் சென்று பார்க்க அரசனது வடிவமும் மந்திரிகளின் வடிவமும் சித்திரங்களாகச் சுவரில் இருக்கக் கண்டானென்றும் மிகவும் வியப்புற்றானென்றும் சொல்லக்கேட்டிருக்கிறேன். அவ்வளவு சாமர்த்தியத்துடன் சித்திரம் எழுதப் பழகியவர் தமிழ்நாட்டில் இருந்தனர்; "கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் கவினச் செய்வார்" என்று ஒரு கவி இதனை விளக்கியிருக்கிறது. அரண்மனைகளிலிருந்த ஸ்திரீகள் வெளியே போகாதவர்களாகையால் அவர்களுக்குக் கடல் காடு மலை அருவி முதலியவற்றைக்காட்ட அரண்மனைத் தோட்டங்களில் கட்டுமலைகள் முதலியன செய்துவைக்கப் பட்டிருந்தன்றிச் சித்திரங்களும் உரிய இடங்களிற் பண்டைக் காலத்தில் வரையப்பெற்றிருந்தன. இந் நிகழ்ச்சிகள் பலவற்றைப் பெருங்கதை சீவகசிந்தாமணி முதலியவற்றிற் பரக்கக் காணலாம். மணிமேகலையென்பாள் உபவனத்திற்குட் சென்றபோது அவ்வனம் எப்படி விளங்கிற்று என்பதை வாணிகசைரியிற் கூறப்பட்டிருக்கும்,

"குரவமு மரவமுங் குருந்துங் கொன்றையும்
திலகமும் வகுளமுஞ் செங்கால் வெட்சியும்
நரந்தமு நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமுந் தளவமு முடமுட் டாழையும்
குடசமும் வெதிரமுங் கொழுங்கா லசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண பகமும்
எரிமல ரிலவமும் விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
ஒப்பத் தோன்றிய வுவவனம்"

என்பதில் வந்துள்ள, 'சித்திரப் படாம்' என்பது பலவகை மலர்களும் படத்தில் எழுதப்பட்டவை போல அவ்வனம் அழகுடையதாய் இருந்ததென்பதைக் குறிப்பிக்கின்றது. இயற்கையை அப்படியே காட்டக்கூடிய சித்திரமெழுதுவோர் முற்காலத்தில் இருந்தனரென்று இதனால் அறியவேண்டும்.

தரிசனத்துக்கு வருவோர் சில நன்முறைகளை எளிதில் அறிந்து கொள்ளும்படி செய்வித்தற்குத் திருப்பரங்குன்றத்தில் முருகக்கடவுளின் திருக்கோயிற்சுவர்களில் சித்திரங்கள் வரையப்பெற்றிருந்தனவென்று பரிபாடலால் தெரிகின்றது. ஸ்தலங்களின் சரித்திரங்களையும் அடியார்களின் சரித்திரங்கள் முதலியவற்றையும் கோயில்களுக்கு வருவோர் அறிந்து உய்யும்படி சோழ அரசர்கள் முதலியோர் ஆலயச்சுவர்

களில் அவற்றை ஓவியவடிவமாகப் பண்டைக்காலத்தில் எழுதுவித்திருந்ததை இன்றுங் காணலாம். பல நூற்றாண்டுகளுக்கு முன்னே எழுதப்பெற்றிருந்தும் இப்பொழுது மழையால் நனைந்துகொண்டிருந்தும் அவை சிறிதும் விளக்கம் குன்றாதிருத்தல் முன்பு இருந்த கலைஞர்களுடைய தொழிற்றிறத்தைப் புலப்படுத்துகின்றது.

**கரவடநூல்**: கரவடம்-திருட்டு. திருடுதற்குரிய உபாயங்களைச் சொல்லும் நூல்கள் இருந்தன. திருட்டை எதற்காகக் கற்கவேண்டுமெனின் திருடரைக்கண்டு பிடிக்கவே. அந்த நூலை ஒரு முனிவர் இயற்றினாராம். அவர் பெயர் கருணீசுதரென்பது. **மதுரைக்காஞ்சியில்** 634-ஆம் அடி முதலியவற்றையும் அவற்றின் உரையையும் பார்த்தால் இதன் விவரம் விளங்கும். **சிலப்பதிகாரத்திற்** கொலைக்களக்காதையில 166-ஆம் அடி முதலியவற்றையும் அவற்றின் உரையையும் பார்க்க. நிரபராதியாகிய கோவலன் அரசனமனைவியின் சிலம்பைத் திருடினவன் என்று தட்டான் அரசனிடத்திற் குற்றஞ்சாட்ட அரசனது உத்தரவின்படி கோவலனைக் கொலை செய்யச்சென்ற கொலைஞர் அவனது தோற்றத்தைக் கண்டு அவன் திருடியிருத்தல் கூடுமோ என்று சந்தேகித்த பொழுது ஒருவன் திருடரியல்புகளை விரிவாகச் சொன்னானென்று அந்நூலிற் கூறப்பட்டுள்ளது.

**களநூல்** என்று ஒன்றுண்டு. மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் அதனைப்பிரசுரம் செய்திருக்கிறார்கள். இன்ன இன்ன யாமத்தில் இன்ன இன்ன பொருளைக் களவிற்காணின் இன்ன இன்ன பலன் விளையுமென்று அந்நூல் சொல்லும். அந்நூல் கட்டளைக்கலித்துறையாலாகியது. அடியார்க்குநல்லாருரையில் மேற்படி நூற்செய்யுட்கள் மேற்கோள்களாக வந்துள்ளன.

**பரிநூல்**: அஃதாவது அசுவ சாஸ்திரம்; கல்லாடம், வேம்பத்தூரார் திருவிளையாடல், பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடல் முதலிய நூல்களிலும் அசுவபரீட்சை முதலியன சொல்லப்பட்டிருக்கின்றன.

**சித்தாரூடமென்ற** நூல ஒன்றுண்டு. பாம்புகளின் வேறுபாடுகள், சாதிகள், குணங்கள், அவற்றின் விஷங்களுக்குப் பரிகாரம் முதலியன அந்நூலிற் சொல்லப்பட்டிருக்கும். அந்த நூல் நச்சினார்க்கினியருரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. சிந்துவடிவமாக உள்ளன அந்நூற் செய்யுட்கள்.

சிற்பநூல்: **சிற்பசாஸ்திரம்** பண்டைக்காலத்தில் மகோன்னத நிலைமையை அடைந்திருந்தது. நான் படித்துக்கொண்டிருந்தபொழுது, திருவாவடுதுறையிலும், ஸ்வாமிமலையிலும், திருவிடைமருதூரிலும்,

திருவீழிமிழலையிலும், பிற ஊர்களிலும் சிறந்த சிற்பிகள் அல்லது 'ஸ்தபதிகள் இருந்தனர்; பார்த்துப் பழகி யிருக்கிறேன். அவர்களுடைய பயிற்சி மிக ஆச்சரியப்படத் தக்கதாக இருந்தது. இப்போதும் அங்கங்கே சிலர் இருக்கிறார்கள். நான் கையெழுத்துப் பிரதிகள் தேடிக் கொண்டுபோன காலத்தில் அநேக இடங்களில் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் சிற்ப நூல்கள் பல இருந்தன. இப்பொழுது கட்டிடங்களின் பல உறுப்புக்களை ஆங்கிலச் சொற்களால் குறிப்பிடுகிறார்கள். நான் கண்ட சுவடிகளில் எல்லா உறுப்புக்களின்பெயர்களும் தமிழ்ச் சொற்களாகவே யிருந்தன. சிறந்த சிற்பிகளைக் கண்டு கேட்டால் புருஷ வடிவமாகிய பட்டணத்துக்கும், ஊர்களுக்கும், வீடுகளுக்கும், முகம், கண், தலை முதலிய உறுப்புக்கள் எவ்வியோ அவை இன்ன இன்ன இடத்தில் இருக்க வேண்டுமென்பது விளங்கும். திட்டமெனத் தோன்றிக் கெடும் நகர்கள், ஊர்கள், வீடுகள் ஆகிய இவற்றின் இலக்கணக் குறைவுகளை இன்ன வென்றும் சிற்ப நூல்கள் நன்கு தெரிவிக்கும்.

**சோதிடம்**: **சினேந்திரமாலை** என்று ஒரு சோதிட நூல் இருக்கிறது. நச்சினார்க்கினியர் முதலியோருடைய உரைகளில் மேற்கோளாக அந்நூற்செய்யுட்கள் வந்துள்ளன. இதுபோன்ற பல நூல்கள் தமிழில் உள்ளன.

**நிமித்த நூல்** என்று ஒன்றுண்டு. தும்மல் முதலியவற்றின் பலனை உரைக்கும் **சகுனசாஸ்திர** மென்றும் ஒன்றுண்டு.

**குடிநூல்**: இந்நூல் செய்யுள்வடிவமாக இக்காலத்தும் வழங்கப் படுகின்றது.

**இரேகாசாஸ்திரம்**: இப்பெயருள்ள நூலொன்றைச் சில இடங்களிற் பார்த்திருக்கிறேன்.

**பாசண்டம்** என்று ஒரு நூல் இருந்தது, வேதத்திற்கு விரோதமானது பாஷண்டம் எனப்படும். சிலப்பதிகாரத்தில், "பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாள்" என்பதன் உரையில் பாசண்டம் என்பது தொண்ணூற்றறுவகைச் சமயச் சாத்திரத் தருக்கக் கோவை என்று அடியார்க்கு நல்லார் எழுதியிருக்கிறார். திவாகரத்திலும் இது சொல்லப்பட்டிருக்கிறது. "பாசண்டத் துறையு மிவற்றுட் பலவாம், பேசிற் றொண்ணூற் றறுவகைப் படுமே" என்பது திவாகரம்.

தெய்வமில்லை என்று தாக்கித்தல் முதலிய இக்காலத்து வழங்கும் வாதங்களைப் புலப்படுத்தும் நூல்களும் பண்டைக் காலத்திலிருந்தனவே; அவை **உலகாயதம்** முதலியன.

**புதையல் நூல்**: பூமியில் இன்ன இன்ன இடத்தில் இன்ன இன்ன பொருள்கள் புதைந்து கிடக்கின்றனவென்பது இதனால் அறியப்படும்.

உதயணனுக்குப் புதையல் நூலிற் பயிற்சியுண்டென்று பெருங்கதையால் தெரிகிறது. தஞ்சாவூருக்குத தெற்கிலுள்ள **உரத்தநாட்டில்** (முத்தம்பா புரத்தில்) முப்பத்திரண்டு தருமங்களும் புதையல் எடுத்த பொருளைக் கொண்டுதான் தஞ்சை அரசா ஒருவரால் முற்காலதநில் வளர்க்கப் பட்டனவென்று கேள்வியுற்றிருக்கிறேன்.

**மடை நூல்**: அஃதாவது பாகசாஸ்திரம் தமிழில் இருந்தது. சிறுபாணாற்றுப்படையில் அருச்சுனன் அண்ணனாகிய பீமன் செய்த சாஸ்திரமென்று மடை நூலொன்று சொல்லப்பட்டிருக்கிறது. விராட புரத்தில் இருநத காலத்தில் பீமன் பாகசாஸ்திரததில் தேர்ச்சி பெற்றான் போலும்; **நளபாகம் பீமபாகமென** மடை நூல்களிரண்டுண்டென்று பெரியோா சொலலுவா; "மடைநூற் செய்தி" (**மணி.** 2-22.)

**யோக சூத்திரம்**: சிலபபதிகார உரையில் மிகவும் அழகான யோகசூத்திரங்கள் சில முதனூற்கருததைச சிறிதும விடாமல் மேற்கோளாக வந்துள்ளன. அந நூல் கிடைககவிலலை.

**யானை நூல்** என்று ஒன்றுண்டு. யானைப்பாகர் பலரிடத்து அதனைப் பாரத்திருககிறேன். அதில் யானைகளின் குணமுதலியனவும் பிறவும் அவற்றிற்கு வரக்கூடிய வியாதிகளும அவற்றின் பரிகாரங்கள் முதலியனவும சொலலப பட்டிருபபதைக கவனிததுள்ளேன்.

பண்டைக காலததில இன்ன சமயததில இன்னது செய்ய வேண்டுமென்று கால வரையறை ஏறபடுததிக கொண்டிருந்தனா, நாழிகைபபறை, சாமபபறை முதலியன இருநதன. ஒவ்வொரு நேரத்தையும் அறிவிபபன அவை. பணிமுடிகக மணி அடிப்பது வழக்கம். மணி ஓசை கேட்டதும அவரவா தததம் வேலையை நிறுத்திவிட்டுப் போய் விடுவா; இது முல்லைபபாட்டால தெரிகின்றது. **நாழிகைவட்டி**லிருந்ததென்று அகநானூறு, பெருங்கதை, கம்பராமாயணம் என்பவை

சண்டமகாசேனனென்பவன், கடிகையாரம் கழுத்திற் பூண்டிருந்தான் என்று பெருங்கதை சொல்லுகிறது, கடிகையாரமென்பதிலிருந்தே கடிகாரம் என்ற சொல வநதது போலும. யவனர்கள் தம்முடைய நாட்டிலிருநத சிறநத சிறப விததைகளை இந்த நாட்டிற்குக் கொண்டு வநதனரெனறு அநநூலால நனகு தெரிகினறது. சிநதாமணியில இராசமாபுரததின கோட்டையை வாணிககையில பகைவா அணுகாதபடி அககோட்டையின்மேற் செய்துவைக்கபபட்டுள்ள 'நூற்றுவரைக கொலலி' என்னும் பொறி முதலிய பலவற்றைச் சொல்லிவிட்டு, "இவை யவனர் தாட்படுத்த பொறி" என்று சொல்லியிருக்கி

ரூர். பல பொறிகள் அதிற் கூறப்பட்டுள்ளன. இளங்கோவடிகள் மது ரையிலிருந்த கோட்டையைப் பற்றிச் சொல்லுகையில், "பரிவுறு வெந் நெயும் பாகடு குழிசியும்,காய்பொன் னுலையுங் கல்லிடு கூடையுந்,தூண்டி லுந் தொடக்கு மாண்டலை யடுப்பும், கவையுங் கழுவும் புதையும் புழை யும், ஐயவித் துலாமுங் கைபெய லூசியுஞ், சென்றெறி சிரலும் பன்றியும் பணையும், எழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங், கோலுங் குந்தமும் வேலும் பிறவும், ஞாயிலுஞ் சிறந்து நாட்கொடி நுடங்கும், வாயில்" என அம்மதிலில் அமைக்கப்பட்டிருந்தனவாகக் கூறும் பொறிகளையும் அவற்றின் இயல்புகளையும் நோக்கும்பொழுது இத்தமிழ்நாடு முன்பு அடைந்திருந்த ஏற்றத்தை நினைந்து வியப்பையும் வருத்தத்தையும் யாருடைய உள்ளமும் அடையாதிராது.

"வான மூன்றிய மதலை போல
ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்
திரவின் மாட்டிய விலங்குசுடர் ஞெகிழி
உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையும்"

என்று பெரும்பாணாற்றுப் படையிற் சொல்லப்பட்டிருத்தலால் மகாபலி புரத்திற் கடலிற் செல்லும் கப்பல்களுக்குத் துறைமுகமிருக்கும் இடத்தை இரவிற் காட்டக்கூடிய கலங்கரைவிளக்கம் இருந்ததாகத் தெரிகிறது. இந்நாளில் அஃதுள்ள இடத்தை 'லைட் ஹௌஸ்' என் கிறோம். ஓடுகலங்கரையுமெனபதற்குக் கடலிற் போகும் கப்பல்களை அழைக்குமென்பது பொருள். காவிரிப்பூம் பட்டினத்துள்ள விளக்கு கள், "இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்" எனச் சிலப்பதி காரத்திற் கூறப் பெற்றுள்ளன.

"ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை
மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்
விண்ணுற வோங்கிய பலபடைப் புரிசை
தொல்வலி நிலைஇய வணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்
மழையாடு மலையி னிவந்த மாடமொடு
வையை யன்ன வழக்குடை வாயில்
வகைபெற வெழுந்து வான மூழ்கிச்
சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில
யாறுகிடந் தன்ன வகல்நெடுந் தெருவிற்
பல்வேறு குழாஅத் திசையெழுந் தொலிப்ப"

என்று மதுரைக்காஞ்சியில் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து பல இட விசேடங்களை அறியலாம்.

# சங்கத்தமிழும் பிற்காலத்தமிழும்.

மேற்காட்டின பாட்டிற் போக்கதவென்றிருப்பதற்கு இரட்டைக் கதவென்பது பொருள். காலபேதத்தால இந்நாளில் வையை வற்றிக் கிடப்பதுபோலல்லாமல் அக்காலத்தில எப்பொழுதும தண்ணீர நிரம்பி இருந்ததாகத் தெரிகிறது. பட்டணங்களின அழுக்குநீரைக கண்ணிற்படாமற் செலுத்துதற்கு 'கரந்துபடை' என்பதொன்று இருந்தது. அது தெருநடுவிற் கட்டப்பட்டு யானை விழுந்து விடாதபடி கருங் கல்லால் மூடப்பட்டிருக்கும. அந்நீர சென்று அகழியில விழுந்து விடும். அங்ஙனம நீர் விழுவதற்குக கட்டிய ஒருறுப்பிறகு யானைத துதிக்கையை உவமம்கூறியிருக்கிறா.

திருப்பரங்குன்றத்துள்ள குமரவேள் கோயிலின் பக்கத்திற் சித்திரச் சாலையொன்று இருந்தது. கோயிலகளுக்குப போவோாகளுக்கு நல்ல புத்தியைப புகட்டககூடிய சித்திரஙகள் அதில எழுதப் பெறறிருந்தன. இந்திரன் அகலிகையை விருமபிப பூனையானது, சாபமடைநதது, அகலிகை கல்லானது முதலியவறறைச சித்திரஙகள் மூலம் ஞாபகப படுத்தியதாகப பரிபாடல் தெரிவிக்கின்றது. காவிரிப்பூமபட்டினத்தில ஒரு பூநகோட்டத்திற் பளிக்கறை மண்டபம ஒனறு இருநததாக மணிமேகலையிற் சொலலபபட் டிருககிறது. கண்ணாடி மண்டபமே அது. தன்னுட் புகுநதோரின் உருவத்தைமட்டும அது வெளிககாட்டும்; ஆனால் அவாகளுடைய சொற்களை வெளிவிடாது என்று கூறபபட்டிருககிறது. இதனாற் கண்ணாடி வழியாக ஒலி செலலாதெனபதைப பண்டைக் காலத்தாரும அறிநதிருநதமை விளங்குகினறது.

சிரமசசாலைகள் இருநதன. அவை கருடிக கூடங்களே. மல யுத்தம், முஷ்டி யுததம முதலியன அங்கே கறபிககபபடடன. பழைய திருவிளையாடற்புராணத்தில அவைகளைக கருடிக கூடமென்றே சொல்லி விட்டாா. அதிற் கூறபபடும யுததபரிபாஷைகள் இககாலத்திற் கேட்கப் படவில்லை.

வெளவானத்தி என்று ஒருவகை மண்டபம அககாலததிற் கட்டப்படுவதுண்டு. மேலே இருட்டாக இருககுமாகையால் வெளவால அவைகளை நததிச செல்லும. ஆகையால வெளவானததி என்று அதற்குப் பெயருண்டாயிற்று. திருவீழிமிழலையில வேலைபபாட்டில் மிகச சிறந்த வெளவானததி ஒன்றிருககிறது, அதைபபோன்ற மண்டபத்தை வேறு எங்கும் காண்பது அரிது. திருமீயசசூரிலும் திருச்சததி முற்றத்திலும் அதுபோன்ற மண்டபங்களிருந்தன. இபபோது அவை இடிந்து விழுந்து கிடக்கின்றன.

யந்திரவாவிகளிருந்தன; வேண்டியபொழுது நீரைப் பெருக்குதற்கும் குறைத்தற்கும் யந்திரங்கள் அவற்றில் அமைக்கப் பட்டிருக்கும். அவற்றைச் சூழ்ந்த சோலைக்கு இலவந்திகையென்று பெயர்.

கடத்தற்குப் பலவகையான ஓடங்களிருந்தன; "பரிமுக வம்பியுங் கரிமுக வம்பியும், அரிமுக வம்பியும்" என்பது சிலப்பதிகாரம்; அம்பி-ஓடம்.

பலவகையான வண்டிகள் இருந்தன; அவற்றின் பெயர்கள் சிலப்பதிகார முதலியவற்றா லறியலாகும். எருது பூட்டப்படாமல் யந்திரத்தாலேயே இயங்கும் வண்டியும், நாண்மீன்கள் ஒன்பது கோள்கள் முதலியவற்றின் உதயாஸ்தமனங்களைத் தெரிந்து கொள்ளுதற்குரிய பொறி, மண்டலத்தையும் பிறவிசேடங்களையுமுடைய வண்டிகளும், தாமரை மலர்போன்ற வண்டிகளும், பலவகையான மாடசிவிகைகளும், மிக்க விம்மிதத்தை விளைவிக்கும் நீர்மாடங்களும், நீர் விளையாட்டிற்குரிய பலவகை யந்திரக் கருவிகளும், பிறவும் இருந்தனவென்று பெருங்கதை

வாசவதத்தை கருப்பமுற்று ஆகாய வழியே சென்று பொதியில் மலை முதலிய பல இடங்களையும் பார்க்க விரும்பிய பொழுது, உரியவர்களைக்கொண்டு செய்விக்கப்பெற்ற யந்திரவிமானத்தில் உதயணன் முதலியவர்களுடன் ஏறி சம்புத்தீவிலுள்ள பல இடங்களையும், அதிலிருந்தே பார்த்துவந்தனளென்று பெருங்கதை கூறுதலால் மனிதர் ஏறிச்செல்லுதற்குரிய ஆகாய விமானமும் அக்காலத்திலிருந்ததென்று தெரிகின்றது.

வாழைக்குருத்தினால் விசித்திரமான சிற்ப வேலைகளைச் செய்வதுண்டென்றும், மலர்களைக் கொண்டு எழுத்து வடிவமாக அலங்கரிப்பதால் ஒருவர் கருத்தை ஒருவருக்குத் தெரியப்படுத்திக் கொள்வதுண்டென்றும் அந்நூல் கூறும். இன்னும் பல அருமையான வித்தைகளை யவனரிடமிருந்து தமிழர் அறிந்திருந்தனர்; இன்னும் சொல்ல வேண்டிய விஷயங்கள் இவைபோல பல உள்ளன.

# VIII. பண்டை உரையாசிரியர்கள்.

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம் முதலியவைகளின் உரையாசிரியர்களைப்பற்றிச் சொல்லுவேன்.

தொல்காப்பியத்துக்கு உரைசெய்தவர்கள் இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர், தெய்வச்சிலையார்.

குறுந்தொகைக்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் உரை செய்தனர். ஐங்குறுநூற்றுக்கு உரை செய்தவர் பெயர் தெரியவில்லை. பரிபாடலுரையாசிரியர் பரிமேலழகர். அகநானூற்றின் முதல் 90-பாடல்களுக்கும் புறநானூற்றுக்கும் பழைய உரை உண்டு. உரையாசிரியர்கள் பெயர் தெரியவில்லை.

நாலடியாரில் அதிகாரங்களை வகுத்தவர் பதுமனார்; அதற்கு அப்பதுமனாரும் வேறு சிலரும் செய்த உரைகளுண்டு. குறளுக்குப் பதுமர் முதல் பதின்மர் உரை செய்திருக்கின்றனர்; அவருள் பரிமேலழகர் உரை சிறப்புடையது.

சீவகசிந்தாமணிக்கு உரை செய்தவர் நச்சினார்க்கினியர். அவருக்கு முன்பு ஒருவர் உரைசெய்திருந்ததாகத் தெரிகிறது. சிலப்பதிகாரத்துக்கு அரும்பத உரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் உரை இயற்றினர். யாப்பருங்கலக்காரிகைக்கு உரையியற்றியவர் குணசாகரர். நன்னூலுக்கு மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர் முதலியோர் உரையியற்றினர். நேமிநாதத்திற்கு உரையொன்றுண்டு. வீரசோழியத்துக்கு உரை இயற்றியவர் பெருந்தேவர். வச்சணந்திமாலைக்கு உரையொன்றுண்டு; உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. நீலகேசிக்கு விருத்தியுரை இயற்றியவர் சமயதிவாகரவாமனமுனிவர். சைவ வைஷ்ணவ நூல்களுக்கு உரையியற்றியவர்கள் அநேகர்.

நூலாசிரியர்களைக் காட்டிலும் உரையாசிரியர்கள் பாஷையில் மிக்க பயிற்சியுள்ளவர்களென்பதும் மிக்க உபகாரிகளென்பதும் ஒரு சாரார் கொள்கை. தாம் அறிந்தவற்றை யாதொரு தடையுமின்றிச் சொல்லழகு பொருளழகுகளை அங்கங்கேயமைத்து ஒன்பது சுவைகளுள் ஏற்றவற்றை அங்கங்கே புலப்படுத்திக்கொண்டு செய்யுள் செய்துகொண்டு செல்லுவார் நூலாசிரியர்.

உரையாசிரியர் நூலின்பொருளை நூலாசிரியர்பால் நேரே அறிந்தவராயிருப்பின் அந்நூற் கருத்தை விளங்கத் தெரிவித்தலில் அவர்களுக்கு அதிக வருத்தமிராது. அங்ஙனம் தெரிந்துகொள்ளாதவராக இருந்தால் கருத்தைத் தெரிந்துகொள்ளுதலிலும் இன்னதற்குப்பொருள் இன்னதென்றும் இதற்கு ஆதாரமின்னதென்றும் ஆராய்ச்சி செய்தலிலும் அதற்காகப் பலநூல்களைப் படித்தலிலும் காலப்போக்கும் அதிக வருத்தமும் அவர்களுக்குண்டாகும். நடுவுநிலைமையை யுடையராயிருத்தல் உரையாசிரியருக்கு இன்றியமையாததென்று பெரியோர் கூறுவர். அவர்கள் பல சமய நூல்களையும் பலகலைகளையும் முறையே கற்று உலக வழக்கத்தையும் நன்கறிந்திருத்தல் வேண்டும். கல்வியுடன் கேள்வியிலும் சிறந்திருத்தல் வேண்டும்.

ஒரு மதத்திற்குரிய நூலுக்குப் பரம்பரையாக வேறு மதத்தைத் தழுவிய புலவர்கள் உரைசெய்வாராயின் தமமுடைய கொள்கையை அடியோடே மறந்துவிட்டு நூலாசிரியர் கொள்கையையே மனத்தில் வைத்துக்கொண்டு பொருளெழுதவேண்டும். அந்நூற்கருத்து தமமுடைய மதக்கொள்கைக்கு முரணாக இருந்தாலும் சலிப்பின்றி அதையே நன்கு விளக்கவேண்டும்.

ஆராய்ந்து பார்க்குமிடத்தில் இவையே பண்டையுரையாசிரியர்களின் இயல்பென்று தெரிகின்றது. நூலாசிரியர்பால உண்மைப் பொருளை அறிந்துகொள்ளாதவர்களுக்கு உண்டாகும் துன்பத்திற்கும ஒரு செய்யுளுக்கு உரிய பொருளை யொழித்துவிட்டுத் தமது கருத்தின்படியே பொருள் செய்தவருடைய பெரு முயற்சி பயன்படாமற்போனதற்கும உதாரணங்கள் அநேகங்களுள்ளன.

அவற்றுள், யான் கண்கூடாக அறிந்த இரண்டை இங்கே சொல்லுவேன்.

"ஊறுதெரி தலுந்தவிர்த்தோ ருடம்புதனி யுட்புகுந்து, மாறுதவிர் காரோண வள்ளலா ரெதிர்நின்று, வேறுமல ரிலைபுனைந்து வேண்டு பலன் களுமுதவிப், பேறுதவு சிவமேயாய்ப் பிறங்கிவிடை மேற்கொளுமே." இச்செய்யுள் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களியற்றிய திருநாகைக்காரோணப்புராணத்துள்ள செய்யுட்களுள் ஒன்று. இது துவசஸ்தம்ப வர்ணனை.

அந்தப் புராணத்தைப் பிள்ளையவர்களுடைய மாணாக்கரிற் சிறந்த ஒரு பண்டிதர் ஒரு கனவானுக்குப் பாடஞ்சொல்லி வந்தனர். வருகையில் மேற்படி செய்யுளுக்கு அந்தப்பண்டிதர் கூறிய உரை அந்தக் கனவானுக்குச் சரியென்று தோற்றவில்லை. அதனாற் பிள்ளையவர்க

ளைச் சந்தித்தபொழுது அந்தப் பிரபு, "இச்செய்யுளுக்குப்பொரு ளென்ன?" என்று கேட்ட காலத்தில் அவர்கள், "பாடஞ்சொல்லுகிற வர் இதற்கு என்ன பொருள் கூறினார்?" என்று கேட்டார்கள். "அவர் சொல்லியது சிறிதும் பொருத்தமாகத் தோற்றாமையால் நான் மனத் திற்கொள்ளவில்லை" என்று அக்கனவான் சொன்னதுடன் விரைவில் சரியான பொருளைத்தெரிந்து கொள்ளவேண்டுமென்று வினயத்துடன் விண்ணப்பஞ் செய்து கொண்டனர். பிள்ளையவர்கள் அச்செய்யுளின் பொருளை விளங்கச் சொல்லிவிட்டுப் பேசிக்கொண்டிருக்கையில இயல் பாகவே முன்பு பாடஞ்சொல்லிய பண்டிதர் அங்கேவந்து பிள்ளையவர் களைக் கண்டு அச்சக்குறிப்பு புலப்படும்படியாக அஞ்சலி செய்துவிட்டு அவர்களுடைய குறிப்பின்படி அயலிலிருந்து சௌக்கியத்தை விசாரித் துக்கொண்டிருக்கையில், பிள்ளையவர்கள், "இச்செய்யுளுக்கு நீ கூறிய பொருள் யாது?" என்று கேட்டபொழுது தம்முடைய அறியாமையை இவர்கள் தெரிந்து கொண்டார்களென நாணமுற்று, "பொருள் விளங் காதபடி நீங்கள் இப்படிப் பாடலாமா? யாருக்கு விளங்கும்? உலகத் துக்கு இப்படிப் பாடுவது என்ன பயனை அளிக்கக் கூடியது? அவசியம் பாட வேண்டி நேரிட்டால் அச்செய்யுளின் பொருளை யெழுதிக் கீழே குறித்திருத்தல் வேண்டுமன்றோ?" என்று கடுஞ்சொற்கள் சொல்லத் தொடங்கிவிட்டனர். இவர்கள் என்ன சமாதானஞ் சொல்லியும் அவர் கேட்கவில்லை.

மற்றொன்று: "திருமாலுக்கடிமை செய்" என்னும் நீதிவாக்கி யத்திற்குப் பரமசிவனுக்கடிமைசெய் என்று வலிந்து பொருள் செய்து கொண்டு அதை வற்புறுத்தற்காக வினாவிடையாகத் தொடுத்து இரு நூறு பக்கத்திற்குக் குறையாதபடி வசன நடையாக நூலொன் றெழுதி அதனை அச்சிற் பதிப்பிக்க நினைந்து ஒரு பண்டிதர் சிறப்புப் பாயிரம் பெறுவதற்கு ஒருவரிடம் வந்தனர். வசன நடை மிகத்திருத் தமாகவே இருந்தது. கேட்டுக்கொண்டிருந்த இங்கிலீஷ் தாக்க வித்து வான் ஒருவர், "திருமாலென்பதற்குப் பரமசிவன் என்ற அர்த்தம் தமி ழில் எங்கேனும் பிரயோகம் கண்டதுண்டா? இருந்தாற் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் இவ்வளவும் பயனில்லை" என்று சொல் லவே, அவர் அதற்கு ஆதாரஞ் சொல்வதற்கு நெடுநேரம் யோசித்துப் பார்த்தும் ஒன்றுந் தோன்றாமையால் அப்புத்தகத்தை வாங்கிக்கொண்டு சென்றனர். அப்பால் அதை வெளிப்படுத்தவில்லை.

தொல்காப்பியத்துக்கு மேற்சொல்லியபடி அறுவருரை இப் போது உள்ளன.

"ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி, தன்பெய ராலுல கின்புறத் தருநூல், உளங்கூ ருரையா ழிளம்பூ ரணமும், ஆறு வியல்பிற்

சேனாவரையமும், உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியமும், மற்று மற் றிடப்பொருள் முற்று முணர்ந்து" என்னும் **இலக்கணக் கொத்துப்** பாயிரத்தால் இளம்பூரணம், சேனாவரையம், நச்சினார்க்கினியம் என்னும் இம்மூன்றுரைகளே தொல்காப்பிய மூலத்தோடு சில இடங்களில் சில நூற்றாண்டுகளுக்கு முன் வழங்கி வந்தன வென்று தெரிகின்றது. இம்மூன்றுரையன்றிப் பேராசிரியர், கல்லாடர், தெய்வச்சிலையாரென்பவர்களும் அந் நூலுக்கு உரைசெய்திருக்கின்றார்களென்று சில ஆதாரங்களால் தெரியவருகின்றது. இவற்றிற் சில பாகங்கள் இப்போது கிடைக்கின்றன. இந்த ஆறு உரைகளில் இளம்பூரணரும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் செய்த உரைகளே தொல்காப்பிய முழுமைக்குமுள்ளன.

சேனாவரையர், கல்லாடர், தெய்வச்சிலையார் என்னும் மூவரும் சொல்லதிகாரத்திற்குச் செய்துள்ள உரைகள் இப்போதுள்ளன. கல்லாடர் இயற்றிய உரைமுற்றும் கிடைக்கவில்லை.

**இளம்பூரணர்**: இவர் தொல்காப்பியத்துக்கு முதலில் உரைசெய்தவராக நினைக்கப்படுகிறார். அதனால், இவர் உரையாசிரியரென்ற பெயராலும் வழங்கப்படுவர். மூவாயிர வருடங்களுக்கு முன்னர்த் தோன்றிய தொல்காப்பியத்திற்கு இவர்காலம் வரையில் உரை இராமலிராதென்றும் சுருக்கமாக ஏதேனும் ஓருரை இவர் காலத்திற்கு முன்பு இருந்திருக்க வேண்டுமென்றும் சிலர் கருதுவதுண்டு. இளம்பூரணவடிகளென்றும் அடிகளென்றும் புலவுத்துறந்த பெரியோரென்றும் பேராசிரியர் அடியார்க்குநல்லார் முதலியோரால் இவர் பாராட்டப் பெறுவர். நன்னூல் மயிலைநாதருரை இவருரையைத் தழுவியே இயற்றப்பெற்றதென்று விளங்குகின்றது. மயிலைநாதர், "பெயர்வினையும்மை" என்னும் சூத்திர வுரையிற் பதெச்சங்களையுங் கூறிவிட்டு, "இஃது ஒல்காப்புலமைத் தொல்காப் பியத்துள் உளங்கூர் கேள்வி யிளம்பூ ரணரெனு மேதமின் மாதவரோதிய வுரையென் றுணர்க" என்று எழுதியிருத்தலால் இவர் பெருமை நன்குவிளங்கும். ஆனாலும் உரையாசிரியரென்று சிறப்புப் பெயர் வாய்ந்தவர் இவர்க்குமுன்பு வேறொருவர் இருந்திருக்கக் கூடுமோ என்று சிலபெரியோர்கள் எண்ணுவதுண்டு. அவ்வையம் மிக ஆராய்ந்து நீக்கற்பாலது.

திருக்கோவையாருக்குப் பேராசிரியர் இயற்றிய உரையும் கல்லாடத்திற்குத் திருநெல்வேலி மயிலேறும் பெருமாள்பிள்ளை செய்த உரையும் நச்சினார்க்கினியருரை யென்று கருதப்பட்டு வந்தமையும் பதினெண் கீழ்க்கணக்குக்களுள் சிலவற்றின் உரைகள் நச்சினார்க்கினியர் உரை யென்றே பதிப்பிக்கப்பட்டு வந்தமையும் பலர் அறிந்தனவே.

இளம்பூரணருடைய உரையாற் பழைய நூற்பெயர்களிற் சில தெரிய வந்ததன்றிச் சில பழைய செய்யுட்களின் சுத்தமான முழுவடிவமும், சில பாடல்களின் சிதைந்த பகுதிகளும் விளங்க வெளிப்பட்டதுண்டு.

**பேராசிரியர்**: இவர் நச்சினார்க்கினியருக்கு முந்தியவர். நச்சினார்க்கினியர் இவரை மிகப்பாராட்டிக் கூறுவர். தொல்காப்பிய மெய்ப்பாட்டியலுக்கும் உவமவியலுக்கும் இவர் எழுதிய உரையும் காட்டிய மேற்கோள்களும் அவற்றை விளக்கிய பகுதிகளும் அறிந்து மிக இன்புறற்பாலன. குறுந்தொகையில் முதல் 380 - பாடலுக்கும் இவர் உரை எழுதியிருந்தார்; இப்போது அது கிடைக்கவில்லை. திருச்சிற்றம்பலக் கோவையாருக்கும் இவர் உரை எழுதியிருக்கின்றனர்; அஃது இப்போது உளது. இவர் காட்டியிருக்கும் உரை நயங்கள் மிகப்பாராட்டற்பாலன.

**சேனாவரையர்**: இவர் வடமொழியிலக்கணமும் நன்கு கற்றவர். ஸ்ரீ சிவஞான யோகிகள் முதலியோர்களால் மிகவும் பாராட்டப் பெற்றவர். ஆக்ஷேப சமாதானங்களோடு கூடி மிக அழகாக இருக்கும் இவருரை.

**நச்சினார்க்கினியர்**: இவர் சரித்திரம் சீவகசிந்தாமணி, பத்துப்பாட்டு முகவுரைகளில் மிகவிரிவாக எழுதப் பெற்றுள்ளது. இவருரையில் 82-பழைய நூல்கள் மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. குறுந்தொகையிற் பேராசிரியர் உரையெழுதாதொழிந்த 20-பாடல்களுக்கு இவர் உரையியற்றினார். இவருடைய உரைநயங்கள் சீவகசிந்தாமணி முதலிய நூல்களின் உரையிற் பல காணப்படும்.

**கல்லாடர்**: இவர் வேறு; சங்கப்புலவராகிய கல்லாடர் வேறு; கல்லாடம் என்னும் நூலை இயற்றிய புலவர் வேறு.

**இறையனார் அகப்பொருளுக்கு** இப்பொழுதுள்ள உரை நக்கீரரால் இயற்றப்பட்டதன்று. சிலப்பதிகாரப் பாடல்கள் அதில் மேற்கோள்களாக வந்துள்ளன. ஆகையால் நக்கீரர் அதை இயற்றியிருக்க மாட்டாரென்று நினைக்கிறேன். அவர் மாணாக்கர் பரம்பரையில் உரை மட்டும் வந்ததென்று தோற்றுகின்றது; மேற்கோள்கள் பிற்காலத்து ஒருவரால் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

பதினெண்கீழ்க்கணக்குக்களில் நாலடியார்க்கு உரையியற்றிய பதுமனார் நாலடியாரில் திருக்குறளிற்போல அதிகாரம் வகுத்தவர். குடத்துக்குள் யானையைப் புகுத்துவது போல் பல பாடல்களைச் சில அதிகாரங்களில் அவர் புகுத்தியிருக்கிறார். பதினெண் கீழ்க்கணக்குக்களில் மற்றவற்றிற்கும் திருத்தமான பழைய உரைகளுண்டு. கீழ்க்

கணக்கிற் குறளைச் சேர்க்கக் கூடாதென்று சிலர் சொல்வர். தன்மையால் குறள் உயர்ந்ததானாலும் அடியளவால் குறைந்தது. அதனாலேயே அது கீழ்க்கணக்குக்களுடன் சேர்க்கப்பட்டுள்ளது. குறளுக்கும் நச்சினார்க்கினியருரை இருந்ததாகச் சொல்வார்கள். இருக்கும் உரைகளுள் பரிமேலழகர் உரையே சிறந்ததாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

**ஏலாதி** என்பது சைனர் இயற்றிய நூல். அது பாடமாகவைக்கப்பட்டபொழுது அதன் காப்பிலுள்ள, "அறுநால்வர்" என்பதற்கு அவரவர் மனம் போனபடி முன்பு உரையெழுதி வந்தார்கள். 24-அட்சரங்களையுடைய காயத்திரியைஜபிப்பவர் என்பதும், காமக் குரோதங்களை நீக்கியவர் என்பதும், பத்து ஆழ்வார்களென்பதும், பற்றற்ற சைவ சமயாசாரியர் நால்வரென்பதும், பிறவும் அவர்கள் எழுதிய உரைகள். இவற்றால் ஐயமுற்றுப் பொருளுண்மை காணாமல் வருந்திய ஒருவருக்குக் கும்பகோணத்தில் ஒரு சைனர் வீட்டிலிருந்த திருக்கலம்பகக் காப்பின் உரையிலிருந்துதான் "அறுநால்வர்" என்பது 24-தீர்த்தங்கரர்களைக் குறிப்பிடுவது என்று விளங்கிற்று.

பரிமேலழகர் குறளுக்கும் பரிபாடலுக்கும் உரை இயற்றினாரென்று முன்பு சொன்னேன். நச்சினார்க்கினியருக்கு அவர் முந்தினவர். "வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்" (திருமுருகாற்றுப்படை, 106) என்புழி, 'வசிந்து' என்பதற்குப்பிளந்து என்று பொருள் கூறி, படைக்கலங்களால் வடுப்பட்டென்று பொருளுரைத்தல் இறைவனுக்கேற்ற பொருந்தாதென்று விசேடவுரையுமெழுதிய ஆசிரியர் நச்சினார்க்கினியர் மறுப்பு, "வாண்மிகுவயமொய்ம்பின்" (பரிபாடல், 9: 57) என்பதற்கு வாட்டழும்பு நெருங்கிய வெற்றி மொய்ம்பென்று பரிமேலழகர் பொருளெழுதியதைச் சுட்டியதாயின், இவர் இந்நூலுக்கு உரையியற்றிய காலம், அவர் பத்துப்பாட்டிற்கு உரையியற்றிய காலத்திற்கு முற்பட்டதென்று கொள்ளலாம்.

சிலப்பதிகாரத்திற்கு உள்ள அரும்பதவுரை மிகச் சிறந்த உரையாகும். அடியார்க்கு நல்லார் அரும்பத உரையாசிரியருரையை மேற்கோளாகக் காட்டியிருத்தலால் அரும்பதவுரையே முற்பட்டதாகும். அடியார்க்கு நல்லார் உரை அதிசயமான உரை. நாடக நூல், இசை நூல் முதலியவைகளிலிருந்து மேற்கோள்கள் காட்டியிருப்பதால் அந்நூல்கள் அவர்காலத்தில் இருந்தன என்று தெரிகிறது. மற்ற உரையாசிரியர்கள் போலன்றிப் பெரும்பாலும் மேற்கோள் காட்டும் இடங்களிலெல்லாம் இஃது இன்ன நூலென்றாவது, இஃது இன்ன நூலாசிரியர் வாக்கு என்றாவது அடியார்க்குநல்லார் புலப்படுத்திச் செல்லுவார்.

இவருடைய உரையிலிருந்தே பெருங்கதை என்னும் ஒரு காவியமுண்டென்று நான் அறிந்தேன்.

**அவிநயநூலுரையாசிரியர்: மயிலைநாதர்,** "இந்தப் பத்தெச்சமும், புவிபுகழ் புலமை யவிநய நூலுட் டண்டலங் கிழவன் தகைவருநேமி யெண்டிசைநிறைபெய ரிராசபவித்திரப் பல்லவ தரையன் பகர்ச்சி" (நன்னூல், சூ. ௩௫௯- உரை) என்று எழுதி யிருப்பதிலிருந்து அவிநய நூலின் உரை ஆசிரியர் பெயர் வெளியாகின்றது.

தண்டியலங்கார உரை அநபாய சோழன் காலத்தில் இயற்றப் பட்டதென்று அந் நூலினுரையிலுள்ள மேற்கோள்களால் தெரியவருகின்றது. அந் நூலுரையாசிரியா பெயர் விளங்க வில்லை.

வீரசோழிய உரையாசிரியா பெருந்தேவர்; பழைய இலக்கணச் சூத்திரங்களும பழைய இலககியச் செய்யுட்களும் அவ்வுரையில் நிறைந்துள்ளன. அவ்வுரையிற் காணபபடும மேற்கோள் பல இக்காலத்திற் கிடைக்கவில்லை.

**தக்கயாகப்பரணி உரையாசிரியர்:** இவர் பெயர் தெரிய வில்லை; எலலா இயல்புகளிலும அடியாாககு நல்லாரைப போன்றவா. இவருடைய உரையினுல இவர் இருமொழிகளினும் சிறநத புலமை வாய்ந்தவரென்று தெரிகின்றது.

**நீலகேசி விருத்தி சமயதிவாகரம்:** இது நீலகேசியென்னும் சைனநூலினுரை; இவ்வுரையாசிரியர் சமயதிவாகரவாமன முனிவரென்பார்; இவருடைய பிமபம் சைனகாஞ்சியில் உள்ளது. அருமையான பதப் பிரயோகங்களை அவ்வுரை தன்பாற் கொண்டது; அரியவிஷயங்கள் பலவும இக்காலத்திற் கிடைததற்கரிய சில நூல்களின் பெயர்களும் அதனுல் தெரியவருகின்றன.

சைவ சாஸ்திரங்களின் உரையாசிரியர் மறைஞான சம்பந்தர் முதலியோர். அவர்களில் மிகச்சிறந்த உரையாசிரியர் திருவாவடுதுறையாதீனத்து ஸ்ரீ சிவஞான யோகிகளென்பது யாவருமறிந்ததே.

திவ்யப் பிரபந்த உரை ஆசிரியர்கள் ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை, நஞ்சீயர் முதலியவர்கள். அவர்களுடைய உரையில் ஒரு பாடலுக்கு உரை கேட்டுவிட்டால் மனம் வேறொன்றிற் செல்லாது.

# IX. சங்ககாலத்திற்குப் பிறகு தமிழை ஆதரித்த பிரபுக்களும் புலவர்களும்.

இன்று சொல்ல எடுத்துக்கொண்ட விஷயம சங்க காலத்திற்குப் பிறகு தமிழை ஆதரிதத பிரபுக்களும் புலவாகளும் என்பது. இன்று வரையில தமிழை ஆதரிததுவநதிருககிற பரமபரையில தோன்றிய ஸ்ரீ சேதுமன்னா அவர்கள், இங்கே வநதிருபபது பொருநதமுடையதே. சங்க காலததிற்குப பிறகும முடிமன்னாகள் இருநதனா. அவர்களும், சிற்றரசாகளும், மநதிரிகளும, சேனைத தலைவாகளும, இராசப பிரதிநிதிகளும், பிராமணாகளும, வைசியர்களும, வேளாளாகளும், மடாதிபதிகளும், விததுவான்களும பிறரும தமிழை ஆதரிதது வநதிருககிறாகள். உணவிலுள்ள அறுசுவையினும தமிழிலுள்ள நவரஸம சிறநதன என்றவாகள் பலா. அறுசுவை அற்றசுவை என்றும, தமிழ்ச சுவை கேட்கக் கேட்கப புதிது புதிதாக இருததலால் நவரஸமெனபது பொருததமுடையது என்றும சொலவாா சிலா, (நவம்-புதுமை.) "சொற்பாவும பொருடெரிந்து தூய்மை நோககித் தூங்காதாா மனததிருளை வாங்கா தாலை" என்று கீழ்வேளூர்த தேவாரததில திருநாவுககரசுநாயனாா கட்டளையிட்டிருக்கின்றனா. சொலலிற் பரவியிருக்கும பொருளையறிநது அதன் தூய்மையை நோககி இன்பததை அனுபவிககிறவாகளின அஞ்ஞானததை வாங்குகிறவன்என்பது இதன் பொருள்; "ஆயுநதொறுநதொறு மினபநதருந்தமிழ்" என்று ஸ்ரீ கசசியபப முனிவரும சொலலியிருக்கிறாா; "நவிறொறு நூனயம போலும் பயிறொறும, பண்புடையாளர் தொடாபு" என்று திருக்குறளிற் சொல்லியிருப்பதும இங்கே கவனிககத தககது' "உள்ளுதோறுள்ளுதோறுள்ளமுருககும், திருமுத்தமிழ்" என்பது கல்லாடம்.

புலவாகளை ஆதரித்த பிரபுககள், அவாகளிடம குற்றங்களிருப்பினும் அவற்றைக் கவனிககமாட்டாாகள். ஆயினும் சில சமயங்களில் வித்துவான்கள் பிரபுக்களை மதியாது பேசுவதுமுண்டு. கமபர் ஒருசமயததில் சோழராசனைப்பார்த்து, "மன்னவனு நீயோ" என்று அலட்சியமாகச் சொன்னதுண்டு. வெளிபபடையாகச் சொல்லாமல் நூல்களிற் குறிப்பாகவும் காட்டுவர்; ஒரு புலவர் அரசனுக்குச் செலுததவேண்டிய இறையைச் செலுத்தாமையால் அவரைப் பிடிததுக் காவிரிப்பூம்பட்டினத்துச் சிறைக்குக்கொண்டு போனார்கள். வழியில், திருப்புகலூரில்

அவர் பூசைசெய்ய அனுமதி பெற்றனர். அவர் தங்கிய இடம் திருக்கோயிற் பக்கத்துள்ள ஓரரசமரத்தின் கீழிருந்த ஸ்ரீ விநாயகர் சந்நிதி. அப்பொழுது அவ்விநாயகர் மீது அவர் இயற்றிய ஒரு பாடலில் தம் துன்பத்தைக் குறிப்பிட்டார். கோவிலில் திருப்பணி செய்துகொண்டிருந்த ஓர் உருத்திரகணிகை அதை அறிந்து புலவர் செலுத்தவேண்டிய இறையைச் செலுத்தி அவரை மீட்டு அவர் பாடிய பாடலைக் காப்பாக வைத்துக்கொண்டு ஓர் அந்தாதி பாடும்படி செய்தாள். அந்நூலே திருப்புகலூரந்தாதியென்பது. ஒரு புலவர் ஒரு நூலை இயற்றி அதை அரங்கேற்றப் பலரிடம் போய்ப்போய் அலுத்துப்போனார். உள்ளொன்று புறம்பொன்று பேசுகிறவர்கள்பால் பலகாலுஞ்சென்ற பாவம் எப்பொழுது தொலையுமென்று அவர், "அறம்பாவ மென்று அறியார் மனைதொறுஞ் சென்றுழன்ற, மறம்பாவ மென்று மறிகரும்" என்று தொடங்கும் ஒரு பாட்டை இயற்றித் தம் வருத்தத்தைத் தெரிவித்திருக்கின்றனர்.

பிற்காலத்திலுங்கூடப் பிரபுக்கள் ஒவ்வொருவரும் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து வந்ததால் தமிழ்க்கலவி வளர்ச்சி அடைந்தது. ஆயினும் சில சமயங்களில் புலவர்களின் பெருமையை அறியாத பிரபுக்களுமிருந்ததுண்டு. கலிங்கத்துப்பரணி பாடிய சயங்கொண்டாரிடம் சோழன் ஒருசமயத்தில் மதிப்பு வையாமலிருந்தான். மிகப் புகழ்பெற்றவர்களுங்கூட மிடியால் வருந்தினதுண்டு. கம்பர் தரித்திரத்தின் கொடுமையை நன்கறிந்தவரென்பது கங்கையைக் கடந்த ஸ்ரீராமன் தன் தம்பி பர்ணசாலை கட்டியதைப்பற்றிச் சொல்லியிருப்பதாகப் பாடியிருப்பதிலிருந்து விளங்குகிறது.

ஒட்டக்கூத்தர் என்ற புலவர் விக்கிரம சோழன், குலோத்துங்கசோழன், இராசராசசோழன் ஆகிய மூவர் காலத்திலும் இருந்தவர். அம்மூவரையும் அவர் பாடியிருக்கிறார். சிவபக்திமான்; திருப்பணிகள் பல செய்வித்தார்; குலோத்துங்கனுடைய ஆசிரியராகவும் இருந்தார்.

சேக்கிழார் அநபாய சோழன் காலத்திலிருந்தவர். பெரியபுராணத்தை இயற்றும்படி அவரை அவ்வரசன் கேட்டுக்கொண்டான். புராணத்தில் அவர் அவனைப் பாராட்டியிருக்கிறார். அவருடைய முயற்சியினால் பல தானங்களை அரசன் செய்வித்தான். திருநாகேச்சுரத்தில் சேக்கிழார் பிம்பமும் அவர் பெயருடைய மண்டபம் ஒன்றும் இருக்கின்றன. சேக்கிழார் அவதரித்த குன்றத்தூரில் திருநாகேச்சுரமென்னு மாலயமொன்று அவரால் கட்டுவிக்கப்பட்டது. தொண்டை நாட்டில் சேக்கிழாருக்கு விசேட அன்புண்டு. பெரியபுராணத்தில் திருக்குறிப்புத்

தொண்டை நாயனுர் புராணத்தில் தொண்டை நாட்டின் சிறப்பை மிக விரிவாக வர்ணித்திருக்கிறுர். திருவாவடுதுறை ஸ்ரீ சிவஞானயோகிகள் அதை மிகவும் பாராட்டியுள்ளார்.

கம்பர், சடையப்பர் என்ற பிரபுவால் ஆதரிக்கப்பட்டார் என்பதும் அவர் வெண்ணெய் நல்லூரிலிருந்தார் என்பதும் எல்லோருக்கும் தெரிந்தவை. அந்த வெண்ணெய்நல்லூரைப்பற்றிப் பலர் பலவாறு சொல்லுகிருர்கள். குற்ருலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு வாயுமூலையிலுள்ள வெண்ணெய் நல்லூரே சடையப்பவள்ளல் இருந்த ஊர். நாயனுர் என்ற பட்டம் ஒருவகை வேளாளர்களுக்குச் சோழநாட்டில் வழங்கி வருகின்றது. அது பிறகு நயினுர் என்று மருவிவிட்டது. சோழநாட்டு வேளாளர்களுக்குரிய 64-கோத்திரங்களில் சடையப்ப நயினுர் கோத்திரம் என்று ஒரு கோத்திரத்திற்குப் பெயர் இருக்கிறது.

இவ்வுபகாரியைக் கம்பர் இராமாயணத்திற் பல இடங்களிற் பாராட்டியிருக்கிருர். வெண்ணெய்ச் சடையன் புகழ்போல் நிலாப்பரவியதென்றும், நளன் எந்தமலையையும் அலட்சியமாகத் தாங்கியது சடையன் தஞ்சமென்றவரைத் தாங்குவது போலிருந்ததென்றும், வெண்ணெய் நல்லூரை அடைந்தவர்களின் பசி நீங்குவதுபோல் நாகபாசம் நீங்கியதென்றும், இன்னும் வேறு பலவாருகவும் சடையப்பரை அவர் புகழ்ந்திருக்கிருர்.

கம்பர் பாண்டிநாட்டிற்குப் போயிருந்தபோது பாண்டியன் அவரை மதிக்கவில்லை என்றும் பிறகு அவனுடைய பெருந்தேவியாருடைய வேண்டுகோளால் அவரைக் கௌரவப்படுத்தினுன் என்றும் தெரிகிறது. அந்த அரசி கல்வி கேள்விகளில் விசேஷஞானம் பெற்றிருக்க வேண்டும்.

கொங்குநாட்டில் தலைக்காடு என்ற இடத்தில் கங்கர்கள் என்ற ஒருவகையரசர்கள் இருந்தார்கள். அவர்கள் புலவர்களை ஆதரித்து வந்தார்கள். தளக்காடு என்பது பிற்காலத்தில் தலைக்காடு என்று வழங்கப்படுகிறது. நன்னூல் இயற்றிய பவணந்தியாரை ஆதரித்த சீயகங்கன் அந்தக் கங்கர்களில் ஒருவனே. அவர்கள் சைனர்கள். நன்னூல், அதற்குரிய மயிலைநாதர் உரை, நேமிநாதம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, நம்பியகப்பொருள், இவற்றின் உரைகள், பெருங்கதை, வச்சணந்திமாலை முதலியன அவர்கள் இயற்றுவித்த நூல்களாகும். சீவகசிந்தாமணியும், சூளாமணியும் சில உபகாரிகள் வேண்டுகோளால் சைன பண்டிதர்கள் இயற்றிய காப்பியங்களே.

களந்தைப் புகழேந்தியைச் சந்திரன்சுவர்க்கி என்ற அரசன் ஆதரித்தான். நளவெண்பாவில் சில இடங்களில் இவர் அவனைப் புகழ்ந்

திருக்கிறார். இவருடைய ஊர் பொன்விளைந்தகளத்தூர் என்றும், முதுகளத்தூர் என்றும், சோழநாட்டுள்ள களப்பாழ் என்றும் பலவாறு சொல்லுகிறார்கள். முதுகளத்தூராக இருக்கலா மென்பதே சிலர் துணிபு. களந்தையென்பது மரூஉ மொழி.

தஞ்சைவாணன் கோவை பாடிய பொய்யாமொழியாரை ஆதரித்த பிரபுவாகிய தஞ்சைவாணனென்பவர் பாண்டியனிடத்தில் மந்திரியாகவும் சேனைத் தலைவராகவுமிருந்தவர். இங்கே தஞ்சை என்பது சோழ நாட்டுத் தஞ்சாவூர் அன்று. பாண்டிநாட்டில் தஞ்சாக்கூர் என்று ஓர் ஊர் இருக்கிறது. அதுவே அந்தத் தஞ்சை. பொய்யாமொழிப் புலவர் மதுரைக்குப் போனபோது பொற்றாமரையிற் பண்டைக் காலத்திற் போடப்பட்ட சங்கப்பலகை மிதந்து மேல் வருமபடி பாட வேண்டுமென்று அங்கேயிருந்த பாண்டிய அரசன் கேட்டதாகவும், "பூவேந்தர் முன்போல்" என்ற பாட்டை அவர் பாடியதாகவும் சங்கப் பலகை வெளிப்பட்டதாகவும் சொல்வர். பொய்யாமொழியார்மேல் முருகக்கடவுளே பாடியிருப்பதாகவும் சொல்வர். அவரை ஆதரித்த அரசூர்ச் சீனக்கன் என்னும்பிரபு இறந்தவுடன் அதைப்பொறாமல் அவரும் உயிர் துறந்தார். கோப்பெருஞ்சோழன் இறந்ததும் பிசிராந்தையார் அப்படியே உயிர் துறந்தாரென்பது இங்கே அறியற்பாலது.

அம்பர் சேந்தன் என்ற பிரபு ஒருவர் இருந்தார். திவாகர முனிவரைக்கொண்டு திவாகரம் இயற்றுவித்தவர் அவரே. இதனாலேயே இந்நூல் சேந்தன் திவாகரம் என்று வழங்கலாயிற்று. ஔவை பாடிய அம்பர்சேந்தன் என்றும் இவர் பாராட்டப்பெற்றுள்ளார். இந்த அம்பர், பூந்தோட்டம் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலுள்ளது. கோச்செங்கட்சோழனால் திருப்பணி செய்யப்பட்டதும் தேவாரம் பெற்றதும் ஆகிய சிவாலயமொன்று அங்கேயுண்டு. திவாகரமே முதல் நிகண்டாகும். பிங்கலம் அதற்குப்பின் இயற்றப்பட்டது.

ஊற்றுமலை மருதப்பத்தேவர் என்ற பிரபு ஒருவர் இருந்தார். கல்விச்சுவையை யுணர்ந்தவர். சங்கரநமச்சிவாயப் புலவரைக்கொண்டு நன்னூலுக்கு ஓர் உரை செய்வித்தார்.

திருநெல்வேலியில் மயிலேறும்பெருமாள் பிள்ளை என்று ஒரு வேளாளப்பிரபு கல்விகேள்விகளில் மிகச்சிறந்தவராக இருந்தார். கல்லாடம் என்னும் நூலுக்கு அவர் உரை இயற்றினார். நச்சினார்க்கினியர் இயற்றிய உரை என்று ஒருகாலத்தில் தன்னை அது நினைக்கச் செய்தது. அவரிடத்திலே தான் இலக்கணக்கொத்துச் சுவாமிநாததேசிகர் கல்வி கற்றார். தேசிகர் அவரைப் பெரிதும் பாராட்டியிருக்கிறார்.

திருவண்ணாமலையில் பிரபுட தேவர் என்று ஓர் அரசர் இருந்தார். அவர் திருப்புகழ் பாடிய அருணகிரிநாதரை ஆதரித்தவர்.

வக்கபாகை யென்னும் ஊரிலிருந்த வரபதியாட்கொண்டான் என்னும் உபகாரி பாரதம் பாடிய வில்லிபுத்தூராழ்வாரை மிக்க அன்புடன் ஆதரித்தவ ரென்பது யாவரும் அறிந்ததே.

தாகந்தீர்த்த செழியன் என்று ஒரு பிரபு சின்னச்சேலத்திலிருந்தார். அந்தகக்கவிவீரராகவ முதலியார் முதலியோரை அவர் ஆதரித்தார்.

அரியிலூரில் கிருஷ்ணைய ஒப்பில்லாத மழவராயர் என்று ஒரு பிரபு இருந்தார். அவர் பல புலவர்களை ஆதரித்தவர்; சங்கீதத்திலும் பிரியமுடையவர்.

வரதுங்கராம பாண்டியர், அதிவீரராமபாண்டியர் என்ற இருவரும் பெரிய தமிழபிமானிகள். புலவர்களை ஆதரித்தார்கள். அவர்கள் பெரிய பண்டிதர்கள். அவர்களே நூல்களும் இயற்றினார்கள். வரதுங்கராமபாண்டியர் மனைவியாரும் தமிழில் பாண்டித்தியம் பெற்றவர். அவரும் சில பாடல்கள் இயற்றியுள்ளார்.

இராமநாதபுர அரசர்கள் பரம்பரையாகத் தமிழை ஆதரித்து வந்திருக்கிறார்கள். அவர்கள் தமிழ்ப் புலவர்களுக்குச் சமமானமாக ஒவ்வொருகாலத்திற் கொடுத்த கிராமங்கள் இன்னும் வழிவழியாகப் புலவர்களால் அனுபவிக்கப்பட்டு வருகின்றன. ரகுநாத சேதுபதி என்பவர் காலத்தில் அநந்த கவிராயர், அமுத கவிராயர் என்று இரண்டு புலவர்கள் இருந்தனர். அமுத கவிராயரியற்றிய ஒருதுறைக்கோவை அரசர் முன் அரங்கேற்றப்பட்டபோது ஒவ்வொரு பாட்டிற்கும் ஒவ்வொரு பொன் தேங்காய் கொடுக்கப்பட்ட தென்பர்; ஒரு பாட்டு மற்றைப் பாட்டுக்களைவிடச் சுவையுள்ளதாக இருந்ததாம். அந்தப்பாட்டுக்காகக் கொடுக்கப்பட்ட பொற்றேங்காயும் அதிக விசேடமுடையதாக உள்ளே மாணிக்கத்தைப் பெற்றிருந்ததென்பர்.

மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி அநந்த கவிராயர் பாடினது. மானூர் என்னும் ஊர் அதற்குப் பரிசாக ஒரு சேதுபதியரசராற்கொடுக்கப்பட்டது. இவர் மானுக்குக் கலை வேண்டாமா வென்றபோது கலையூரென்ற ஊரும் அவ்வரசரால் இவருக்குக் கொடுக்கப்பட்டதாம்.

சவ்வாதுப்புலவர், சர்க்கரைப் புலவர் முதலிய வேறு சில புலவர்களும் ஸ்ரீ சேது ஸமஸ்தானத்தில் இருந்தனர். சேது புராணம் பாடியவர் நிரம்ப அழகிய தேசிகர். அவர் துழாவூர் மடத்துத்தலைவர்.

மிதிலைப் பட்டியைச சேர்ந்த 22½-கிராமங்கள் அழகிய சிற்றம்பலக் கவிராயரென்பவருக்கு மேற்கூறிய சேதுபதிகளாலும் வெங்களப்ப நாயகரென்பவராலும நன்கொடையாகக் கொடுக்கப்பட்டன.

கவிகுஞ்சரம் என்றபெயருடைய பிராமண பண்டிதர் இருவர் இருந்தனர்; ஒருவர் பாட்டனர்; மற்றவர் அவருடையபேரர். பேரராகிய கவிகுஞ்சரபாரதி கந்தபுராணக் கீர்த்தனையை இயற்றினா.

செங்நெற்குடி சுப்பராயரென்ற ஒரு மாத்துவப்பண்டிதர் இருந்தார். அவர் விஷ்ணுபுராணத்தைச் செய்யுள் வடிவமாக இயற்றினர். வெண்பாப்புலி என்ற பட்டம் பெற்ற கவி ஒருவா இருந்தார். இவர்களும் வேறு பல புலவர்களும் சேதுபதி மன்னர்களாலும் அவர்களுடைய நாட்டிலுள்ள பிரபுக்களாலும் ஆதரிக்கப் பெற்றவர்கள். இபபொழுது இங்கே வந்து வீற்றிருக்கும் சேதுபதி அரசரவர்களும பல புலவர்களை ஆதரித்து வருவதலலாமல் தமிழ்ச் செய்யுட்களை விரைவிற் பாடவும் ஆற்றலுடையவர்கள். இவர்கள் பல வருடங்களாகத தமிழ் அபிவிர்த்திக்குச் செய்துவரும் உதவி மிகப் பாராட்டற்பாலது.*

சொக்கமபட்டி ஜமீன்தாரகளும, மேலகரம, செங்கோட்டை, கிருஷ்ணபுரம் முதலிய இடங்களிலிருநத வித்துவான்களை ஆதரித்து வந்திருக்கிறார்கள்.

எட்டயபுர அரசர்களும மிக்க தமிழபிமானிகள். அந்தச் சமஸ்தானத்திலிருந்த கடிகைமுத்துபபுலவா இறநதுபோகுந தறுவாயிலிருந்தபோது வருந்திய தமது மக்களை நோககி, "வருந்தாதீர்கள்; இந்த ஓரப்பன் போனல் எட்டப்பன் இருககிறான்" என்றாராம். பால் கசந்தால் மரணம் நெருங்கி விட்டதென்று நினைப்பது வழக்கம்; அப்புலவருக்குப் பாலைக்கொடுத்து அவருண்ணுமையைக கண்டு பால் கசந்து விட்டதோவென்று கொடுத்தவா கேட்டபோது, "பாலும்கசக்கவில்லை. அதை வடிக்கட்டின துணியும கசககவில்லை" என்று சொன்ஞராம். மரண காலததிலும அவருககிருந்த அறிவாற்றல இதனுல் விளங்குகிறது.

பாண்டிநாட்டுள்ள வேம்பத்தூர் என்பதற்குக் குலசேகர சதுர்வேதி மங்கலம் என்று ஒரு பெயருண்டு. குலசேகர பாண்டிய ராஜாவால் பிராமணத தமிழ்ப பண்டிதர்களுக்கு இது சுரோத்திரியமாகக கொடுக்-

* தமிழ்ச்சுவையை நன்கறிந்தனுபவித்தும், வித்வான்களை யாதரித்து ஊக்கமுளித்தும் வந்த ஸ்ரீ பா. இராஜ ராஜேசுவர சேதுபதி மகாராஜா அவர்களாகிய இவர்கள் தேக வியோகமடைந்தமை தமிழ் படித்தவர்களுக்கு மிக்க வருத்தத்தை விளைவித்து வருகின்றது.

கப்பட்டது. இதில் 2,008-பிராமணர்களுடைய வீடுகள் இருந்தன. எல்லோரும் தமிழ்ப் பண்டிதர்களே. இவர்கள் பிற புலவர்களை ஆதரித்ததுமுண்டு. தமிழ்க்கவிகளாகிய சிற்றரசர்களிற் சிலர் இவ்வூரார் சிலரிடத்துப் பாடம் கேட்டவர்களென்றும் தெரிகின்றது. பாகவதமியற்றிய செவ்வைச் சூடுவாரும் பழைய திருவிளையாடலியற்றிய பெரும்பற்றப் புலியூர் நம்பியும் வேம்பத்தூரார்களே. வேம்பத்தூரார் திருவிளையாடலின் முகவுரையைப் படித்துப்பார்த்தால் இவ்வூராருடைய பிரபாவம் நன்கு விளங்கும்.

பிற்காலத்தில் மடங்கள் தமிழ்ப்புலவர்களைப் பெரிதும் ஆதரித்து வந்திருக்கின்றன. அவற்றுள், திருவாவடுதுறை மடம், தருமபுரம் மடம், திருப்பனந்தாள் மடம், காஞ்சி ஞானப்பிரகாசர் மடம், மதுரைத் திருஞானசம்பந்தமடம், திருநெல்வேலியைச்சார்ந்த செங்கோல்மடம் முதலியவைகளும், கும்பகோணம், சிதம்பரம், திருவண்ணாமலை, துறையூர், மயிலம் முதலிய இடங்களிலிருந்த வீரசைவ மடங்கள் முதலியவைகளுமே முக்கியமானவை. திருவாவடுதுறையில் ஆதீனகர்த்தராக எழுந்தருளியிருந்த மேலகரம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் மகா வித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களை ஆதரித்துப் பாடஞ் சொல்லுவித்தும், தாமே பாடஞ் சொல்லியும் பலரை முன்னுக்கு வரச்செய்தார்கள். ஈசான தேசிகர், சிவஞான யோகிகள், கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் முதலியவர்கள் இவ்வாதீனத்தவர்களுள் மிக்க தமிழ்ப்புலமை படைத்தவர்கள். சிவஞானயோகிகளுடைய பெருமை யாவரும் அறிந்ததே.

தருமபுரம் மடத்தில் மிகச் சிறந்த கல்விமான்களாக விளங்கிய புலவர் பலர். கந்தபுராணச் சுருக்கம் இயற்றிய சம்பந்த சரணாலய முனிவரும், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலியவர்களுக்குத் தொல்காப்பியம் பாடம் சொன்ன வெள்ளியம்பலவாண முனிவரும், சீகாழி சிதம்பரநாத முனிவர் முதலியவர்களும் இவ்வாதீனத்தைச் சார்ந்தவர்களே. திருப்பனந்தாள் மடத்தைஸ்தாபித்தவர் ஸ்ரீ குமர குருபர சுவாமிகளென்பது யாவருக்கும் தெரிந்ததே.

வெங்கனூர் அண்ணாமலை ரெட்டியார் என்பவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் முதலியவர்களை ஆதரித்தவர்.

தீராத வினைதீர்த்த திருமேனி கவிராயர் என்பவர், ஆழ்வார் திருநகரியில் ஸ்ரீசடகோபாழ்வார் சந்நிதியிலேயேயிருந்து ஆநந்தத்துடன் பல நூல்களியற்றி வாழ்ந்தார். இவரைப்போலவே இவர்பரம்பரையினர் பலரும், இவ்வூரிலும் இதனைச்சார்ந்த ஸ்ரீ வைகுண்டம் வெள்ளூர் முதலிய ஊர்களிலிருந்த பல கவிராயர்களும், அவர்கள் பரம்பரையினரும் தமிழ்

மடந்தைக்கு அணிகலமாகப் பல நூல்களை இயற்றினார்கள். ஆழ்வார் திருநகரியில் சுப்பிரமணிய தீட்சிதரென்ற ஒரு பெரிய பண்டிதரிருந்தார். அவர் 'பிரயோகவிவேகம்' என்ற இலக்கண நூலையும் அதற்கு உரையையும் இயற்றினார்; அவர் வடமொழி தென்மொழி நூல்களில் மிக்க பயிற்சியுடையவரென்பது அந்நூலாலும் உரையாலும் நன்கு விளங்கும்.

திருநெல்வேலிச் சீமையை யாண்ட வடமலைப் பிள்ளையன் என்பவர் மச்ச புராணமும் திருநீரோப புராணமும் இயற்றினார்.

திருநெல்வேலியில் ஒரு பெரிய அதிகாரியாக முன்பு விளங்கிய திருவேங்கட நாதையரென்பவர், திருவாரூர் ஸ்ரீ வைத்தியநாத தேசிகரைக் கொண்டு இலக்கண விளக்கமென்ற பெரியதோரிலக்கண நூல் இயற்றுவித்ததன்றித் தாமே தமிழிற் பிரபோதசந்திரோதயமென்ற காப்பியமுதலியவற்றையு மியற்றி யிருக்கின்றனர்.

காஞ்சீபுரம் மணியப்ப முதலியார், ஞானப்பிரகாச சிவப்பிர முதலியார், தொட்டிக்கலைக் கேசவ முதலியார், வேதாசல முதலியா ரென்பவர்கள் திருவாவடுதுறைச் சிவஞானயோகிகளையும், கச்சியப்ப முனிவரையும், சுப்பிரமணிய முனிவர் முதலியவர்களையும் ஆதரித்துப் பெரிய தமிழ்க் காப்பியங்களையும் பிரபந்தங்களையும் செய்வித்துப் புகழ்பெற்றார்கள்.

இதுகாறும் கூறிவந்த புலவர்களுடைய வரலாறுகள் விரைவிற் கூற நேர்ந்தமையின் காலவரையறைப்படி அமைத்துச் சொல்லப்பட்டன அல்ல.

# X. ஆராய்ச்சி.

ஆராய்ச்சி அனுபவத்தைப் பொறுத்தது. சுவடிகளைப் பிரதி செய்வித்து ஒப்பு நோக்கி ஒழுங்கு செய்தல் முதலியனவும் ஆராய்ச்சியில் அடங்கும். நான் படித்தபோது திருவாவடுதுறை ஆதீன கர்த்தர்களாக இருந்த மேலகரம் ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் அவர்கள், ஷை ஆதீன வித்வான் ஸ்ரீமான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள், கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராக இருந்த ஸ்ரீமான் தியாகராச செட்டியார் அவர்கள் முதலியவர்கள் எனக்குச் சொன்ன விஷயங்களையும் பிறகு நான் அறிந்த விஷயங்களையும் சொல்லுவேன்.

ஒரு நூலை அப்படியே பிரதி செய்யக் கூடியவர்கள் இந்நாளில்லை. முன்னாளில் அவ்வியல்பையுடையோர் ஒவ்வோர் ஊரிலுமிருந்தனர். சுவடியைக் கண்டால் இக்காலத்தில் ஓட்டம் எடுக்கிறார்கள். நான் கும்பகோணம் காலேஜிலிருந்தபோது சுவடிகளைப் படிக்கவும் கடிதத்தில் அவற்றைப் பிரதி செய்யவும் மாணவர்கள் பழகி வந்தார்கள். அன்புடையவர்களுக்கே அந்த வேலையைச் செய்வது சாத்தியம். ஒப்புநோக்கும்போது சரியாக இருக்கிறதா என்று கேட்டால் அன்பில்லாதவர்கள் சரியென்று சொல்லி விடுவார்கள். சிந்தாமணியைப் பரிசோதிக்கையில் நான் படித்த ஒவ்வொரு வரியும் பாடமும் சரியாக உள்ளனவென்றே ஒய்வில்லாமல் ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார். அவர்பால் ஐயமுற்றுச் சிந்தாமணியிலிராத வேறு நூலிலுள்ள பாட்டொன்றைச் சொல்லிச் சரியாக இருக்கிறதா என்று கேட்டேன். அவர் சரியென்று மிக்க துணிவாகச் சொன்னார். அதன் பின் அவரை மெல்ல விலக்கி விட்டேன்.

சுவடிகளில் மூலம் இன்னது உரை இன்னது என்று தெரியாமலிருக்கும். ஒற்றைப்புள்ளி இரட்டைப்புள்ளி முதலிய அடையாளங்களை இராமசந்திராக்கினியர், "சான்றோருக்குதல தந்தைக்குக் கடனே என்றார் பிறரும்" என்று எழுதி விடுவார். அது மேற்கோளென்பதும் இன்ன நூலிலிருந்து எடுக்கப்பட்டதென்பதும் விளங்கா. 'கொற்றுறைக் குற்றிலபோல' என்று மாத்திரம் உரையில் காணப்பட்டால் என்ன செய்வது? சில உரையாசிரியர்கள் மேற்கோளைக் கூறிவிட்டு ஆசிரியர் பெயரைச் சொல்லாமல் நூற் பெயரை மாத்திரம் சொல்வதுண்டு. பத்துப் பாட்டுரையிலிருந்துதான் பரிபாடல் என்ற நூலை அறிந்து கொண்டேன்.

கனகமாலையாரிலம்பக உரையில், 'கொற்றுறைக் குற்றில்போல' என்பது காணப்பட்டது. அதிலிருந்துதான் புறநானூற்றிற்கு உரை இருப்பதை அறிந்தேன். உரையைக் கொண்டு மூலத்தையும் மூலத்தைக் கொண்டு உரையையும் பல சமயங்களில் அறிந்துகொண்டதுண்டு.

ஸ்ரீமான் சி. தியாகராச செட்டியார் கண்டவாதி. ஒருவர் நன்னூலையும் உரையையும் தமது மனம்போனவாறே குறைத்து 200-சூத்திரங்களை நீக்கி அச்சிட்டுப் பாடமாக வைக்கும்படி அவருக்கு அனுப்பியிருந்தார். நன்னூற் பாடஞ் சொல்லுதலில அவருக்கு விசேஷ பாண்டித்தியம் இருந்தது. குறிப்பிட்ட பதிப்புக கிடைத்ததும் அதைப் பார்த்துவிட்டுக கிழித்தெறிய வேண்டுமென்று அவர் சொன்னார். பதிப்பித்தவர் தரங்கம்பாடியிலிருந்த ஒருகனவான். அங்கிருந்து அவர் ஒருநாள் கும்பகோணத்துக்கு வந்து தியாகராச செட்டியாரைக கண்டார். "உதாரணச் செய்யுட்களின் சில அடிகளை நீககி ஏன் பதிப்பித்தீர்கள்?" என்று தியாகராச செட்டியார கேட்டார். அவை அதிகமாக இருந்தமையால் அவற்றைத் தாம் நீக்கிப படிப்பவர்களுககு எளிதில் விளங்கும்படி சுருக்கிப்பதிப்பித்து உபகரித்ததாகச சொன்னா. அதனைக்கேட்ட செட்டியார, "'வலித்தல மெலித்தல்' என்னுஞ் சூத்திரவுரையில் உதாரணச செய்யுளான 'தண்டையினினக்கிளி' என்பதில் இரண்டாவதடியாகிய 'பண்டையளவல்ல மாஞெககினளே' என்பது இருந்தாலன்றோ எதுகைநகாகந் தட்டையென்பது தண்டையென்றுயிற்று என்றறியலாம. முதலடியை மட்டும பதிப்பித்தலாற் பயனென்ன? இன்னோரன்ன முறைகளை அறிந்துகொள்ளாத நீங்கள் நன்னூலைப பதிப்பித்திருககவே கூடாது" என்று அறிவுறுத்தி அவர் தம் பிழையை ஒபபுககொண்டு இரங்குமாறு செய்தனா.

குறளைப் பதிப்பித்த ஒருவா, "இனிய வுளவாக வின்னாத கூறல், கனியிருப்பக் காய்கவாந் தற்று" என்பதன் உரையிலுள்ள, 'ஔவையுண்ட நெல்லிக்கனி' என்பதற்குப் பொருததமில்லாத குறிப்பொன்றை யெழுதி அதை அடிக்குறிப்பாகப போட்டுவிட்டாா. சிலா இயற்றியவர் பெயர் காணப்படாத பழைய உரைகளைத் தம்பெயரால் பதிப்பித்துவிடுவர். வேறு சிலர், "சிதம்பரம கருணானந்த ஸ்வாமிகள் இயற்றிய உரை" என்று பதிபபிதது விடுவா.

சிலப்பதிகாரத்தின் மூலத்தைமட்டும் பதிப்பித்த ஒருவர் அதுசேரமான் பெருமாள் நாயனாரால்இயற்றப்பெற்றதாகப் பதிப்பித்துவிட்டார்.

வீரவனப்புராணமென்ற ஒருநூல் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் இயற்றப்பட்டது. அச்சிடப்படாமலிருந்த காலத்தில்

ஒருவர் அதைத் தாம் பாடியதாக வெளியிடலாமென்று தம்முள் நிச்சயித்து அதற்காகப் பணம் பேசிக்கொண்டார். ஆனால் அவ்வெண்ணம் நிறைவேறவில்லை. பிறகு ஒருவர் உள்ளவாறே அதைப்பிரசுரம் செய்து விட்டார்.

ஒரு நூலுக்குப் பல உரைகள் இருக்கின்றன. உரையாசிரியர்கள் இன்னாரென்று விளங்குவதில்லை; ஆகையாற் பதிப்பித்தவர்கள் அவ்வுரைகளைத் தம் பெயராற் பதிப்பித்து விடுவது வழக்கமாக இருந்தது. நூல்களைப் பிரதி செய்வோர் தங்கள் கொள்கைகளுக்கேற்ப மூலத்தையோ உரையையோ திருத்திவிடக் கூடாது. சிலர் அப்படிச் செய்ததுண்டு. பெரியபுராணம், கம்பராமாயணம் முதலிய நூல்களில் வெள்ளியம்பலவாணர் என்றவர் சில பாடல்களை நூதனமாக இயற்றி இடையிடையே செருகிவிட்டார். காலக்கிரமத்தில் அச்செயல் கண்டுபிடிக்கப் பட்டது. சென்னையில் முன்பிருந்த காஞ்சீபுரம் மகாவித்துவான் ஸ்ரீ சபாபதி முதலியார் அவர்கள் சிலவற்றை அச்சிட்டபோது, "இவை வெள்ளி பாடல்கள்" என்று அவற்றை நீக்கி விட்டு அச்சிட்டார்கள்.

சிந்தாமணி உரையில் ஓரிடத்திற் பஞ்சாட்சரம் உப பட்டதாக எழுதியிருந்தது. சிந்தாமணியோ சைனர்களுடைய நூல். இறக்கும் நிலையிலிருந்த ஒரு நாயின் காதில் மந்திரம் உபதேசிக்கப் பட்டதென்பது சந்தர்ப்பம். உரையைப் பிரதிசெய்தவர் உரையாசிரியர் எழுதியிருந்த "பஞ்ச நமஸ்காரம்" என்பதை, "பஞ்சாட்சரம்" என்று பண்ணிவிட்டாரென்று தோற்றியது. அந்தப் பிரதி சைவரொருவருடைய பிரதி. பஞ்ச நமஸ்காரம் என்பது சைனர்களுடைய மந்திரம். தமிழ் படித்த ஓர் அன்னிய தேசத்தார், குறளில், "தக்கார் தகவில ரென்ப தவரவ, ரெச்சத்தாற் காணப் படும்" என்ற பாடலிலுள்ள 'எச்சத்தால்' என்பதை 'மக்களால்' என்று திருத்திவிட்டார். எதுகை சரியாகவிருக்கும்படி தாம் திருத்திவிட்டதாக அவர் ஸ்ரீமான் தியாகராச செட்டியாரிடத்திற் சொல்லி அவமதிப்புற்றுச் சென்றார்.

"ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்"

என்ற குறளிலுள்ள 'அறுதொழிலோர்' என்பதனை, 'அறிதொழிலோர்' என்று தமதிஷ்டப்படி ஒருவர் மாற்றி விட்டார்.

மிலேச்சரென்பதற்கு ஆரியரென்று பொருள்கொண்டு சிலர் பெரிய விஷயங்களை எழுதத் தொடங்கினர். "மிலேச்சரே யநாரியர்க்கா மிலேச்சரும் விதித்த பேரே" என்பது சூடாமணி நிகண்டு.

வடமொழிச்சொற்களிற் சில வேறுபட்டுத் தோன்று தொட்டுத் தமிழில் வழங்குகின்றன. அவற்றைப் பிழையென்று நீக்காது கொள்ளவேண்டும்; திருத்தலாகாது. அவை ஐராபதம், ஆதவன், தவனன், கோகனகம், மானிடன் முதலியன. அவை தமிழில 800-வருஷங்களுக்கு முன்னிருந்தே யமகம், திரிபு, சிலேடைகளில உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அநபாய சோழன் காலத்தில் இயற்றப்பெற்ற தண்டியலங்காரத்தில், 'கோகனகம்' என்ற சொல்லை எழுத்து வருத்தனமென்னுஞ் சொல்லணிக்கு உதாரணமாகக் காட்டியிருக்கிறார். மானுஷன் என்பது தமிழில் மானிடன் என்று உபயோகிக்கப்பட்டு வந்திருக்கிறது. திருவாசகத்தில் நீத்தல் விண்ணப்பத்தில,

"மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்"

என்ற அடியில் மானிடன் என்றே சிலேடையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பலநூற்றாண்டுகட்கு முன்னர் யமகத்தில் சில புலவர்கள் மானிடன் என்ற வார்த்தையை உபயோகித்திருக்கிறார்கள். அதனை எப்படி திருத்தமுடியும்? தமிழிலும் வடிவமாறிச் சொற்கள் வந்திருக்கின்றன. சிலப்பதிகாரத்தில் திருமகள் கூத்துக்குப் பாவைக் கூத்து என்னும் பெயர் காணப்படுகின்றது. பின்னர் பாவை என்பதைப் பரவை என்று நிச்சயித்து அதனை எதுகையிலமைத்துப் பிற்காலத்தார் பாடிவிட்டார்கள். அப்படிப்பாடியவர்கள் பெரியோராகையால் அதை நாம் திருத்த முற்படாமல் அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்முறை. கொடை குடை என்றும், எடை இடை என்றும் செய்யுட்களிற் சிலேடையில அமைக்கப்பட்டுவழங்கி வந்திருக்கின்றன.

தவறான மொழிபெயர்ப்பும் சில விடங்களிற் காணப்படுகின்றன. அவற்றை விலக்கலாகாது. இக்ஷ்வாகு என்றபெயரைக் கருப்புத்தோளான் என்றும், சூர்ப்பநகை என்றதை முறம்பல்லி என்றும் சில கவிகள் பண்டைக்காலத்தில் மொழி பெயர்த்துப் பாடிவிட்டார்கள். இன்னம்பர் என்ற தலப்பெயர் இன்னம்பா என்று வழங்கி வந்திருக்கிறது. தேவாரத்திலும் இன்னம்பா என்றே காணப்படுகின்றது; அதைத் திருத்தலாமா? காராகரு அல்லது காரகில் என்ற ஒரு தலத்தின் பெயர் காருயலென்று மருவி வழங்குகிறது; அத்தலத்தின் விருட்சம் அகில். சொற்பொருளை உள்ளவாறு அறிய வேண்டும். துச்சாதனன் திரௌபதியை இழுத்துக்கொண்டு போன போது செண்டாற் கொண்டுபோனான் என்று ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வார் பாடியிருக்கிறார். இங்குச் செண்டென்பது பூச்செண்டன்று; ஒருவகை ஆயுதம் என்று கொள்ளவேண்டும்; இதனை யறியாமல் அச்சொல்லுக்குப் பொருள் பூச்செண்டென்றே முன்பு எழுதி

வந்தார்கள். கொற்றம் என்ற சொல்லுக்கு வெற்றி என்பதுமட்டுமே பொருளன்று; அரசுரிமை என்றும் பொருள் உண்டு. திருவள்ளுவமாலையில், "ஆயிரத்து முந்நூற்று முப்பத் தருங்குறளும்" என்னும் செய்யுளில் உள்ள, 'வீற்றிருக்கலாம்' என்ற சொல்லிற்கு, 'ஒருசபை நடுவிலே உயர்வாகிய ஆதனத்தில் ஏறியிருக்கலாம்' என்று ஒருவர் எழுதிவிட்டார். கவலையற்றிருக்கலாம் என்பதே அதன் பொருள்; சிந்தாமணி உரையிலும், திருமுருகாற்றுப்படையிலும் வீற்றிருத்தல் என்பதற்குக் கவலையற்றிருத்தல் என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறியிருக்கிறார். மத்தவாரணம் என்ற சொல் இரட்டையருலாவில் வந்திருக்கிறது. அதற்குப் பொருள் யானையென்றார் ஒருவர். பல வருஷங்களுக்கு முன் கும்பகோணம் கவர்ன்மெண்டு கலாசாலையில் ஆசிரியராகவிருந்த மகாமகோபாத்தியாய பெருகவாழ்ந்தான் ஸ்ரீமத் ரங்காசாரியார் அவர்கள் சொல்லத்தான் அதன் உண்மைப் பொருள் எனக்குத் தெரிந்தது; மேற்கட்டிடத்தின் ஒரு பாகத்திற்கு மத்தவாரணம் என்பது பெயராம்.

வாக்கியப் பொருளையும் பிறவற்றையும் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். "சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே" என்பதற்கு மூங்கில்போல நெல் விளையுமென்று பொருள் கூறப்பட்டு வந்தது; அது சரியன்று; மூங்கில் நெல்லையே குறிக்கிறது. உரற்றலைப்பன்றி என்பதற்கு உரல் போன்ற தலையையுடைய பன்றி என்று பொருள் கொள்ளல் மரபு; இப்பொருளிலேயே இலக்கியங்களில் இத்தொடர் காணப்படுகின்றது, பன்றியின் தலைபோலவே உள்ள ஒருவகை உரலுண்டு. இங்ஙனங்கொள்ளாது இதற்கு உரலின் தலையிலுள்ள பன்றியென்று பொருள் கொண்டாருமுளர்.

பாடுதுறை இயற்றிய தத்துவராயர் என்பவர் ஒரு மாத்துவப் பிராமணர் என்று ஒருவர் முன்பு எழுதிவிட்டார், 'ராயர்' என்பதைக் கொண்டு இங்ஙனம் எழுதினார்போலும்.

சயங்கொண்டார், செந்தமிழ்நாடு பாண்டிய நாடன்றென்றும், சோழநாடே என்றும் வாதஞ்செய்து வெற்றி கொண்டமையால் அவர் அப்பெயர் பெற்றார் என்று ஒருவர் கற்பனை செய்துவிட்டார். கங்கை கொண்டான் மண்டபம் என்பதற்குப் பரமசிவன்கட்டிய மண்டபமென்று பொருள் கூறுவாருமுளர், கங்கை கொண்டான் என்ற பல்லவன் கட்டுவித்தமையின், அப்பெயரைப் பெற்றது. பரமேசுர விண்ணகரம் என்பது பரமசிவன் வழிபட்ட விஷ்ணுகோயிலென்பர்; பரமேச்சுரனென்ற பல்லவன் வழிபட்ட விண்ணகரம் என்பதே அதன் பொருள். திரிசூலம் என்று வழங்கும் தலத்தின் சரியான பெயர் திருச்சுரமென்பது. மழபாடி என்பது மழவர்பாடி. சினகரம் என்

பது ஜினக்கிருகம். விண்ணகரம் என்பதற்கு விஷ்ணுக்கிருகம் என்பது பொருள். அரமனை என்பது அரண்மனை. குற்றாலம் என்பது குறுமை, யான ஆலமரம் அன்று; குத்தாலம்என்பது ஒரு விருட்சம். மெலட்டூர் என்று சோழநாட்டில் ஓர் ஊர் இருக்கிறது. அதன்பழைய பெயர் மேட்டூர்; ஸம்ஸ்கிருததத்தில் உன்னதபுரிஎன்று அவ்வூரின் பெயர் சொல்லப்பட்டிருக்கிறது; மேட்டூர் என்பது மோட்டூராயிற்று; மோட்டூர் எழுதுவோருடைய தவறால் மொட்டூராகி அது மொட்டூரெனப் படிக்கப்பெற்றுப் பிறகு மெலட்டூராகிவிட்டது. அத்தாளம் என்பது அற்றாலம; இராத்திரி உணவென்பது இதன் பொருள். முற்றாலமென்பது பகலுணவு; முத்தாளமென்பது சரியன்று. பாண்டவக்குழியென்பது பாண்டக்குழி; இறந்துபோனவர்களைப் பாண்டங்களிலடக்கிப் புதைத்த இடத்தைக் குறிப்பது. பாண்டவர்களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை.

சில ஊர்ப் பொதுப் பெயர்களாகிய மரூஉ மொழிகளின் பொருளைச் சந்தர்ப்பத்திற்கேற்ப அறியவேண்டும். குன்றை என்பது விருத்தாசலம், சேக்கிழார் ஊராகிய குன்றத்தூர், காவிரியின் வடக்கேயுள்ள குன்ற மென்னுமூர் முதலியவற்றைக் குறிக்கும். களந்தை என்பது களக்காடு, பொன் விளைந்த களத்தூர், களப்பாழ், வைகளத்தூர், முதுகளத்தூர் ஆகிய ஊர்களைக் குறிக்கும்.

நூலில் வந்துள்ள சில சொற்களால் ஆசிரியர் இன்ன நாட்டினர் என்பதை உணரக்கூடும்.

தோரணம் என்ற சொல்லிற்குப் பாண்டிநாட்டில் விசேஷப் பொருள் உண்டு. ஓர் ஊரை ஒருவர் வசப்படுத்திக் கொண்டு அங்கே முதலிற் செய்யும் சடங்குகளுக்குத் தோரணம் வைத்தலென்று சொல்வது வழக்கமாக இருக்கிறது. ஸ்ரீ குமரகுருபர ஸ்வாமிகள் காசிக்கலம்பகத்தில், "ஆர்க்கும் படைவே ளரசிருப்பென் றஞ்சா தடிக ளருட்காசி, யூர்க்கும் புதுத்தோ ரணம்வைத்தால்" எனவரும் செய்யுளில் தோரணமென்னும் சொல்லை இப்பொருளில் உபயோகித்திருக்கிறார். காஞ்சிப் புராணத்தில் ஸ்ரீ சிவஞான ஸ்வாமிகளும் இந்தச்சொல்லை இதே பொருளில் உபயோகித் திருக்கிறார். அவர்கள் இருவரும் பாண்டிநாட்டினர். இளந்தலைஎன்பது இளப்பம் அல்லது தாழ்வு என்ற பொருளிற் பாண்டிநாட்டில் வழங்குகிறது. ஒரு புலவர் ஒரு பிரபு விடத்திற் போய் அலைந்து பலநாள் காத்திருந்து பயனொன்றும் பெறாமையின், "இத்தலை வந்து கடைத்தலை காப்ப திளந்தலையே" என்று இந்தப்பொருளில் இளந்தலை என்ற சொல்லை உபயோகித்திருக்கிறார்.

நூலாசிரியர்களுள் இருவர் பெயர் ஒன்றாக இருக்கும். அதனை அறியவேண்டும். சிவப்பிரகாசர், பரஞ்சோதியார் என்பன இதற்கு உதாரணங்கள்.

கால ஆராய்ச்சி செய்வோர் தகுந்த ஆதாரங்களைக் கொண்டு காலத்தை நிர்ணயிக்கவேண்டும். நீதிவெண்பா மிக்க அழகான நூல். அதனை அசசிட்ட ஒருவர் பிற்காலத்தில் அதற்கு ஒரு கௌரவத்தைக் கொடுக்க நினைந்து அதை ஒளவையார இயற்றினா என்று பதிப்பித்து விட்டார். அதை ஆதாரமாகக்கொண்டு ஒருவா அதிலுள்ள பாடல்கள் சில சுலோகங்களின் மொழிபெயாப்பென்று காட்டி ஒளவையாா சில நூற்றாண்டுகளுக்கு முன்புதானிருநதாா என்று சிததாநதம் செய்துவிட்டார்.

ஆசிரியர்களுள் தனிசசெய்யுள் அல்லது நூலுக்கு உரியவரை அறியவேண்டும.

"சோலையுங காத்துநல் லானையுங் காத்துத் துரோபதைதன்
றுகிலையுங் காத்தடைந் தானையுங காத்துத் தடத்தகலி
மானையுங் காத்தனு மானையுங் காத்து மடுவிலவிழும்
ஆனையுங காத்தவ னேயெனைக் காப்ப தரிதல்லவே"

இபபாடலின் இறுதியடியைக் கவித்தலததில் முன்பிருந்த மூத்தைய மூப்பனாரென்பவா கொடுதது மற்ற அடிகளை முடிக்கும்படி சொன்னபோது கவித்தலம வேலையரென்னும் வீரசைவ வித்துவான் பாடியது இச்செய்யுள். அநத ஊர்ப பெருமாளுக்குக கசேநதிர வரத ரென்றுபெயா. இது கவி வீரராகவ முதலியார் பெயரால் இககாலத்தில வழங்குகிறது.

"பாளைமணங் கமழுகின்ற" என்ற தொடககததுப பாடல் காளமேகத்தின் பெயரால் வழங்குகிறது; இயற்றியவர் ஆண்டான்கவிராயர்.

சொல்லின் சரியான வடிவம தெரியாமலே சில கவிகள் பிழைபட்ட சொற்களைப பாட்டில அமைததிருப்பா. உதாரணம்: "செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே" என்பதில் செத்த குரங் கென்பது சாமநதிப்பூவை உணாததுகிறது. அப்பூவின் சரியானபெயர்

சில மரூஉவின் உண்மை வடிவததை அறியவேண்டும. மன்னார் சாமி கோவில்களெல்லாம புததாகோயில்கள் என்றும சைவரும வைஷ்ணவரும் கெடுததது விட்டனர் என்றும் ஓர் ஆராயசசியாளா கோபித்துக்கொண்டார். மன்னார்சாமி என்ற சொல் தருமாாசனைக் குறிக்குமாம. புத்தனுக்குத் தருமாாசன் என்று ஒரு பெயருண்மையால் மன் னார்சாமிகோயில் புத்தன்கோயில் என்று அந்த ஆராய்ச்சியாளர் வாதித்

தார். மன்-ராஜா; ஆர்-தருமமென்பது அவரெண்ணம். அறத்திற்கும் ஆர்க்கும் வேறுபாடுண்டென்று அவர் தெரிந்துகொள்ளவில்லை. தம்பாச்சியா பிள்ளை என்ற பெயர் தருமராஜ பிள்ளை என்பதன் மரூஉ.

யாப்பருங்கலக்காரிகை யுரையைப் பல வருடங்களுக்கு முன்னரே பதிப்பித்த ஒருவர், "பொருளோ டடிமுத னிற்பது கூன்" என்ற கலித்துறையின் உரையில் செந்தமிழ் நாடு இன்னதென்று கூறுமிடத்து, "மன்ற வாணன் மலர்திரு வருளால்" என்னும் அகவலொன்றைப் பாடுவித்து அதனிடையிலே புகுத்திப் பதிப்பித்துக் கையில் எடுத்துக்கொண்டு துறைசை, மேலகரம் சுப்பிரமணிய தேசிகரவர்களிடம் வந்து புத்தகத்தைக்காட்டி, "இப்பாடல் ஒருபழைய ஏட்டுப் பிரதியிலிருந்தது; அதை நான்சேர்த்துப் பதிப்பித்திருக்கிறேன். மன்றவாணனென்பதனாற் சிவபெருமானையும் சைவ மாதவருமென்றதனாற் சைவ மடங்களையும் இச்செய்யுள் தெரிவிக்கின்றது" என்று சொல்லிப் பொருள்பெற முயன்றார். அந்நூல் உரையாசிரியர் சைனராதலால் மன்றவாணனையும் சைவ மாதவரையும் எடுத்துப் பாராட்ட இடமில்லையென்பதை அவரறிந்திலர் போலும். சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் ஏட்டுப்பிரதியில் அந்த நூலைப் பலமுறை பாடஞ் சொன்னவர்களானமையால் அவர் சொல்லை நம்பாமல் ஏதோ சிறிது உதவி செய்தனுப்பிவிட்டுப் பின்னர் உடனிருந்தவர்களிடத்தில் இக்காலத்தார் எதையுஞ் செய்யத் துணிவாரென்று சொல்லி வருத்தமடைந்தார்கள். இங்ஙனம் அவர்கள் கண்டுபிடித்த பிழைகள் பல உண்டு.

ஆராய்ச்சி செய்பவர்கள் கவனிக்கவேண்டிய பலவற்றுள் இதுவும் இன்றியமையாத.

காரகாத்தார் என்ற பெயர் காரைக்காட்டார் என்பதன் மரூஉ என்பர். காரைக்காடு என்பது காஞ்சீபுரத்திற்கருகிலுள்ளது; திருவெத்திக் காரைக்காடு என்று இக்காலத்து வழங்கப்படுகின்றது; அது மிகப்பழமையானதொரு சிவஸ்தலம். திருவிளையாடலில், தளைப்பட்ட மேகத்தைப் பிணைகொடுத்து விடுவித்துக் காத்தமையால் அவர்களுக்குக் கார் காத்தாரென்ற பெயர்வந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. அக்கருத்து முதனூலிலில்லை. விநோத ரஸ மஞ்சரியில் பொருத்தமிராத கதைகள் பல சொல்லப்பட்டிருக்கின்றன. கம்பரும் ஔவையும் வெவ்வேறு காலத்திலிருந்தவர்கள். அவர்கள் ஒரே காலத்தவர்களென்று சிலர் சொல்வது பொருந்தாது. சங்கத்தமிழ் நன்றாயிருந்ததென்றும் பிற்காலத்தில் வடமொழிச் சம்பந்தத்தால் தமிழ் கெட்டுப்போய்விட்டதென்றும்

சிலர் சொல்வர். பிற்காலத்தில் வேறு பாஷைகளின் சம்பந்தம்பெற்றுத் தமிழ் அதிக இனிமை பெற்றிருக்கிறதென்பது பெரியோர் கொள்கை.

## பின்னுரை.

முதலில், அரியிலூர் ஸ்ரீ சடகோப ஐயங்காரவர்கள் முதலியோரிடத்தும், பின்பு திரிசிரபுரம் மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களிடத்தும் நான் படித்தேன். அப்பால், திருவாவடுதுறை ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் பாடம் சொன்னார்கள். அந்நாள் முதல் நான் சருகரித்துக் கொண்டிருந்தேன்; குளிர்காய நேரமில்லை. நான் அறிந்து கொண்ட விஷயங்களை இங்கு எடுத்துச் சொல்லும்படி அவகாசம் கொடுத்த ஸாவகலா சங்கத்தாருக்கும் தமிழாராய்ச்சி விஷயத்தில் வெகு காலமாகச் சகாயம் செய்துவரும் சேது மன்னர்களாகிய மாட்சிமை பொருந்திய **மஹாராஜ ராஜ ஸ்ரீ. பா. இராஜ ராஜேசுவர சேதுபதி மஹாராஜா அவர்களுக்கும்**, வேண்டியபொழுது எனக்கு ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்துப் பேருதவி புரிந்து வந்திருக்கும் திருவாவடுதுறை ஆதீனம் முதலிய ஆதீனங்களின் தலைவர்களுக்கும் பின்னும் உள்ள பற்பல உபகாரிகளுக்கும் என் மனப்பூர்வமான நன்றியைச் செலுத்துகின்றேன்.

இப்போது கும்பகோணத்தில் ஆசாரிய மூர்த்திகளாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளவர்கள் தேவார திருவாசகங்களில் ஈடுபட்டிருப்பதன்றி மற்றவர்களைப் போலவே தமிழ்ப்புலவர்களையும் ஆதரித்து வருவது யாவராலும் கொண்டாடத் தக்கது.

1880-ஆம் வருஷத்தில் கும்பகோணத்தில் டிஸ்டிரிகட் முன்ஸீபாக இருந்தவரும் கல்வியறிவொழுக்கங்களால் சிறந்தவருமான சேலம் **ஸ்ரீமான், இராமசாமி முதலியாரவர்கள்**, கம்ப ராமாயண முதலிய பிற்காலத்து நூல்களைப்படித்து ஆராய்ச்சி செய்து இன்புறுவதைக் காட்டிலும் வழங்காமலே யிருக்கும் சீவக சிந்தாமணி முதலிய காப்பியங்களையும் சங்க நூல்களையும் படித்து ஆராய்ச்சி செய்தலும் கூடுமானால் அவற்றை அச்சிற் பதிப்பித்து வெளிப்படுத்தலும் உத்தமமென்று கூறித் தம்பாலிருந்த சீவகசிந்தாமணி முதலியவற்றின் கையெழுத்துப் பிரதிகளைக் கொடுத்து அடிக்கடி ஊக்கமளித்துவந்தார்கள். அவர்களையும், தம்முடைய மரணபரியந்தம் அவர்களைப்போலவே என்னை ஆதரித்துப்பாராட்டி ஊக்கமளித்து வந்த **ஸ்ரீமான், பூண்டி. அரங்கநாத முதலியாரவர்களையும்** என்னுடைய உள்ளம் ஒருபொழுதும் மறவாதென்பதை இங்கே தெரிவியாமலிருக்க முடியவில்லை.

ஆங்கிலம் தெரியாத பண்டிதர்களுக்கு முன்னாளில் இந்தச் சர்வகலாசாலையில் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லை. அக்குறையை

நீக்கிய மகா புருஷர்கள் ஸ்ரீமான், வி. கிருஷ்ணசாமி ஐயரவர்கள்; ஸ்ரீமான், ஸர். பி. எஸ். சிவசுவாமி ஐயரவர்கள், மிஸ்டர், ஜே. எச். ஸ்டோன் முதலியவர்களே.

நீண்டகாலமாகப் பண்டிதர்களுடைய சம்பளம் மிகவுங் குறைவாக இருந்த விஷயத்தைச் சட்ட சபையில் எடுத்துக்கூறி அதனைக் கவர்ன்மெண்டார் கவனிக்கும்படி செய்த ஸ்ரீமான் திவான் பகதூர், பி. கேசவப் பிள்ளையவர்களுக்கும் சட்ட சபையில் அவர்களை ஆதரித்துப்பேசிய ஸ்ரீமான், எல். ஏ. கோவிந்தராகவ ஐயரவர்களுக்கும் பண்டிதர்களெல்லோரும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

நூலாராய்ச்சி சம்பந்தமாக முக்கியமாக நான் சொல்லவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதைமட்டும் சொல்லிவிட்டு உபந்யாசத்தை நிறுத்திக் கொள்கிறேன்.

சென்ற ஐம்பது வருஷங்களுக்கு மேலாக நூலாராய்ச்சி செய்வதிலேயே பொழுது போகக்கிக்கொண்டிருந்த எனக்குள்ள பொருள் முட்டுப்பாட்டையறிந்து மதுரை அட்வோகேட் ஸ்ரீமான், டி. வி. ஸ்ரீனிவாசையங்காரவர்கள் பெருமுயற்சியெடுத்துக்கொண்டு பல கனவான்களுக்கும் தெரிவித்து 1925-ஆம் வருஷத்தில் அக்குறையை நீக்கி நான் சிறிதும் கவலையுறாவண்ணம் செய்வித்தார்கள். இவ்வரியபேருதவி ஒரு நிமிஷமேனும் மறக்கற்பால தன்றென்பதை இப்போதும் தெரி

"மூவாத் தமிழ்பயந்த முன்னோன் முனிவாழி
ஆவாழி வாழி யருமறையோர்—காவிரிநாட்
டண்ண லநபாயன் வாழி யவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை."






